# ஆயர் வாழ்வியல்
# (அற்றைநாள் நோக்கும் இற்றைநாள் போக்கும்)

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**சே.கலைஅரசி**

(பதிவு எண்: 1286/2015-2016)

**நெறியாளர்**

**முனைவர் மா.சிதம்பரம்**

தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி – 3.





## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி மற்றும் தன்னாட்சித் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா

நவம்பர் - 2020

முனைவர் **மா.சிதம்பரம்,**எம்.ஏ.,பி.எட்.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,

இணைப்பேராசிரியர்,

தமிழ்த்துறை உயராய்வு மையம்,

அழகப்பா அரசு கலைக்கல்லூரி,

காரைக்குடி - 630 003.

நாள்:

# நெறியாளர் சான்றிதழ்

**"ஆயர் வாழ்வியல் (அற்றைநாள் நோக்கும் இற்றைநாள் போக்கும்)"** என்னும் தலைப்பில் சே.கலைஅரசி தமிழ் முழுநேர முனைவர் (பி.எச்.டி.,) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு அழகப்பா அரசு கலைக்கல்லூரி தமிழ் உயராய்வு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இதற்கு முன் இந்த ஆய்வின் மீது வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**தமிழ்த்துறைத்தலைவர்** **(மா.சிதம்பரம்)**

**நெறியாளர்**

**முதல்வர்**

**சே.கலைஅரசி,**

முனைவர்பட்ட ஆய்வாளர்,

பதிவு எண்.1286/2015-16,

தமிழ்த்துறை உயராய்வு மையம்,

அழகப்பா அரசு கலைக்கல்லூரி,

காரைக்குடி - 630 003.

நாள்:

# ஆய்வாளர் உறுதிமொழி

**“ஆயர் வாழ்வியல் (அற்றைநாள் நோக்கும் இற்றைநாள் போக்கும்)”** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இந்த ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் இவ்ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**(சே.கலைஅரசி)**

**ஆய்வாளர்**

உறுதிக் கையொப்பம்

முனைவர் **மா.சிதம்பரம்,**எம்.ஏ.,பி.எட்.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,

இணைப்பேராசிரியர்,

தமிழ்த்துறை உயராய்வு மையம்,

அழகப்பா அரசு கலைக்கல்லூரி,

காரைக்குடி - 630 003.

# நன்றியுரை

**“ஆயர் வாழ்வியல் (அற்றைநாள் நோக்கும் இற்றைநாள் போக்கும்)”** என்னும் தலைப்பில் முழுநேர முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், **துணைவேந்தர், பதிவாளர், புலமுதன்மையர் ஆராய்ச்சிபுலம்** அவர்களுக்கும் மற்றும் நிர்வாகத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

அழகப்பா அரசு கலைக்கல்லூரி, **முதல்வர்** அவர்களுக்கும், ஆய்வின் பயணத்தைக் கேட்டு விரைவில் முடிக்கத் தகுந்த வழிகாட்டலை நல்கிய தமிழ் உயராய்வு மையத்தின் துறைத்தலைவர் பேராசிரியர் திரு.**ம.துரை** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வுப் பயணத்தின் எல்லையைக் கடக்கப் பெரிதும் உறுதுணையாக இருந்த எனது நெறியாளர் முனைவர் **மா.சிதம்பரம்** அவர்களுக்கு என் உள்ளம் கனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். நேரில் மட்டுமின்றி தொலைபேசியிலும் நேரம், காலம் பார்க்காமல் ஆய்வு தொடர்பான ஐயங்களுக்குத் தெளிவை ஏற்படுத்திய எனது நெறியாளரின் உதவியை நான் என்றும் மனதில் வைத்துப் போற்றுவேன். முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள ஆர்வத்தைத் தூண்டிய எனது நெறியாளர் மட்டுமின்றி அவரது துணைவியார் திருமதி.சு.மகேஸ்வரி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். நெறியாளரின் இல்லத்திற்குச் செல்லும் போதெல்லாம் என்னுடைய குடும்ப நலனையும் கருத்தில் கொண்டு வழிகாட்டிய நெறியாளரின் துணைவியாருக்கும் நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வினைச் செம்மையுறச் செய்வதற்குப் பல வகையிலும் உதவிய தமிழ் உயராய்வு மையம், அழகப்பா அரசு கலைக்கல்லூரியின் அனைத்துப் பேராசிரியர்களுக்கும் எனது நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இறந்தும் என் மனதில் இறவாது நிலைத்து நிற்கும் எனது தாய் சே.நாச்சம்மாள் அவர்களுக்கும், அன்பிற்குரிய தந்தை வெ.சேவுகரெத்தினம் அவர்களுக்கும், உடன்பிறந்த சகோதர சகோதரிகளான ஜெயமணி-முருகன், ராஜா-

பிரமிளா, கண்ணன்-விஜிப்பிரியா, பஞ்சு-செந்தில்குமார், தனம்-திருப்பதி அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வின் ஆரம்ப காலத்தில் ஆய்வு மேற்கொள்ளவும், எழுதவும் ஊக்கமளித்த என் வாழ்க்கைத் துணைவர் ரெ.சரவணன் அவர்களுக்கும், களஆய்விற்குச் செல்லும் போதெல்லாம் வழித்துணையாய் வந்து உதவிய என் தலைமகன் எஸ்.கே.கலைவாணன் அவர்களுக்கும், ஆய்வுக் குறிப்புகளைத் தொகுத்துக் கொண்டிருக்கும் போதெல்லாம் எழுதுகோலைக் கைப்பற்றியும் ஆய்வுக் குறிப்புகளைச் சேதப்படுத்தியும் சேட்டைகள் புரிந்த இளைய மகன் எஸ்.கே.தமிழ்வாணன் அவர்களுக்கும் எனது நன்றியைக்கூறக் கடமைப்பட்டுள்ளேன். என் குழந்தைகளுக்கு தாயுமானவர்களாய் மாறிய தம்பிகள் பெ.கல்யாணமோகன், வீர.சின்னையா, நா.இளங்கோ, வீர.சோலைராஜ், நா.ரகுபதி, முத்துக்குமார், கலைமோகன், விஷ்ணு அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

முனைவர் பட்டம் பெறவேண்டும் என்ற எண்ணத்தை கல்வியியல் கல்லூரியில் பயின்ற காலத்திலேயே (2009-2010) எனக்கு விதைத்த, நயினார்புரம் தமிழ்நாடு கல்வியியல் கல்லூரி முதல்வர் க.குணசேகரன் ஐயா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வில் ஏற்பட்ட குழப்பங்களை கலந்துரையாடுவதில் உதவிய அழகப்பா கலைக்கல்லூரி தமிழ் உயராய்வு மையம், மற்றும் அழகப்பா பல்கலைக்கழகத்தில் ஆய்வினை மேற்கொண்டிருக்கும் முனைவர் பட்ட ஆய்வாளர் நண்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வு தொடர்பான நூல்களை நல்கிய மதுரை யாதவா கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் மற்றும் பேராசிரியர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

களஆய்வு தொடர்பான குறிப்புகளை வழங்கிய எனது மாமியார் ரெ.கல்யாணி ரெங்கசாமி அவர்களுக்கும் நாத்தனார் பா.உமாதேவி பாண்டி அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். கல்லுக்கட்டி இடையர் தொடர்பான

புத்தகத்தை வழங்கிப் பேருதவி புரிந்த ரா.ரெங்கநாதன் (எ) பிரபு யாதவ் அவர்களுக்கும் நேர்காணலில் சரியான விளக்கத்தைக் கொடுத்த கலி.வெள்ளைச்சாமி என்ற துரை யாதவ் முதலான அனைத்து காரைக்குடி வட்டார ஆயரின மக்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

குடும்ப உறுப்பினர்களைப்போன்று அன்பும், கவனமும் செலுத்தும் அய்யாக்கண்ணு அரசு மேல்நிலைப்பள்ளி, கீழாநிலைக்கோட்டை தலைமையாசிரியர் மற்றும் ஆசிரிய நண்பர்கள், அலுவலக பணியாளர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கிய அழகப்பா பல்கலைக்கழக நூலகத்திற்கும், அழகப்பா அரசு கலைக்கல்லூரிப் பொதுநூலகத்திற்கும், தமிழ்த்துறை நூலகத்திற்கும், திருமயம், ஊனையூர் பொதுநூலகத்திற்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்ஆய்வேடு செம்மையாகவும், நேர்த்தியாகவும் அமைய கணினியில் அச்சாக்கம் செய்த கணினி நிறுவனத்தார் அன்பிற்குரிய சகோதரி சாந்தி பாண்டியன் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

**நன்றியுடன்...**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| களவு. | - | களவியல் |
| கற்பு. | - | கற்பியல் |
| கிளவி. | - | கிளவியாக்கம் |
| குறிஞ்சி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| சூ. | - | சூத்திரம் |
| செய்யு. | - | செய்யுளியல் |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நூ. | - | நூற்பா |
| நெடுநல் | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதிற்று. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பா. | - | பாடல் |
| புறப். | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| புறம். | - | புறநானூறு |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணி. | - | மணிமேகலை |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல்லைப்பா. | - | முல்லைப்பாட்டு |
| மெய்ப். | - | மெய்ப்பாட்டியல் |
| மேலது. | - | மேலே கூறப்பட்டது |
| வ.எண். | - | வரிசை எண் |

# பொருளடக்கம்


| வ.எண் | இயல் | தலைப்பு | பக்க எண். |
|---|---|---|---|
| 1. | | முன்னுரை | 1-6 |
| 2. | ஒன்று | பழந்தமிழர் நிலப்பகுப்பும் வாழ்வியலும் | 7-76 |
| 3. | இரண்டு | அற்றைநாள் ஆயர்களின் அகவாழ்வியல் | 77-134 |
| 4. | மூன்று | அற்றைநாள் ஆயர்களின் புறவாழ்வியல் | 135-185 |
| 5. | நான்கு | இற்றைநாள் ஆயர்களின் அக-புற வாழ்வியல் | 186-227 |
| 6. | | முடிவுரை | 228-234 |
| 7. | | துணைநூற்பட்டியல் | 235-258 |
| 8. | | பின்னிணைப்புகள் | |

# முன்னுரை

# ஆயர் வாழ்வியல்

# (அற்றைநாள் நோக்கும் இற்றைநாள் போக்கும்)

## அறிமுகம்:

'மாயோன் மேய காடுறை உலகமும்' எனக் குறிக்கப்பெறும் திருமாலின் காத்தல் தொழிலைக் கொண்ட காடும் காடு சார்ந்த பகுதியுமான முல்லை நிலத்தில் வாழ்ந்தவர்கள் ஆயர்கள் எனப்பட்டனர். ஐந்திணைச் சமுதாயத்தை வரையறுக்கும் தொல்காப்பியர் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை எனப் பகுத்து அந்தந்த நிலப்பரப்பில் வாழ்ந்த மக்களின் வாழ்வியலுக்கு இலக்கணம் வகுத்துள்ளார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய சங்க இலக்கியமானது பழந்தமிழ் மக்களின் வாழ்வியல் முறைகளை எடுத்துக்காட்டும் காலக்கண்ணாடியாகத் திகழ்கின்றது. அத்தகைய நீண்ட பாரம்பரியம் கொண்ட அற்றைநாள் முல்லை நிலப்பரப்பில் வாழ்ந்த ஆயர்களின் வாழ்வியலானது எவ்விதம் சிறப்புற்றிருந்தது என்பதையும், இற்றைநாள் அந்நிலத்தின் கண்ணோ அல்லது நிலம் பெயர்ந்தோ வாழும் ஆயர்குல மக்களின் வாழ்வியலானது எத்தகைய மாற்றத்தினைப் பெற்றுள்ளது என்பதையும் பகுத்தும் தொகுத்தும் ஆராய்வதாய் இவ்ஆய்வு அமைகின்றது.

## ஆய்வுத் தலைப்பு:

சங்க காலத்தில் வாழ்ந்த ஆயர்களின் வாழ்வியல் நிகழ்வுகளையும், இன்றைய காலக்கட்டத்தில் வாழ்கின்ற ஆயர்களின் வாழ்வியல் நிகழ்வுகளையும் ஆய்வு செய்தலால் **"ஆயர் வாழ்வியல் (அற்றைநாள் நோக்கும் இற்றைநாள் போக்கும்)"** என்பது ஆய்வுத் தலைப்பாய் அமைகின்றது.

## ஆய்வு நோக்கம்:

சங்க காலத்தில் வாழ்ந்த ஆயர்களின் அகம், புறம் சார்ந்த வாழ்வியல் கூறுகளில் இருந்து இன்றைய இனவாரிச் சமூகத்தில் வாழ்கின்ற ஆயர்களின் அகம், புறம் சார்ந்த வாழ்வியல் கூறுகள் எத்தகைய ஏற்றத்தையும், மாற்றத்தையும், நலிவையும் பெற்றுள்ளன என்பதை ஆராய்வதே இவ்ஆய்வின் நோக்கம் ஆகும்.

**ஆய்வுக் கருதுகோள்:**

அற்றைநாள் ஆயர்களின் பண்பாடு, கலாச்சாரம், பழக்க வழக்கம் உள்ளிட்ட மரபுக் குறியீடுகளைப் பதிவுசெய்வதுடன், இற்றைநாள் ஆயர்களின் வாழ்வியலில் அவற்றுள்சில சிறப்புற்றும், சில மறைந்தும் உள்ளன என்பதை வெளிப்படுத்துவதும் இவ்ஆய்வின் கருதுகோளாக அமைகின்றது.

**ஆய்வு முன்னோடிகள்:**

பழந்தமிழ் நிலப்பரப்பில் வாழ்ந்த மக்களின் வாழ்வியல் பற்றியும், இன்றைய சமுதாயத்தில் வாழும் குறிப்பிட்ட சமூகத்தினரின் வாழ்வியல் பற்றியும் பல ஆய்வுகள் வெளிவந்துள்ளன. பக்தவத்சல பாரதியின் 'பண்பாட்டு மானிடவியல்', எட்கர் தர்ஸ்டனின் 'தென்னிந்திய குலங்களும் குடிகளும்', க.ப.அறவாணனின் 'பழங்குடி மக்களைப் பற்றிய ஆய்வுகள்' அ.முத்துச்சாமியின் சங்க இலக்கியத்தில் ஆயர் போன்றவை இவ்ஆய்வுக் களத்தின் கண் அமைந்த முன்னோடி ஆய்வுகள் ஆகும்.

**ஆய்வு எல்லை:**

ஐந்திணைப் பாகுபாடுகளை எடுத்தியம்பும் தொல்காப்பியமும், முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர்களின் வாழ்வியல் நிகழ்வுகள் பெரிதும் இடம்பெறும் சங்க இலக்கியப் பாடல்களும், சிவகங்கை மாவட்டத்தின்கண் அமைந்துள்ள காரைக்குடி வட்டாரத்தில் வாழும் ஆயர்களின் வாழ்வியல் பற்றி களஆய்வின் வழி பெறப்பட்ட தரவுகளும், கல்லுக்கட்டிடையர் கோபாலர்களுக்கு கரைகள் குறித்து ஸ்ரீரெங்கம் கோவஸ்திரி ஸ்ரீஆயனார் ஸ்வாமிகளால் தீர்மானிக்கப்பெற்ற தீர்ப்பு நூலும் இவ்ஆய்வின் எல்லைகளாக அமைகின்றன.

**ஆய்வின் பயன்பாடு:**

சங்ககாலத்து ஆயர்களின் வாழ்வியல் முறைகளை ஆராய்வதுடன் இக்கால ஆயர்களின் பண்பாடு, கலாச்சாரம் முதலியவற்றோடு உற்றுநோக்கப்படுவதால் எதிர்காலச் சந்ததியினர் பழந்தமிழரின் தொன்மையினைப் பற்றி அறிய உதவும். முல்லை நிலத்தைப் போன்று ஏனைய நிலங்களில் வாழ்ந்த பழந்தமிழரின் வாழ்வியலோடு இன்றைய மக்களின் வாழ்வியலை ஒப்பிட்டு ஆய்வுகள் தோன்ற இவ்ஆய்வு முன்னோடியாய் அமையும்.

**ஆய்வு மூலங்கள்:**

பழந்தமிழ் மக்களின் வாழ்வியலுக்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியம், வாழ்க்கை முறைகளை விளக்கும் சங்க இலக்கியம், இற்றைநாள் ஆயர்களின் வாழ்க்கைப் போக்கை அறிந்து கொள்ளப் பயன்பட்ட களஆய்வுத் தரவுகளும், கல்லுக்கட்டிடையர் கோபாலர்களுக்கு கரைகள் குறித்து ஸ்ரீரெங்கம் கோவஸ்திரி ஸ்ரீஆயனார் ஸ்வாமிகளால் தீர்மானிக்கப்பெற்ற தீர்ப்பு நூலும் இவ்ஆய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாகின்றன. இவ்ஆய்வு தொடர்பான நூல்கள், கட்டுரைகள், இதழ்கள், ஆய்வேடுகள் ஆகியவை இவ்ஆய்விற்குத் துணைமைச் சான்றாதாரங்களாகின்றன.

**ஆய்வு அணுகுமுறைகள்:**

அற்றைநாள் ஆயர்களின் வாழ்க்கை முறைகளை ஆராய்வதில் வரலாற்றியல் அணுகுமுறையும் (Historical Approach), இற்றைநாள் ஆயர்களின் வாழ்வியலை ஆராய்ந்து இடைப்பட்டகாலத் தொடர்புகளை ஒப்புநோக்கும் நிலையில் ஒப்பியல் அணுகுமுறையும் (Comparative Approach), ஆயர்களின் வாழ்வில் ஏற்பட்ட வளர்ச்சி மாற்றத்தைப் பகுத்து ஆராய்வதில் பகுப்பாய்வு அணுகுமுறையும் (Analytical Approach), குறிப்பிட்ட சமூகத்தின் இயங்கு நிலைகளை வெளிப்படுத்தும் முகமாகச் சமூகவியல் அணுகுமுறையும் (Socialogical Approach), ஆயர்களின் பண்பாடு, கலாச்சாரக்கூறுகளை ஆராய்வதில் மானிடவியல் அணுகுமுறையும் (Anthropological Approach), வாழ்வியல் நிகழ்வுகளை ஆராய்ந்து விளக்குமுகமாக விளக்கவியல் அணுகுமுறையும் (Descriptive Approach) இவ்ஆய்விற்குரிய அணுகுமுறைகளாகக் கையாளப்பட்டுள்ளன.

**ஆய்வுப் பகுப்பு:**

ஆயர் வாழ்வியல் (அற்றைநாள் நோக்கும் இற்றைநாள் போக்கும்) என்னும் இவ்ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டு அமைகின்றது. அவை;

1. பழந்தமிழர் நிலப்பகுப்பும் வாழ்வியலும்,
2. அற்றைநாள் ஆயர்களின் அகவாழ்வியல்,
3. அற்றைநாள் ஆயர்களின் புறவாழ்வியல்,
4. இற்றைநாள் ஆயர்களின் அக-புற வாழ்வியல்

என்பனவாகும்.

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வுக் கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லை, ஆய்வின் பயன்பாடு, ஆய்வு மூலங்கள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப்பகுப்பு முதலியன இடம்பெறுகின்றன.

**'பழந்தமிழர் நிலப்பகுப்பும் வாழ்வியலும்'** என்னும் முதலாம் இயல் தொல்காப்பியரின் அகத்திணைக் கூறுகளை விளக்குவதாய் அமைகின்றது. அகத்திணைகளிலும் அன்பின் ஐந்திணைகளான முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை ஆகியவற்றின் முதல், கரு, உரிப்பொருள் எனும் அகத்திணைக் கூறுகளை ஆராய்ந்து விளக்குகின்றது. முதற்பொருளில் நிலமும் பொழுதும் ஒவ்வொரு திணை மக்களின் வாழ்வியலுக்கு எவ்விதம் அடித்தளமாகின்றது என்பது ஆராய்ந்து விளக்கப்படுகின்றது. தெய்வம், மக்கள் முதலான கருப்பொருள்கள் அந்தந்த நிலத்திற்குரிய மக்களின் வாழ்வியலுடன் எவ்விதம் பின்னிப்பிணைந்துள்ளது என்பதையும், திணைக்குரிய உரிப்பொருள் சிறக்க முதற்பொருளும் கருப்பொருளும் எவ்விதம் துணைபுரிந்தன என்பதையும் விளக்குகின்றது. திணைச்சமுதாயமாக வாழ்ந்த பழந்தமிழரின் வாழ்வியலானது திணைகளுக்கிடையே பிரிவினையை உண்டாக்காது ஒன்றுபட்ட வளர்ச்சியையே மையமாகக் கொண்டுள்ளதையும் விளக்கி நிற்கின்றது.

**'அற்றைநாள் ஆயர்களின் அகவாழ்வியல்'** என்பது இரண்டாம் இயல். இதன்கண் சங்க இலக்கியமும் தொல்காப்பியமும் விளக்கும் 'ஆயர்' இனத்தினரை அடையாளப்படுத்துதலும், ஆயரின் வகையை இனங்காணுதலும் அமைகின்றது. அற்றைநாள் ஆயர்கள் பராமரித்து வந்த கால்நடைகளைப் பொறுத்து மாட்டினத்து ஆயர், ஆட்டினத்து ஆயர், எருதினத்து ஆயர் எனப்பகுக்கப்படுவதையும் விளக்குகின்றது. அன்றைய காலக்கட்டத்தில் வகைப்படுத்தப்பட்ட ஆயர்களிடையே

நிலவிய ஏற்றத் தாழ்வுகளையும், சமூகப்பார்வையையும் விளக்குகின்றது. அகவாழ்வியலானது களவு - கற்பு எனும் இருவித பகுப்புகளைக் கொண்டும் ஆராய்ந்து விளக்கப்படுகின்றது. களவின் வகைகளான இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியற்கூட்டம் உள்ளிட்ட நிகழ்வுகளில் ஆயர் ஈடுபட்டமையையும், கற்பில் திருமண ஏற்பாட்டிற்கு முதன்மையாக விளங்கும் ஏறுதழுவுதல் நடைபெற்ற விதத்தையும் விளக்குவதாய் அமைகின்றது. களவுக் காலத்தைப் போன்றே கற்பு வாழ்க்கையில் எற்படும் பிரிவுகளையும் விளக்கி நிற்கின்றது. திருமணமான ஆயர்குலத் தலைவியின் இல்லற நெறியில் விருந்தோம்பலும் ஆற்றியிருத்தல் ஒழுக்கமும் விளக்கப்படுகின்றன.

**'அற்றைநாள் ஆயர்களின் புறவாழ்வியல்'** எனும் மூன்றாம் இயலில் சங்ககால ஆயர்களின் போர் குறித்த அறிவும், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகளும் இடம்பெறுகின்றன. முல்லைப்பாட்டு காட்டும் போர்க்கள அமைப்பையும், படைவலிமையையும், போர்க்களத்தில் இடம்பெற்றோரையும் ஆராய்ந்து விளக்குகின்றது. ஆயர்களின் பழக்க வழக்கங்களில் அவர்கள் மேற்கொண்ட ஒப்பனைகளும் நம்பிக்கைகளில் வழிபாடுகள் நிமித்தம் (சகுனம்) பார்த்தல் முதலியவையும் இடம்பெறும். அற்றைநாள் ஆயர்கள் மேற்கொண்ட பல தெய்வ வழிபாடு, இல்லுறை வழிபாடு, எருமைக்கொம்பு வழிபாடு போன்றவை ஆராய்ந்து விளக்கப்படுகின்றன. பொழுதுபோக்கு நிகழ்வுகளில் கலை சார்ந்த கூறுகளும் விளையாட்டுகளும் விளக்கப்படுகின்றன.

**'இற்றைநாள் ஆயர்களின் அக-புற வாழ்வியல்'** என்பது நான்காம் இயல் ஆகும். இவ்இயலில் காரைக்குடி வட்டாரத்தில் வாழும் ஆயர்களின் அக-புற வாழ்வியல் கூறுகள் ஆராய்ந்து விளக்கப்படுகின்றன. காரைக்குடி வட்டாரத்தில் வாழும் ஆயர்களிடம் நிலவும் இடையர், கோனார், யாதவ், ஆயர் எனும் சாதியப் பெயர்கள் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன. இன்றைய ஆயர்கள் மேற்கொள்ளும் தொழிலின் அடிப்படையில் வகைப்படுத்தப்படவில்லை என்பதையும், மாறாக பின்பற்றும் பழக்க வழக்கங்களால் வகைப்படுத்தப்படுகின்றனர் என்பதும் விளக்கப்படுகின்றது. காரைக்குடி

வட்டாரத்தில் காணப்படும் ஆயர்கள் கல்லுக்கட்டி இடையர் எனப்படுவதன் பெயர்க் காரணத்தையும், அவ்வகையினரின் உட்பிரிவுகளான 14 கரைகளையும் விளக்குவதாயும் இவ்வியல் அமைகின்றது.

திருமணமுறைகளினால் பெயர்பெறும் இவ்வகை ஆயரின் திருமணச் சடங்கு முறைகளையும், விருந்தோம்பும் பண்பையும் விளக்குதல், வழிபாடுகள், நம்பிக்கைகள், பொழுது போக்குகள் உள்ளிட்ட புறவாழ்வியல் கூறுகளையும் ஆராய்ந்து விளக்குவதாயும் அமைகின்றது.

ஒவ்வொரு இயலின் இறுதியிலும் அவ்இயலின் கருத்துகள் தொகுக்கப்பட்டுத் தொகுப்புரையாக இடம்பெறுகின்றது. ஆய்வில் பெறப்படும் கருத்துச் சாரங்கள் முறைப்படுத்தப்பட்டு ஆய்வின் முடிவுரையாக அமைகின்றது. ஆய்வுக்குத் துணை செய்த முதன்மைச் சான்றுகள், திறனாய்வு நூல்கள், இதழ்கள், கட்டுரைகள் ஆகியவை அகரவரிசைப்படுத்தப்பட்டு துணைநூற்பட்டியலாக இடம்பெற்றுள்ளது. ஆய்வேட்டின் இறுதியில் பின்னிணைப்பாக ஆய்வு குறித்த நிழற்படங்கள், கல்வெட்டுக் குறிப்புகள், அகத்திணைக் கூறுகள் தொடர்பான அட்டவணைகள், களஆய்வில் இற்றைநாள் ஆயர்களிடமிருந்து திரட்டப்பட்ட பேட்டிகள் போன்றவை இடம்பெறுகின்றன.

# இயல்-1

## பழந்தமிழர் நிலப்பகுப்பும் வாழ்வியலும்

### முன்னுரை

**"கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு**
**முற்றோன்றி மூத்தகுடி"[1]**

'தமிழ்க்குடி' எனப் போற்றப்பெறும் பெருமைக்குரியவர் பழந்தமிழர். அன்பு, காதல், திருமணம், இல்லறம் எனும் அகவொழுக்கத்தாலும், கொடை, வீரம், கல்வி, ஆட்சிச்சிறப்பு எனும் புறவொழுக்கத்தாலும் தமிழர் தம் மாண்பு உலகிற்கு முன்னுதாரணமாகத் திகழ்ந்தது. சங்க காலத்தவரின் செம்மையான வாழ்வியலுக்கு நிலஅமைப்பின் செல்வாக்கு அடித்தளமாய் அமைந்தது. மனிதனுக்கு நிலம் காட்டும் தாய்மை வளமும் அன்பும் கண்டு அந்நிலத்தைப் பெண்ணாகவும், தாயாகவும், தெய்வமாகவும் தமிழர்கள் போற்றினர். தமிழர் வாழ்ந்த நிலப்பகுதியானது வடவேங்கடத்திற்கும் தென்குமரிக்கும் இடைப்பட்ட பகுதி ஆகும். "இன்று 'சுனாமி' எனும் சப்பானியச் சொல்லால் சொல்லுகின்ற கடல்கோள்களிலிருந்து, தமிழர் வரலாறு தொடங்குகிறது என்கின்றார் தமிழண்ணல்."[2] இன்றைய குமரிமுனைக்குத் தெற்கே குமரிக்கண்டம் எனப் பெரிய நிலப்பரப்பு ஒன்று இருந்துள்ளது. அங்கு குமரி மலைத்தொடர், ப∴றுளியாறு, குமரியாறு உள்ளிட்ட பகுதிகளை மேனாட்டறிஞர் 'லெமூரியா' எனக் குறித்தனர். மேற்கே மொரீசியசு முதல் கிழக்கே சாவகம் (சாவா), சுமத்திரா வரை, பசிபிக் கடலின் ஒரு பகுதியாக இந்நிலப்பரப்பு இருந்துள்ளது. இதனை இரண்டு கடல்கோள்கள் விழுங்கின. கடல்கோள்களுக்குப் பிறகு குமரிக்கடலாக மட்டுமே குறிக்கப்பட்ட அப்பகுதி இன்று குமரிமுனை என்று மட்டும் குறிக்கப்படுகின்றது. முதல் கடல்கோளுக்குப் பிறகு குமரியாறு வரை இருந்த நிலம், இரண்டாம் கடல்கோளுக்குப் பிறகு மறைந்து குமரிமுனை ஆயிற்று என்பர். இதனை,

**"மலிதிரை ஊர்ந்துதன் மண்கடல் வௌவலின்**
**மெலிவின்றி மேற்சென்று மேவார்நாடு இடம்பட"**

**(கலி.104:1-2)**

என்ற கலித்தொகை அடிகள் விளக்கும். மேலும் இதனை விளக்க இளங்கோவடிகள்,

**“பஃறுளி யாற்றுடன் பன்மலையடுக்கத்துக்**
**குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள”[3]**

என்றும் உணர்த்துகின்றார். (வடவேங்கடமலைக்கும் தென்குமரிக்கும் இடையே) தமிழ்மொழி பேசும் மக்கள் வாழ்ந்த பகுதியை தமிழர் நிலப்பகுப்பாகக் கொண்டனர். பழந்தமிழ் நிலப்பரப்பினைத் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தில் பனம்பாரனார் வரையறுத்துள்ளார். இதனை,

**“வடவேங்கடந் தென்குமரி**
**ஆயிடைத்**
**தமிழ்கூறு நல்லுலகத்து”** **(தொல்.சிறப்புப்.1-3)**

என்ற அடிகள் உணர்த்தும். இந்நிலப்பரப்பில் வாழ்ந்த பழந்தமிழ் மக்கள், தங்களின் வாழ்விடங்களை அமைத்துக் கொள்ளத் தகுந்த இயற்கைச் சூழலை தன்னுரிமையாக்கிக் கொண்டனர்.

இப்பெரும் நிலப்பரப்பில் “சிதறிக் கிடந்த நூற்றுக்கணக்கான குடிகளையும், இனங்களையும் நானிலத்துக்குள் அடக்கி, அனைவரையும் ஒரு பேரினத்தமிழ்ச் சமூகமாகத் தொல்காப்பியர் கட்டமைத்துள்ளார் என்கின்றார் இலா.வின்சென்ட்.”[4] திருப்பதிமலையிலிருந்து குமரிமுனை வரையிலும், மேற்குக்கடல், கிழக்குக்கடல் இரண்டிற்கும் இடையில் வாழ்ந்த தமிழ் மரபினர், அந்நிலப்பரப்பை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நானிலமாகப் பகுத்தனர். முதற்பொருளானது பழந்தமிழரின் நிலப்பகுப்பையும்,கரு, உரிப்பொருளானது வாழ்வியல் நிகழ்வுகளையும் விளக்குகின்றது. தொல்காப்பியர் வகுத்த முப்பொருள்களில் பழந்தமிழரின் நிலப்பகுப்பையும், வாழ்வியலையும் ஆராய்ந்து விளக்குவதாய் இவ்இயல் அமைகின்றது.

### பழந்தமிழர் நிலப்பகுப்பும் வாழ்வியலும்:

‘வாழ்க்கை வாழ்வதற்கே’ என்ற நேர்த்தியான கொள்கையைக் கொண்ட பழந்தமிழர் இயற்கையோடு இணைந்து வாழ்க்கையை அழகியல் உணர்வுடன் துய்த்து வாழ்ந்தனர். ‘இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்’ என்பது கோட்பாடு. பழந்தமிழ் மக்களின் வாழ்வியல் நிகழ்வுகளை சங்க இலக்கியங்கள் பிரதிபலிக்கின்றன. தற்போது நமக்குக் கிடைத்துள்ள மிகவும் தொன்மையான தமிழ் இலக்கியம்

‘சங்க இலக்கியம்’ எனக் குறிப்பிடப்படுகின்றது. நாடோடி வாழ்க்கையை மேற்கொண்டு உணவிற்காக வேட்டையாடிப் பகுத்துண்டு வாழ்ந்த இனக்குழு சமுதாயம் மறையத் தொடங்கிய காலக்கட்டத்தில் தோன்றிய சங்க இலக்கியப் பாடல்களை அகம் என்றும், புறம் என்றும் இரண்டாகப் பாகுபாடு செய்தனர் தமிழ் மரபினர்.

சங்க இலக்கிய நூல் தொகுதிகள், இரண்டு செய்யுள் தொகை நூல்களாகத் தொகுக்கப்பட்டு எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்று அழைக்கப்படுகின்றன. எட்டுத்தொகை நூல்கள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு, கலித்தொகை, பரிபாடல் ஆகியன. இவற்றுள் கலித்தொகையும், பரிபாடலும் மரபு வழியாக எட்டுத்தொகை நூல்களில் அடங்குவனவாகக் கொள்ளப்பட்டாலும் காலத்தால் சற்றுப் பிந்தியனவாகவே கருதப்படுகின்றன.

பத்துப்பாட்டு நூல்கள் பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம், திருமுருகாற்றுப்படை ஆகியன. மரபுவழிப் பட்டியலில் திருமுருகாற்றுப்படை முதலில் வைக்கப்பட்டிருந்தாலும், தற்போது சங்க காலத்தையடுத்த நூலாகக் கருதப்படுகின்றது. “சங்க இலக்கிய நூல்கள் கி.பி.100லிருந்து கி.பி.250 வரையுள்ள காலத்தைச் சார்ந்தவை என்று பொதுவாகக் கருதப்படுகின்றன என்கின்றார் K.A.N.Sastri.”[5]

சங்ககால மக்களின் அகவாழ்க்கைக்கும், புறவாழ்க்கைக்கும் விதிமுறை வகுத்த தொன்மையான இலக்கணநூல் தொல்காப்பியம். இந்நூல் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்ற மூன்று பகுதிகளைக் கொண்டது. இவற்றுள் வாழ்வியலுக்கு விளக்கம் அளிக்கும் பொருளதிகாரம், அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமயியல், செய்யுளியல், மரபியல் என்ற பிரிவுகளாக வகுக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தின் காலம் பற்றிக் கருத்து வேறுபாடுகள் பல உள்ளன. “தொல்காப்பியர் சங்க இலக்கியத்திற்கு முற்பட்டவர்”[6] என்பர் சிலர். “சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்டவர்

என்பது மற்றொரு கருத்து."[7] "இருப்பினும் தொல்காப்பியம் கி.பி.5ம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தது என்ற வையாபுரிப்பிள்ளையின் கருத்து ஏற்புடையது."[8]

**தொல்காப்பியரின் அகத்திணைக் கோட்பாடு:**

சங்க காலத்தவரின் அகவாழ்வை அகத்திணையியல் வழியாகவும் புறவாழ்வை புறத்திணையியல் வழியாகவும் கொண்டு விளக்கியுள்ளார் தொல்காப்பியர். "திணை என்பதற்கு வீடு, குலம், இடம், நிலம், ஒழுக்கம் எனப் பல பொருள் உண்டு. இவற்றில் 'நிலம்', 'ஒழுக்கம்' எனும் பொருள்கள் வழிநின்று தொல்காப்பியரின் திணைக் கோட்பாட்டை அணுகுவோம் என்கின்றார் இலா.வின்சென்ட்."[9] இன்ப ஒழுக்கத்தினது இயல்பை உணர்த்தும் அகத்திணைகள் ஏழு வகைப்படும். அவை கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என்பனவாம். இதனைத் தொல்காப்பியர்,

> **"கைக்கிளை முதலாகப் பெருந்திணை - இறுவாய்**
> **முற்படக் கிளந்த எழுதிணை என்ப"      (தொல்.பொருள்.அகத்.1)**

என்ற நூற்பாவால் விளக்கியுள்ளார். அகத்திணைகள் முதலாகக் கூறப்பட்டதால் புறத்திணைகள் பின்னால் கூறப்பட்டதும் அறியப்படுகின்றது. புறத்திணைகளும் ஏழு வகைப்படும். அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பன. தொல்காப்பியரின் திணைக் கோட்பாடானது பெண்ணாசையையும் மண்ணாசையையும் அடிப்படையாகக் கொண்டது. "அகத்தில் பெண்ணையும், புறத்தில் நிலத்தையும் கொண்ட ஆண் ஆதிக்கமுறையை அவர் திணைக்கோட்பாட்டில் காணமுடிகின்றது என்கின்றார் இலா.வின்சென்ட்."[10] அகத்திணைகள் ஏழனுள் இடையில் அமைந்த முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் எனப்பெறும் ஐவகை திணைகளில் நடுவான பாலை நீங்கலாக ஏனைய நான்கும் தமக்கெனத் தனிநிலம் பெற்றவை. இதனை,

> **"அவற்றுள்**
> **நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்**
> **படுதிரை வையம் பாத்திய பண்பே"      (தொல்.பொருள்.அகத்.2)**

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்தும். மேலும் "நிலம் இயற்கை, செயற்கையென இருவகைப்படும். பிரிவொழுக்கம் நீங்கிய ஏனைய நான்கு திணைகளும் இயற்கை

நிலம் பெறுவன. பாலை என்பது செயற்கை நிலம் என்கின்றார் மு.அருணாச்சலம் பிள்ளை."[11] பெருந்திணை என்பது வயது பொருந்தாக் காமத்தையும், கைக்கிளை என்பது ஒருதலைக் காதலையும் குறிக்கும். இவ்விருவகைத் திணைகளும் எந்த நிலத்திலும் தோன்றும். எனவே இவ்வகை ஒழுக்கங்களுக்கெனத் தனி நிலப்பகுப்பு குறிக்கப்படவில்லை. நடுவணைந்திணைகள் மட்டுமே நிலவுரிமைப்பெற்றன. "பெருந்திணை கழிபெருங்காமத்தையும், கைக்கிளை ஒருதலைக் காதலையும் குறித்தன. இவை எந்த நிலப்பகுதிகளிலும் நிகழலாம் என்பதை வலியுறுத்துகின்றார் தனிநாயக அடிகள்."[12]

தொல்காப்பியரின் அகத்திணைக் கோட்பாடானது ஏழு திணைகளை மூன்று பகுப்புகளாகக் கொண்டுள்ளது. அவை கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என்பன. கைக்கிளை என்பதனை 'ஒவ்வாப்பருவ மோகம்', 'முதிரா இளமை அழைப்பு' எனவும் ஐந்திணை என்பது ஒத்தப் பருவக் காதல் எனவும் பெருந்திணை என்பதை 'முதுமைக்காமம்' எனவும் குறிப்பிடுவர். தொல்காப்பியர் குறிப்பிடும் திணைப்பகுப்பினை "கைக்கிளை என்பது இளங்காய்; ஐந்திணை என்பது கனி; பெருந்திணை என்பது அழுகல்; என விளக்குகின்றார் க.ப.அறவாணன்."[13] தொல்காப்பியரின் கருத்தை விளக்கும் வகையிலேயே நாற்கவிராச நம்பி,

> **"கைக்கிளை உடையது ஒருதலைக் காமம்**
> **ஐந்திணை உடையது அன்புடைக் காமம்**
> **பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்"[14]**

என்று விளக்குகின்றார். அகத்திணைக் கோட்பாடானது முப்பொருள்களை முன்வைத்து வகுக்கப்பட்டுள்ளது.

**அகத்திணைக் கூறுகள் - முப்பொருள்கள்:**

ஒவ்வொரு நிலத்தின் இயற்கையையும், மக்களின் வாழ்க்கையையும், அங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளையும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்றாகப் பகுத்துள்ளார் தொல்காப்பியர். இதனை,

> **"முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
> **நுவலுங் காலை முறைசிறந் தனவே**
> **பாடலுட் பயின்றவை நாடுங் காலை"   (தொல்.பொருள்.அகத்.3)**

என்ற நூற்பாவால் விளக்குகின்றார். இலக்கியத்தின் பாடுபொருளானது, முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருளைச் சார்ந்தே அமைகின்றது. நிலத்தையும், பொழுதையும் முதற்பொருளாகவும், தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், யாழ் என்பனவற்றை கருப்பொருள்களாகவும் குறிப்பிடுவர். முப்பொருட்களிலும் கண்ணால் காணமுடியாத நுண்பொருள் உரிப்பொருளாகும். இந்த மூன்றனுள் "கருப்பொருள் தான் முதன்மையானது என்கின்றார் சாமி.சிதம்பரனார்."[15] "முப்பொருட்களை பற்றிய புரிதலே அகத்திணைக்கோட்பாட்டின் இயல்பான விளக்கத்துக்கு அடிப்படை என்கின்றார் பெ.மாதையன்."[16]

ஐந்திணைகளின் இயற்கைச் சூழலுக்கு ஏற்ப முப்பொருட்களையும் ஒவ்வொரு நிலத்திற்கும் வெவ்வேறாக அமைத்துக் குறிப்பிடுவர்.

**முதற்பொருள்:**

மனித ஒழுக்க நிகழ்வுக்கு அடிப்படை ஆதாரம் நிலம். அவ்வவ்வொழுக்கலாறுகள் காலம் என்ற தளத்தை மையமாக வைத்து அமைகின்றன. எனவே முதற்பொருளை நிலம், பொழுது என இரண்டு வகைப்படுத்தி அவற்றின் முக்கியத்துவத்தை முதன்மைப்படுத்தியுள்ளார் தொல்காப்பியர். இதனை,

**"முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே"**

**(தொல்.பொருள்அகத்.4)**

என்ற நூற்பா விளக்கும். உலகம் தொடர்ந்து இயங்கவும், மக்களின் இயல்பான வாழ்விற்கும், நிலமும், பொழுதும் மிகவும் இன்றியமையாதவை ஆகும். மக்கள் வாழ்வதற்கு முதற்பொருளே அடித்தளமாகின்றது. கடல் சூழ்ந்த இப்பெரிய உலகமானது நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் எனும் ஐம்பெரும் மூலக்கூறுகளால் ஆனது. நிலத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்தே தொல்காப்பியர் முதற்பொருள் எனும் வகைப்பாட்டினுள் நிலத்தை முதற்கண் குறிப்பிட்டுள்ளார். நிலமானது ஏனைய மூலக்கூறுகளின் பிறப்பிடமாக உள்ளது. இதனை விளக்க வந்த இளம்பூரணர்,

**“நிலம் எனவே நிலத்திற்குக் காரணமாகிய நீரும்**
**நீர்க்குக் காரணமாகிய தீயும்**
**தீயிற்குக் காரணமாகிய காற்றும்**
**காற்றிற்குக் காரணமாகிய ஆகாயமும் பெறுதும்”[17]**

என்ற நூற்பாவால் உணர்த்துகின்றார். மேலும் “நிலமானது பலவும் தோன்றுதற்குக் காரணமாக இருத்தலால் இதனைத் தொல்காப்பியர் முதற்பொருளில் அடக்கினார் என்கின்றார் மு.அருணாச்சலம் பிள்ளை.”[18]

**பழந்தமிழரின் நிலப்பகுப்புமுறை**

நில அமைப்பின் இயற்கைக்கு ஏற்ப மக்கள் தாம் வாழ்ந்த நிலப்பகுதியை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நான்கு பிரிவுகளாகப் பகுத்துக் கொண்டனர். நான்கு வகையான நிலங்களையுடைய காரணத்தால் நானிலம் என்ற பெயர் பூமிக்கு ஏற்படலாயிற்று. “‘நானிலம்’ என்பதற்கு நான்கு வகையான நிலம் என மட்டும் பொருள் கொள்ளாது ‘நால்’ எனும் சொல்லுக்கு ‘நாலுதல்’, ‘தொங்குதல்’ எனக்கொண்டு நிலம் எனும் சொல்லுக்கு உலகம் எனப் பொருள் கொண்டு ‘தொங்குகின்ற உலகம்’ எனக் கூறுவதே சிறப்புடையது என்கின்றார் ம.ரா.போ.குருசாமி.”[19] தொல்காப்பியர் நிலங்களுக்கு தெய்வ அடிப்படையிலும், நில அமைப்பின் அடிப்படையிலும், திணைப்பெயர்கள் அடிப்படையிலும் பெயரிட்டுள்ளார். இதனை,

**“மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே” (தொல்.பொருள்.அகத்.5)**

என்ற நூற்பா விளக்கும்.

“தமிழர் வகுத்த குறிஞ்சி முதலாம் ஒவ்வொரு திணையும் தன்னிறைவுடையது. தன்னகத்து வாழும் மக்கட்கு வேண்டும் உணவு முதலான நுகர்ச்சிகளையும், யாழிசை முதலான கலைகளையும், தெய்வம் முதலான நெறியுணர்வையும், தொழில் முதலான வினைவாய்ப்புக்களையும் வழங்கவல்ல பெற்றியது. வாழ்க்கைக்கு வேண்டும்

கூறுகளெல்லாம் கொண்டிருத்தலின் திணை ஒவ்வொன்றும் தனியுலகம் என்று சொல்லத்தக்க அமைவுடையது. ஆதலினன்றே காடுறையுலகம், மைவரையுலகம், தீம்புனல் உலகம், பெருமணல் உலகம் என்று பரந்த நிலையைக் காட்டினார் தொல்காப்பியர் என்கின்றார் வ.சுப.மாணிக்கம்."[20]

நால்வகை நிலமக்களும் அந்தந்த நிலங்களுக்குரிய தனித்தனி தெய்வங்களை வணங்கினர். முல்லை நிலத்தினர் திருமாலையும், குறிஞ்சி நிலத்தினர் முருகனையும், மருதநிலத்தினர் இந்திரனையும், நெய்தல் நிலத்தினர் வருணனையும் வணங்கினர். "நால்வகை நிலங்களிலும் தெய்வங்களாகக் குறிக்கப்பட்டிருப்பவர்களும், அந்தந்த நிலத்திலே வாழ்ந்த சிறந்த வீரர்களாக இருந்திருக்கலாம் என்பது சாமி.சிதம்பரனாரின் கருத்து."[21] பாலைத்திணைக்குரிய தெய்வமாகக் கொற்றவை என்ற பெண் தெய்வத்தை குறிப்பிட்டுள்ளனர். இதனை,

**"மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த**
**கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே" (தொல்.பொருள்.புறத்.4)**

என்ற நூற்பா புலப்படுத்தும். வீரத்தினால் அடைந்த வெற்றியைக் கொண்டாடுவதற்குத் 'துடிநிலை' என்று பெயர். அவ்வெற்றிக்குத் துணை செய்யும் தெய்வம் கொற்றவை ஆகும். இத்தெய்வத்திற்கு 'துர்க்கை' எனவும் 'காளி' எனவும் பெயர் கொள்வர். பாலைத்திணைக்குரிய தெய்வமாக இது கருதப்படுகின்றது. குறிஞ்சித் திணைக்கும் போர்க்காலத்தில் வழிபடும் தெய்வமாகவும் 'கொற்றவை' குறிப்பிடப்படுகின்றாள்.

## நானிலப் பகுப்பில் பாலை பெறும் இடம்:

உலக வழக்கையொட்டி நானிலமாகக் குறிப்பிடும் தொல்காப்பியர், ஒழுக்க வகையினையொட்டி ஐந்நிலங்களாகப் பகுக்கின்றார். பாலை எனத் தனியே ஒரு நில அமைப்பு தமிழகத்தில் இருந்திருக்க இயலாது.

முல்லை, குறிஞ்சி உள்ளிட்ட நிலப்பகுதிகளின் வறண்ட நிலையே பாலை என்பது இலக்கணத்தார் கருத்து. தட்பவெப்பநிலை மாற்றத்தால் முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் வெயில் மிகுதலானும், மழை பெய்யாமையானும் தம்மியல்பிழந்து வறண்டு மணல் வெளியாக மாறும்போது பாலை எனப் பெயர் பெற்றுள்ளது. இதனை,

**“முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து**
**நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்**
**பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்”[22]**

என்ற சிலப்பதிகார காடுகாண்காதை அடிகள் உணர்த்தும்.

**நானிலப்பகுப்பும் மக்களும்:**

தமிழகத்தின் நிலப்பகுதிகள் ஒரே சீராக இல்லாமல் பள்ளத்தாக்குகள் நிறைந்த மலைகளாகவும், குற்றுச்செடிகள் நிறைந்த சமமில்லாத காட்டு நிலங்களாகவும், குளம், ஆறு, பாய்ந்து செல்கின்ற சமவெளிப்பரப்புகளாகவும், கடல் சூழ்ந்த பகுதிகளாகவும் இருந்துள்ளன. அந்நிலத்தகவமைப்பிற்கு ஏற்ப மக்களின் வாழ்க்கைமுறை,உணவுமுறை, தொழில்முறை, வழிபாட்டு முறை, பொழுதுபோக்கு, பண்பாடு போன்றவை மாறுபட்டும் காணப்படுகின்றன. “முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நான்கு வகை நிலப்பாகுபாடுகள் மட்டுமே தமிழகத்தில் இருந்துள்ளது. வறட்சிக் காலங்களில் மட்டுமே வறண்ட பாலைநிலம் தோன்றியுள்ளது என்பதை வலியுறுத்துகின்றார் கோ.சுரேஷ்.”[23] தொல்காப்பியம் தமிழிலக்கியம் படைத்தற்குரிய விதிமுறைகளை எடுத்தியம்புகின்றது. பாடல் சான்ற புலனெறி வழக்கத்தைப் பகர்கின்றது. இந்நூல் தமிழரின் வாழ்வுக்கு இலக்கணம் கூறுவதன்று, இலக்கியங்களுக்கு இலக்கணம் வகுத்துரைப்பது. இருப்பினும் இவ்விலக்கணத்தால் தமிழரின் செம்மாந்த வாழ்வு வெளிப்படுகின்றது. சங்ககாலத் தமிழ் மக்களின் வாழ்வினைத் தெளிவாகச் சித்தரிக்கும் வாயில்களாக அமைந்த சங்க இலக்கிய நூல்களும் பழந்தமிழ் நிலப்பரப்பை நானிலமாகவே குறிப்பிடுகின்றது.

இந்நானிலங்களுக்குள்ளும் மண்வளமும், நீர்வளமும், குறைந்த பகுதியை **‘வன்புலம்’** என்றும், மண்வளமும், நீர்வளமும் நிறைந்த பகுதியை மென்புலம் என்றும் குறிப்பிட்டனர். இதனை,

**“வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரும்**
**மென்புல வைப்பின் நன்னாட்டுப் பொருந”      (புறம்.42:17-18)**

என்ற அடிகள் விளக்கும். மேலும் முல்லையும், குறிஞ்சியும் வன்புலம் என்ற பிரிவிலும், மருதமும், நெய்தலும் மென்புலம் என்ற பிரிவிலும் அடங்குமென்பர். தினை, வரகு

முதலான புன்செய்பயிர் விளையும் நிலங்களை **‘புன்புலம்’** எனவும் குறித்தனர். இதனை,

> **“வித்தி வான்நோக்கும் புன்புலங் கண்ணகன்”** (புறம்.18:24)

என்ற அடி உணர்த்தும்.

நான்கு நிலத்தில் வாழ்ந்த மக்களும் செல்வச் செழிப்போடும், ஒற்றுமையோடும் வாழ்ந்துள்ளனர். இவர்களிடையே பண்டமாற்று முறையும் நடைபெற்றுள்ளது. முல்லைநிலத் தலைவனை **‘நாடன்’** எனவும், மருதநிலத் தலைவனை **‘ஊரன்’** எனவும், நெய்தல்நிலத் தலைவனை **‘சேர்ப்பன்’** எனவும், குறிஞ்சிநிலத் தலைவனை **‘வெற்பன்’** எனவும் குறித்தனர். ஆண்கள் நல்லவராக இருந்தால் மட்டுமே நாடு நல்லதாக இருக்கும். ஒவ்வொரு நிலத்தின் தலைவனும் நல்வழியில் மக்களை வழிப்படுத்தினர்.

> **“நாடா கொன்றோ காடா கொன்றோ**
> **அவலா கொன்றோ மிசையா கொன்றோ**
> **எவ்வழி நல்லவர் ஆடவர்**
> **அவ்வழி நல்லை வாழிய நிலனே”** (புறம்.187:1-4)

என்ற பொய்கையாரின் அடிகள் விளக்கும்.

### தமிழ் நிலப்பரப்பு - பெயர்க்காரணம்:

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனும் நால்வகை நிலத்தின் பெயர்கள், அந்தந்த நிலத்தின் பூக்களைக் குறித்தனவா, மரங்களைக் குறித்தனவா, அல்லது ஒழுக்கங்களைக் குறித்தனவா என்பதில் உரையாசிரியர்களிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. இருப்பினும் “நிலங்களின் பெயர்கள் பூக்களின் அடிப்படையில் தோன்றியவை என்பது உரையாசிரியர்களில் காலத்தால் முற்பட்டவரான இளம்பூரணர் சொல்வதுதான் மிகப் பொருத்தமானது என்கின்றார் தனிநாயக அடிகள்.”[24]

### மலர்களின் பெயரால் நிலங்கள்:

நிலங்களில் மலர்ந்த மலர்களைக் கொண்டே நிலங்களுக்குப் பெயரிட்டனர் என்பர். காடுறை உலகிற்கு முல்லைப்பூ சிறந்தது என்பதால் முல்லை நிலம் எனப் பெயரிடப்பட்டது. மலைப்பகுதிக்குப் பெயராகத் தென்னிந்திய மலைப்பகுதிகளில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மலரக்கூடிய குறிஞ்சி மலரின் பெயரை

வைத்துள்ளனர். கடற்கரைப் பகுதிகளில், ஏரிகளில் நீர்நிலைகளில் மலரக்கூடிய நெய்தல் மலரின் பெயரை கடல் சார்ந்த பகுதிகளுக்குச் சூட்டினர். "மணவாழ்வு தொடங்கிப் பிண வாழ்வு வரை 'மலர் மலர்' எனத் தமிழர் வழங்குவர். மலர்ப்பெயர் சார்த்தி மண்ணை வழங்குவர். பெண்ணை வழங்குவர் என்கின்றார் க.ப.அறவாணன்."[25] காஞ்சி மலர் மிகுதியால் **'காஞ்சி'** எனப் பெயர் எய்தியது காஞ்சி மாநகரம். வஞ்சிமலர் மிகுதியால் **'வஞ்சி'** எனப் பெயர்பெற்றது சேரர் நகரம்.

**மரங்களின் பெயரால் நிலங்கள்:**

ஆற்றங்கரையிலமைந்த விவசாய நிலப்பகுதியை குறிக்க, அதன் அடையாளமாகத் திகழும் மருதம் என்ற மரத்தின் பெயரைச் சூட்டியுள்ளனர். வறண்ட குற்றுக்காட்டுப் பகுதியைக் குறிக்க கோடையின் வெப்பத்திலும் வளமான பூக்களோடு திகழும் பாலை என்ற மரத்தின் பெயரைச் சூட்டினார்கள். தில்லை மரச்செறிவால் ஓர் ஊர் 'தில்லை' என்றே அழைக்கப்பட்டது. கடம்பமர அடர்வால் மதுரை 'கடம்பவனம்' எனக் குறிக்கப்பட்டது. "இவை போல இன்னும் பல ஊர்கள் மலர்களால், மரங்களால் பெயர்பெற்றன என்பதை வலியுறுத்துகின்றார் க.ப.அறவாணன்."[26]

**கருப்பொருளே நிலப்பெயர் வைப்பிற்கு அடிப்படை:**

பழந்தமிழ் மன்னர்களும் கூட அவர்கள் சூடிக்கொண்ட மலர்களாலே அடையாளம் பெற்றனர். சோழர் அத்திமலராலும், பாண்டியர் வேப்பம்பூ கொண்டும், சேரர் பனம் பூ மூலமாகவும் அடையாளப்படுத்தப்பட்டனர். தமிழர் மலர்களோடு நெருங்கிய தொடர்புடையவர்கள். அவர்கள் மலர்மாலையை போற்றும் விதமாய் போர்க்களத்தில் மலர் அணிவதை மரபாகக் கொண்டிருந்தனர். ஆடவர் மார்பில் சூடும் மலர்த்தொகுதியை மாலை எனவும், தலையில் சூடும் மலரை கண்ணி எனவும் குறிப்பிட்டனர். "திணைச் சமுதாய மக்கள் ஆடவர் மகளிர் என்ற வேறுபாடின்றி மலர்களைச் சூடியதை தனிநாயக அடிகள் சுட்டிக் காட்டுகின்றார்."[27]

ஒவ்வொரு திணையிலும் முதற்பொருளைச் சார்ந்து தோன்றும் (மரம், மலர்) கருப்பொருள்களின் அடிப்படையிலேயே நிலப்பெயர்கள் தோன்றியுள்ளன.

**ஐந்திணைகளின் இயற்கைப் புனைவுகளுக்கு ஏற்ப நிலங்கள் மாறுபடும்.**

முல்லை - காடும் காடு சார்ந்த பகுதியும்

குறிஞ்சி - மலையும் மலை சார்ந்த பகுதியும்

மருதம் - வயலும் வயல் சார்ந்த பகுதியும்

நெய்தல் - கடலும் கடல் சார்ந்த பகுதியும்

பாலை - மணலும் மணல் சார்ந்த பகுதியும்

(முல்லையும், குறிஞ்சியும் தன்னியல்பு மாறுபட்ட இடம் பாலையாகும்)

காடு, மலை, வயல், கடல், மணல் என மாறுபட்ட நில அமைப்பும் வேறுபட்ட பொழுதுகளையும் கொண்ட முதற்பொருளானது கருப்பொருளையும், உரிப்பொருளையும் வாழ்வியல் கூறுகளாகக் கொண்டுள்ளது.

**பொழுது:**

சங்க இலக்கியமானது மக்கள் வாழ்க்கையில் ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள் நிகழும் காதல் ஒழுகலாறுகளையே ஐந்திணையாகப் புனைய முற்படுகின்றது. உள்ளத்தாலும் உடலாலும் பாலின்பம் துய்க்கவல்ல இருவர்தம் பருவத் தொடக்கமே ஐந்திணையின் தொடக்கமாகின்றது.

நிலமானது ஒவ்வொரு நில அமைப்பிற்கும் பொருந்தக்கூடிய பொழுதுகளை உள்ளடக்கியது. இப்பொழுதை பெரும்பொழுது, சிறுபொழுது என இரண்டாகப் பகுப்பர். ‘பொழுது’ என்பது காலத்தைக் குறிக்கும் ஒருபொருட்பன்மொழியே ஆகும். தொல்காப்பிய பொருளதிகாரம் அகத்திணையியலுக்கு முன்னுரை அளித்த இளம்பூரணர் காலத்தைக் குறிக்கும் பெயர்களைப் பட்டியலிட்டுள்ளார். இதனை,

> **“காலமாவது மாத்திரை முதலாக நாழிகை**
> **யாமம், பொழுது, நாள், பக்கம், திங்கள், இருது அயநம்**
> **ஆண்டு உகம் எனப்பல வகைப்படும்”[28]**

என்ற அடிகள் விளக்கும். மேலும் “காலம், மாத்திரை, நாழிகை, யாமம், பொழுது, நாள், பக்கம், திங்கள், இருது, ஆண்டு எனப் பலவகைப்படினும் பெரும்பொழுது,

சிறுபொழுது என்னும் இரண்டினுள் அடங்கும் என்கின்றார் எஸ்.உலகநாதன் பிள்ளை."[29]

காமம் சிறக்கும் காலமே அகப்பாடல்களின் அடிப்படை. இக்காலமே ஐந்திணைக்கு முதற்பொருளாக வரையறுக்கப்பட்டுள்ளது. இதனால் தான் பருவகாலங்கள், பொழுதுகள், யாவும் திணைக்குத் திணை மாறுபடுகின்றது. இளமைக்காலமே ஐந்திணைக்குக் காலமாகும். "ஐந்திணையானது காமம் நுதலுவது, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்ற காமவினைகளைக் கொண்டது என்பது பெ.மாதையன் கருத்து."[30] ஐந்திணைகளின் வாழ்வியலானது பொழுதுகளின் பகுப்புமுறையாலும், நிலம் சார்ந்த சூழலாலும் நிறைவுபெற்றதாய் அமைகின்றது.

இன்றும் தமிழ்க்கவிதை இயற்றுபவர்கள் நிலங்களின் பருவகால வேறுபாடுகளை கவிதையின் பாடுபொருளாகக் கொண்டு இயற்கைப் புனைவை விளக்குகின்றனர். "இன்றைய தமிழ்க்கவிஞர்கள் தமிழிலக்கிய பாடுபொருளாக அமைந்த நிலப்பகுதிகளைப் பற்றி மட்டும் நோக்காது பருவகாலங்களில் இந்த நிலங்களில் என்ன மாறுதல்கள் நிகழ்ந்தன, இப்பருவகாலங்களில் பகலிலும், இரவிலும், இயற்கை எவ்விதம் தன்னை வெளிப்படுத்திக் கொண்டது என்பவற்றையும் அறியவேண்டும் என்கின்றார் தனிநாயக அடிகள்."[31]

### பெரும்பொழுது:

பெரும்பொழுதானது ஓராண்டின் பன்னிரண்டு மாதங்களை இரண்டிரண்டு மாதங்களாகக் கொண்ட ஆறு கூறுகளை உள்ளடக்கியது. அவை கார்காலம், கூதிர்காலம், முன்பனிக்காலம், பின்பனிக்காலம், இளவேனிற்காலம், முதுவேனிற்காலம் என்பன. பெரும்பொழுது "ஆறு என்ற தொகைக்குறியீடு தொல்காப்பியத்துள் இல்லை. அஃது உரையாசிரியர்களால் பெறப்படுவதுவே. கார் (6) கூதிர் (7) பனிஎதிர்பருவம் (8) வேனில் (11) பின்பனி (12) என்ற பெயரீடுகளே தொல்காப்பியத்துள் உள்ளன. இவற்றிற்குரிய மாதக்கணக்கீடுகள் மூலநூலுள் இல்லை. எனினும் உரைநூல்கள் அவற்றை விரித்துரைக்கும் என்பதை வலியுறுத்துகின்றார் க.ப.அறவாணன்."[32]

| பெரும்பொழுது | | ஓராண்டின் ஆறு கூறுகள் |
|---|---|---|
| கார்காலம் | - | ஆவணி, புரட்டாசி |
| கூதிர்காலம் (குளிர்காலம்) | - | ஐப்பசி, கார்த்திகை |
| முன்பனிக்காலம் | - | மார்கழி, தை |
| பின்பனிக்காலம் | - | மாசி, பங்குனி |
| இளவேனிற்காலம் | - | சித்திரை, வைகாசி |
| முதுவேனிற்காலம் | - | ஆனி, ஆடி |

**சிறுபொழுது**

சிறுபொழுதானது ஒருநாளின் இருபத்து நான்கு மணி நேரங்களை நான்கு நான்கு மணி நேரங்களாகக் கொண்ட ஆறு கூறுகளைத் தன்னுட் கொண்டது. அவை மாலை, யாமம், வைகறை, விடியல், எற்பாடு, நண்பகல் என்பனவாகும். மாலை (6) யாமம் (7) வைகறை (8) விடியல் (9) எற்பாடு(10) நண்பகல் (11) என்று சிறுபொழுதுகளைத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். “வடநூலார் பெரும்பொழுதுகளை முறையே வசந்தருது, கிரிஷ் ருது, சரத் ருது, வர்ஷ ருது, ஹேமந்த ருது, சிசிர ருது என்று ஆறாக்குவர் என்பதை மேற்கோளாக்குகின்றார் க.ப.அறவாணன்.”[33]

| சிறுபொழுது | | ஒரு நாளின் ஆறு கூறுகள் |
|---|---|---|
| மாலை | - இரவின் முற்கூறு | - மாலை 6 மணி முதல் இரவு 6 மணி வரை |
| யாமம் | - (நள்ளிரவு) இரவின் நடுக்கூறு | - இரவு 10 மணி முதல் இரவு 2 மணி வரை |
| வைகறை | - இரவின் பிற்கூறு | - இரவு 2 மணி முதல் காலை 10 மணி வரை |
| காலை | - பகலின் முற்கூறு | - காலை 6 மணி முதல் காலை 10 மணி வரை |
| நண்பகல் | - பகலின் நடுக்கூறு | -காலை 10 மணி முதல் பிற்பகல் 2 மணி வரை |
| எற்பாடு | - பகலின் பிற்கூறு | - பிற்பகல் 2 மணி முதல் மாலை 6 மணி வரை |

உரையாசிரியர்கள் சிறுபொழுது பற்றி வேறுபட்ட கருத்துக்களை முன்வைக்கின்றனர். சிலர் ஐந்து வகையான சிறுபொழுதுகள் மட்டுமே உள்ளன என்றுரைக்கின்றனர்.

**சிறுபொழுது பற்றிய உரை ஆசிரியர் கருத்துக்கள்**

| எண் | ஆசிரியர் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | தொல்காப்பியர் | வைகறை | விடியல் | நண்பகல் | எற்பாடு | மாலை | யாமம் |
| 2. | இளம்பூரணர் | வைகறை | விடியல் | நண்பகல் | எற்பாடு | மாலை | யாமம் |
| 3. | நச்சினார்க்கினியர் | வைகுறு | விடியல் | நண்பகல் | எற்பாடு | மாலை | யாமம் |
| 4. | சோமசுந்தரபாரதி | வைகுறு | விடியல் | நண்பகல் | எற்பாடு | மாலை | யாமம் |
| 5. | புலவர் குழந்தை (5) | வைகுறு | காலை | நண்பகல் | ….. | மாலை | யாமம் |
| 6. | மு.அருணாவ்சலம் பிள்ளை | வைகுறு | காலை | நண்பகல் | எற்பாடு | மாலை | யாமம் |
| 7. | இறையனார் களவியல் உரை (5) | வைகுறு | எற்படு | நண்பகல் | ….. | மாலை | யாமம் |
| 8. | நம்பிஅகப்பொருள்(5) | வைகுறு | எற்படு காலை | நண்பகல் | ….. | மாலை | யாமம் |
| 9. | சிவஞான முனிவர்(5) | வைகுறு | எற்படு காலை | நண்பகல் | …. | மாலை | யாமம் |

வைகறையும் விடியலும் ஒன்றே எனப் பொருள் கொண்டால் சிறுபொழுது ஐந்து தான். ஆனால் வைகறை வேறு, விடியல் வேறு என்று பொருள் கொள்வதே சங்க இலக்கிய முறைமை எற்பாடு என்பதனை காலையுடன் இணைத்தும் கூறுவர். ஆனால் கதிர் மறையும் பொழுதே எற்பாடாகும்.

சங்க இலக்கியப் பாடல்களும் பொழுதுகளின் தன்மையைப் பறைசாற்றுகின்றன. குறுந்தொகைப் பாடலொன்று பொழுது ஐந்து என மொழிகின்றது. இதனை,

> **“காலையும், பகலும், கையறு மாலையும்,**
> **ஊர்துஞ்சு யாமமும், விடியலும், என்றுஇப்**
> **பொழுதுஇடை தெரியின் பொய்யே காமம்” (குறுந்.32:1-3)**

என்ற அடிகள் விளக்கும். ஆறு பெரும்பொழுதுகளும், ஆறு சிறுபொழுதுகளும் மக்களின் வாழ்வியலை வழி நடத்தும் காரணிகளாக அமைகின்றன. “ஆறு பெரும்பருவ காலங்களிலும் ஆறு சிறுபருவ காலங்களிலும் நிலத்தோற்றத்தைப் பற்றிய ஆய்வைத் தமிழ்க் கவிஞர்கள் புறக்கணிக்கவே முடியாது என்கின்றார் மு.வேங்கடசாமி நாட்டார்.”[34]

**ஐந்திணைக்குரிய முதற்பொருள்:**

| வ. எண் | நிலம் | | பொழுது | |
|---|---|---|---|---|
| | | | **பெரும்பொழுது** | **சிறுபொழுது** |
| 1. | முல்லை | காடும் காடு சார்ந்த பகுதியும் | கார்காலம் | மாலை |
| 2. | குறிஞ்சி | மலையும் மலை சார்ந்த பகுதியும் | கூதிர்காலம் முன்பனிக் காலம் | யாமம் |
| 3. | மருதம் | வயலும் வயல் சார்ந்த பகுதியும் | பெரும் பொழுதுகள் ஆறும் | வைகறை |
| 4. | நெய்தல் | கடலும் கடல் சார்ந்த பகுதியும் | பெரும் பொழுதுகள் ஆறும் | எற்பாடு |
| 5. | பாலை | மணலும் மணல் சார்ந்த பகுதியும் | இளவேனில், முதுவேனில், பின்பனி | நண்பகல் |

**முல்லை நிலத்திற்கான பொழுது:**

முல்லை நிலத்திற்கு பெரும்பொழுதாக கார்காலமும், சிறுபொழுதாக மாலையும் வரையறை செய்யப்பட்டுள்ளன. இதனை,

**"காரும் மாலையும் முல்லை" (தொல்.பொருள்.அகத்.6)**

என்ற நூற்பா உணர்த்தும். முல்லை நிலத்திற்கே உரித்தான ஆற்றியிருத்தல் ஒழுக்கத்தில் வினைமுடித்து மீண்டுவரும் தலைவனின் கற்பு நெறியையும், தலைவனுக்காக காத்திருக்கும் தலைவியின் கற்பு நெறியையும் பறைசாற்றும் பண்பினைக் கொண்டவையாக கார்காலமும் மாலைப்பொழுதும் திகழ்ந்தன.

சங்க காலத்தில் இல்வாழ்க்கையை மேற்கொண்ட தலைவனும், தலைவியும் போர் நிமித்தமாகவும், பொருள் தேடியும் பிரிவர். மேலும் தலைவன் குறிப்பிட்ட காலத்தில் வருவதாகக்கூறி தலைவியை ஆற்றியிருக்க வைப்பான். தனிமையை நினைத்துப் புலம்பும் முல்லை நிலத்துத் தலைவிக்குக் கார்காலமும், மாலைக்காலமும் துன்பத்தைப் பெருக்கும்.

**கார்காலம்:**

ஆவணி, புரட்டாசி எனும் இரு மாதங்களை உள்ளடக்கிய கார்காலமானது மிகுந்த மழைப்பொழிவினைத் தரவல்லது. கார்காலத்து மேகங்கள் நீரினை முகந்து முரசு போல் முழங்கி உலகினை வளைத்தன. பெரிய நிலப்பரப்பானது கண்ணுக்கு இனிதாக அழகு பெற்று திகழுமாறு கார்காலம் தொடங்கியது. இதனை,

**"வையகம் பனிப்ப வலன்ஏர்பு வளைஇப்**
**பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென"** **(நெடுநல்.1-2)**

என்ற அடிகளால் விளக்குகின்றார் நக்கீரர். மேலும், "நெடுநல்வாடையில் நிலவுலகம் குளிர்ந்து நடுங்க காலத்தால் பொய்யாத மேகங்கள் வலப்பக்கமாக எழுந்து புதிய மழையைப் பொழிந்த செய்தியை முல்லைப்பாட்டுடன் தொடர்புபடுத்தி உரைத்துள்ளார் நக்கீரர் என்கின்றார் ஞா.மாணிக்கவாசகன்."[35]

கார்கால மேகமானது மழைநீரைக் கொண்டு கருமையாகத் தோற்றமளிக்கும். இக்கருமேகத்தைத் திருமாலுக்கு ஒப்பிட்டு உரைத்துள்ளார் நப்பூதனார். கடலில் இருந்து புறப்பட்ட மேகம் மழைநீரைத் தாங்கி மேலெழுந்து வானத்தில் தோற்றமளிக்கும் தன்மை திருமாலின் வாமன அவதாரத்தையும், நிறத்தையும் நினைவு கூர்கின்றது என்கின்றார் முல்லைப்பாட்டு ஆசிரியர். இதனை,

**"நனந்தலை உலகம் வளைஇ, நேமியொடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல் போல"** **(முல்லைப்.பா.1-3)**

என்ற அடிகள் தெளிவுபடுத்தும். கார்காலத்து மேகம் மழைநீரை முகந்து வருதலை புறப்பொருள் வெண்பாமாலை **'கார்முல்லை'** எனும் துறையாகக் குறிப்பிடுகின்றது. பாசறையில் உள்ள தலைவன் வருவதற்கு முன்னரே முகில், நீரை முகந்து கொண்டு வந்தது என்பது கார்முல்லை எனும் துறையாகும். இதனை,

**"அருந்திறற் கட்டூ ரவர்வா ராமுன்**
**கருங்கடல் முகந்து கார்வந் தன்று"**[36]

என்ற அடிகள் விளக்கும். கார்காலத்து பொழியும் மழையானது, முல்லை நிலத்தில் தங்கமழை போன்று பொன்னிற பூக்களைக் கொண்ட கொன்றையும், செம்முல்லையும், விளக்கு போன்ற அமைப்பு கொண்ட தோன்றியும், நீலநிறம் கொண்ட காயாவும்

கொடியில் பரவிய முல்லையும், முசுண்டையும் மலர்ந்து நறுமணமும், அழகும் மிளிரக் காரணமானது. இதனை,

**“நீடுஇணர்க் கொன்றை கவின்பெற காடுஉடன்**
**சுடர்புரை தோன்றிப் புதல்தலைக் கொளாஅ**
**முல்லை இல்லமொடு மலரக் கல்ல**
**பகுவாய்ப் பைஞ்சுனை மாஉண மலிரக்**
**கார்தொடங் கின்றே காலை” (அகம்.364:5-10)**

என்ற அடிகள் மெய்ப்பிக்கும். கார்காலத்தில் மலர்கள் மலர்ந்து பருவ வரவை பறைசாற்றுவதையும், காட்டுப்பகுதியை அழகுபடுத்தும் செய்தியும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலும் காணப்படுகின்றது. கார்காலத்து மலர்கள் மலர்ந்தும், தலைவன் வராது கண்டு ஆற்றியிருக்கும் தலைவியின் நிலையையும்,

**“கார் தோன்றிப் பூவுற்ற காந்தள் முகை விளக்குப்**
**பீர் தோன்றித் தூண்டு வாள் மெல் விரல் போல்-நீர் தோன்றித்**
**தன்பருவம் செய்தது கானம் தடங்கண்ணாய்!**
**என்பருவம் அன்று என்றி இன்று”[37]**

என்ற அடிகள் விளக்கும்.

**மாலைப்பொழுது:**

முல்லை நிலத்தின் சிறுபொழுதான மாலைப் பொழுதானது கார்காலத்து மாலையாகவே சிறப்புப்பெறுகின்றது. கார்கால மாலைப் பொழுதில் முல்லைநிலப் பெண்கள் தங்களை அழகுபடுத்திக் கொண்டு வழிபாட்டில் ஈடுபட்டனர். மூங்கிலைப் போன்ற தோள்களையும், செறிவான முன்கைகளில் சங்கினாலான வளையல்களையும், காதுகளில் மகரக்குழைகளையும் கொண்டு மென்மையான சாயலையுடைய பெண்கள் இல்லத்தில் விளக்கேற்றி வழிபட்டுள்ளனர். இதனை,

**“வெள்ளி வள்ளி வீங்கு இறைப் பணைத் தோள்**
**மெத்தென் சாயல், முத்து உறழ் முறுவல்**
**பூங்குழைக்கு அமர்ந்த ஏந்து எழில் மழைக்கண்**
**…………………………………………**
**…………………………………………**
**மல்லல் ஆவணம் மாலை அயர” (நெடுநல்.36-44)**

என்ற அடிகள் தெளிவிக்கும். காதலர் கூடியிருந்து இன்பம் பெறுவதற்கு முல்லை நிலத்தின் கார்காலமும், மாலைப்பொழுதும் ஏதுவாக அமைந்துள்ளன. இதனை,

**“இதுவே மடந்தைநா மேவிய பொழுதே**
**யுதுவே மடந்தைநா முள்ளிய புறவே**
**இனிதுடன் கழிக்கி னிளமை**
**யினிதா லம்ம வினியவர்ப் புணர்வே” (ஐங்.415:1-4)**

என்ற அடிகள் விளக்கும். இணைந்திருக்கும் தலைவன் தலைவியருக்கு இன்பம் நல்கும் மாலைப்பொழுதானது பிரிந்திருக்கும் தலைவியருக்கு துன்பத்தை மிகுதிப்படுத்தும். கார்கால மாலையில் வண்டினங்களும், மானினங்களும் தம் இணைகளோடு சேர்ந்து இன்புற்றிருக்கும். அச்சமயம் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி மட்டும் துயரத்துடன் ஒப்பனையற்று கண்ணீர் நிரம்பிய கண்களுடன் காட்சியளித்தாள். இதனை,

**“ததர்தழை முனைஇய தெறிநடை மடப்பிணை**
**ஏறுபுணர் உவகைய, ஊறுஇல, உகள,**
**அம்சிறை வண்டின் மென்பறைத் தொழுதி**
**முல்லை நறுமலர்த் தாதுநயந்து ஊத**
**எல்லை போகிய புல்என் மாலை” (அகம்.234:10-14)**

என்ற அடிகள் உணர்த்தும். மாலைக்காலமானது காலையில் சென்று உழைத்துவிட்டு மாலையில் வீடு திரும்பும் மக்களுக்கு ஓய்வு நேரமாகவும், களைப்பு நீங்க பொழுது போக்கும் காலமாகவும் இருந்துள்ளது. முல்லைநிலத்து ஆண்கள் ஆநிரைகளையும், ஆடுகளையும் மேய்த்துவிட்டு தொழுவில் அடைத்த பின்னர் குழல், யாழ், பண், இசைத்து இன்பம் கண்டனர். அவர்கள் மீட்டும் இனிய இசையானது தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு மட்டும் வருத்தத்தை மிகுவிப்பதாய் அமைந்தது. இதனை,

**“ஆபெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇப்**
**பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப**
**ஆருயிர் அணங்கும் தெள்இசை” (அகம்.214:12-14)**

என்ற அடிகள் விளக்கும். கருவண்டுகள் முல்லை மலர்களில் படிந்து ரீங்காரம் செய்து தேனை அருந்தும் காலத்தில் தலைவரைச் சார்ந்திருக்கும் மகளிர்க்கு மாலைப்பொழுது இனிமை செய்கின்றது. ஆனால் தலைவரைப் பிரிந்திருக்கும் மகளிர்க்கு மாலைக்காலமானது வருத்தும் தன்மையுடையது என்பதை திணை இலக்கியங்களும் எடுத்தியம்பும். இதனை,

**“முல்லை நறுமலர் ஊதி இருந்தும்பி**
**செல்சார் வுடையார்க்கு இனியவாய் - நல்லாய் மற்று**
**யாருமில் நெஞ்சினேம் ஆகி உறை வேமை**
**ஈரும் இருள் மாலை வந்து”**[38]

என்ற ஐந்திணை ஐம்பது அடிகள் எடுத்துக்காட்டும்.

**குறிஞ்சி நிலத்திற்கான பொழுது:**

குறிஞ்சி நிலத்திற்குப் பெரும்பொழுதாக கூதிர்காலமும் சிறுபொழுதாக யாமமும் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனை,

**“குறிஞ்சி**
**கூதிர் யாமம் என்மனார் புலவர்” (தொல்.பொருள்.அகத்.7)**

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்தும். மேலும் பனியெதிர் பருவம் என்றழைக்கப்பெறும் முன்பனிக்காலமும் குறிஞ்சித்திணைக்கு உரியது என்பர். இதனை தொல்காப்பியர்,

**“பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப” (தொல்.பொருள்.அகத்.8)**

என்ற நூற்பாவால் விளக்குகின்றார். குறிஞ்சிநில மக்களின் வாழ்வியலில் கூதிர்காலமும், முன்பனிக்காலமும், யாமப்பொழுதும் புணர்தல் ஒழுக்கத்திற்கு ஏதுவாக அமைந்தன. குறிஞ்சிநிலப் பெண்கள் தினைப்புனம் காக்கும் பொருட்டு மலைப்பகுதிகளுக்குச் செல்வர். அப்பகுதிகளில் வேட்டையில் ஈடுபடும் குறிஞ்சி நிலத்து ஆண்கள், பெண்களுடன் காதலுறுவர். பின்னர் பகற்குறி, இரவுக்குறி நடைபெறும். திருமணத்திற்கு முன்னர் தலைவன், தலைவியின் இயற்கைப் புணர்வுக்கு கூதிர்காலம், முன்பனிக்காலம், யாமப்பொழுதும் சிறந்ததாக அமைந்தன.

**யாமப்பொழுது:**

யாமம் என்பது ‘நள்ளிரவு’ என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. இருப்பினும் தமிழ் நூல்கள் யாமத்தை முதல் யாமம், இடையாமம், கடையாமம் எனப் பகுக்கின்றன. பகலானது எவ்விதம் விடியல், நண்பகல், எற்பாடு என வகைப்படுத்தப்பட்டதோ அதேபோல் இரவும் முதல், இடை, கடை எனப் பிரிக்கப்பட்டது. இரவானது “ஞாயிறு பட்டது முதல் இருள் முதிரும் வரையுள்ள காலத்தை ‘மாலை யாமம்’ என்றும், இருள் முதிர்ந்து அர்த்தசாமமாகிப் பின் இருள் குறையும் வரையுள்ள காலத்தை ‘நடுநள்

யாமம்' என்றும், இருள் வரவரக் குறைந்து ஞாயிறு தோன்றும் வரையுமுள்ள காலத்தை வைகறை யாமம் என்றும் மூன்றாகப் பகுத்து வழங்கப்பட்டதை பத்துப்பாட்டு ஆய்வுகள் தெரிவிக்கின்றன."[39] குறிஞ்சிநிலத்தின் களவுக்குரிய காலமாக இடையாமமே **(நடுநள் யாமம்)** இடம்பெறுகின்றது. கூதிர் காலத்தும், முன்பனிக்காலத்தும் நடுயாமமே குறிஞ்சிநில வாழ்வியல் ஒழுக்கத்திற்கு வழிவகுத்தது.

குறிஞ்சி நிலத்தில் தலைவனும் தலைவியும் திருமணத்திற்கு முன்பு சந்திக்கும் காலத்தில் நடுயாமம் பெரும்பங்கு வகிக்கின்றது. தலைவன் தலைவியைக் காணவரும் நடுயாமப்பொழுதானது அச்சுறுத்தும் பொழுதாகும். நள்ளிரவாக இருப்பினும் தலைவன் தலைவியைச் சந்திப்பதற்கு பல தடைகளைத் தாண்டி வந்தான். குறிஞ்சி நிலத்தில் கள்ளுக்கடைகள் மிகுதியாக இருந்துள்ளன. அக்கடைகளில் உள்ள மக்கள் விழித்திருப்பர். ஒருவேளை அக்கடைத்தெருக்களின் ஒலி அடங்கினாலும், வீட்டின் செவிலித்தாய் உறங்காதிருப்பாள். வீட்டினைச் சுற்றி கையில் வேலேந்திய காவலரும், கூரிய பற்களைக் கொண்ட நாயும் காவல் பணி மேற்கொள்வர். நிலாவானது பகலுக்கு இணையாக ஒளிவீசும். எலிகளைக் கொன்று தின்னும் கோட்டான், பேய் திரியும் நடுயாமத்தில் கடுங்குரலெடுத்து அலறும். இத்தடைகள் அனைத்தையும் தாண்டி தலைவன் தலைவியைச் சந்திக்கும் நடுயாமம் இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதனை,

> **"துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்**
> **இலங்குவேல் இளையர் துஞ்சின் வைஎயிற்று**
> **வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்**
> **அரவவாய் ஞமலி மகிழாது மடியின்**
> **பகல்உரு உறழ நிலவுக்கான்று விசும்பின்**
> **அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே**
> **திங்கள் கல்சேர்பு கனைஇருள் மடியின்**
> **இல்எலி வல்சி வல்வாய்க் கூகை**
> **கழுதுவழங்கு யாமத்து அழிதகக் குழறும்" (அகம்.122:6-14)**

என்ற அடிகள் நிறுவும்.

**கூதிர்கால யாமம்:**

காதலர் தாம் கூடிக்களிப்பதற்கு ஏற்ற கூதிர்காலமும், யாமப்பொழுதும் பிரிந்திருப்போர்க்கு மிகுந்த துன்பத்தை நல்கும். வாடைக்காற்றானது மிகுதியாக வீசும் கூதிர்காலத்தின் நடுயாமப்பொழுதில் பொழியும் மழைத்துளியின் ஓசையும், மாட்டுத் தொழுவத்தில் கட்டப்பட்டிருக்கும் மாட்டின் மீதுள்ள ஈ ஒலிக்கும் போதெல்லாம், மாட்டின் கழுத்தில் விளங்கும் வளைந்த மணியினது நாவாலே முழங்குகின்ற பொருளற்ற ஒலியும் சேர்ந்து ஒலிக்கும். அம்மழையினால் நனைந்த குளிர்ச்சியான கண்களையும், காமநோயும் மிகுந்த தலைவி தலைவனைக் காண எண்ணி வருந்தினாள். இதனை,

> **“சிறைபனி உடைந்த சேயரி மழைக்கண்**
> **பொறைஅரு நோயொடு புலம்புஅலைக் கலங்கிப்**
> **பிறகும் கேட்குநர் உள்கொல்? உறைசிறந்து**
> **ஊதை தூற்றும் கூதிர் யாமத்து**
> **ஆன்துளம்பு உலம்புதொறும் உளம்பும்**
> **நாநவில் கொடுமணி நல்கூர் குரலே!”  (குறுந்.86:1-6)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**முன்பனிக்கால யாமம்:**

வாடைக்காற்று அதிகமாகும் பருவம் முடிந்து பனிப்பொழியும் முன்பனிக்காலமான மார்கழி, தை மாதங்களில் யாமப்பொழுதானது காதலை மிகுவிப்பதாய் அமைந்தது. தலைவனைப் பிரிந்த தலைவிக்கு பனிக்கால யாமம் வருத்தத்தை ஏற்படுத்தும். மாலைப்பொழுது நீங்கும் காலத்தில் இரவு வந்து சேரும். பனி மிகப்பெருகி விழுந்து துன்பம் செய்யும் நள்ளிரவில் இளமையுடன் மை பொருந்திய கண்கள் கண்ணீர் பெருக்கி அழும் என்பர். இதனை,

> **“மழை கழி விசும்பின் மாறி ஞாயிறு**
> **விழித்து இமைப்பது போல் விளங்குபு மறைய**
> **எல்லை போகிய பொழுதின் எல்உறப்**
> **பனிக்கால் கொண்ட பையுள் யாமத்து”  (நற்.241:7-10)**

என்ற அடிகள் விளக்கும்.

**மருதநிலத்திற்கான பொழுது:**

அறுவகைப் பெரும்பொழுதுகளையும், வைகறை, விடியல் எனும் சிறுபொழுதுகளையும் மருதநிலத்திற்குரியன என வரையறுத்துள்ளனர். இதனை,

**“வைகறை விடியன் மருதம்” (தொல்.பொருள்.அகத்.9)**

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்தும். மருதநிலத்திற்கும், நெய்தல் நிலத்திற்கும், பெரும்பொழுது வரையறுத்துக் குறிப்பிடப்படாமையால் அறுவகைப்பொழுதும் கொள்ளப்படுகின்றது.

மருதநிலமானது உழவுத் தொழிலையும் வேளாண்மையையும் அடிப்படையாய் கொண்டது. இத்தொழிலுக்கு உகந்த நேரம் வைகறையும், விடியற்காலையும் ஆகும். பயிர் உற்பத்தியின் வளர்ச்சியானது அறுவகைப் பெரும்பொழுதையும் வைகறை விடியல் எனும் சிறுபொழுதுகளின் பராமரிப்பையும் உள்ளடக்கியது ஆகும்.

**வைகறையும் விடியலும்:**

ஏனைய நிலங்கள் ஒவ்வொரு சிறுபொழுதே பெற்றிருக்க மருதம் மட்டும் இரண்டு சிறுபொழுதுகளைப் பெற்றிருத்தல் ஒழுங்கின்மை என்பர். வைகறையும், விடியலும் ஒன்றல்ல வேறுபட்டவை என்பதே சங்க இலக்கிய முறைமை. இரவின் பிற்கூறான வைகறையும், பகற்பொழுதின் முற்கூறான விடியலும் பரத்தையொழுக்கம் மேற்கொள்ளும் தலைவனுக்கு ஏற்றதாய் அமைந்துள்ளது.

மருதநிலத்துத் தலைவன் பரத்தை ஒழுக்கம் மேற்கொண்டு அவர்தம் வீட்டிலேயே தங்கி இரவு முழுதும் ஆடல், பாடல் என மகிழ்ந்து, பின்னர் தன் இல்லம் தேடிவருவதற்கு வைகறை, விடியல் எனும் பொழுதுகளே ஊராரின் பார்வையில் படாமல் திரும்புவதற்கு இயைந்ததாய் அமைந்துள்ளது. அந்நேரத்தில் தலைவியின் ஊடல் வெளிப்படுவது மருதநில ஒழுக்கத்திற்கு சிறப்பாகும்.

பரத்தையொழுக்கம் கொண்ட தலைவன், இரவு முழுதும் பரத்தையர் வீட்டில் தங்கி, வைகறையில் தலைவியைக் காணவரும் பொழுது பரத்தையுடன் கூடிக்களித்ததற்கான அடையாளத்தோடு வந்து நிற்பான். பரத்தையின் தலைப் பூவையும், மாலையுடன் சேர்த்து அணிந்திருக்கும் தலைவனை, வைகறைப்பொழுதில்

ஊடல் கொள்ளும் தலைவி தலைவனை ஊரார் பேசும் பழிச்சொல்லைவிட தலைவனின் அடையாளங்கள் கொடியவை என்றாள். இதனை,

**“அணைமென்தோள் யாம்வாட, அமர்துணைப் புணர்ந்துநீ**
**மணமனையாய் எனவந்த மல்லலின் மாண்பன்றோ?**
**பொதுக்கொண்ட கவ்வையின் பூவணிப் பொலிந்தநின்**
**வதுவைஅம் கமழ்நாற்றம் வைகறைப் பெற்றதை”**

**(மருதக்கலி.66:9-12)**

என்ற அடிகள் விளக்கும்.

பரத்தையொழுக்கம் மேற்சென்ற தலைவன் தலைவியைக் காண விழைவான். தலைவன் தன் பாங்கனை வாயில் வேண்டி அனுப்பும் போது, தோழி எதிர்கொள்வாள். தலைவன் பரத்தையின்பம் கண்டு கூடிக்களித்த அடையாளங்களுடன் வைகறைப் பொழுதில் வந்தாலும், கற்பென்னும் நற்குடியில் பிறந்த தலைவி ஊடல் கொண்டாலும், பின்பு ஏற்றுக் கொள்ளும் தன்மையள் என்பதைத் தோழி உரைத்தாள். இதனை,

**“காலை எழுந்து, கடுந்தேர் பண்ணி,**
**வால்இழை மகளிர்த் தழீஇய சென்ற**
**மல்லல்ஊரன்; எல்லினன் பெரிது என**
**மறுவரும் சிறுவன் தாயே;**
**தெறுவது அம்ம இத் திணைப்பிறத் தல்லே” (குறுந்.45:1-5)**

என்ற அடிகள் உணர்த்தும். ஊடல் கொண்ட தலைவி மீண்டும் தலைவனை ஏற்றுக் கொண்டதற்கு, எருமை கன்றை, நினைத்து பாலைச்சொரிய அப்பால் குளத்தில் உள்ள தாமரையில் வெண்புள்ளி போல் தோன்றும்; அப்பாலினை அன்னப்பறவை உண்ணும் நிகழ்வு தான் காரணம் என்றாள். இதனை,

**“கன்றுள்ளிச் சோர்ந்த பால் காலொற்றித் தாமரைப்பூ**
**வன்றுள்ளி அன்னத்தை ஆர்த்துவான் - சென்றுள்ளி**
**வந்து ஐ ஆ என்னும் வகையிற்றே மற்றிவன்**
**தந்தையார் தம்மூர்த் தகை”[40]**

தலைவனின் அன்பு தனக்குக்கிட்டாது தவறான ஒழுக்கத்தால் பரத்தையருக்குச் சொந்தமானாலும், தலைவி தலைவனை முழுமனதுடன் ஏற்றுக் கொள்வதே கற்பு எனப் போற்றப்பட்டது.

**நெய்தல் நிலத்திற்கான பொழுது:**

நெய்தல் நிலமானது, அறுவகைப் பெரும்பொழுதுகளையும், எற்பாடு எனும் சிறுபொழுதினையும் தன்னுட்கொண்டது. இதனை,

> **“எற்பாடு**
> **நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்”**
> **(தொல்.பொருள்.அகத்.10)**

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்கும். தனிமையுற்றுப் பிரிந்திருப்போருக்கு பகற்பொழுதினைவிட. இரவுப்பொழுது துன்பத்தை மிகுதிப்படுத்தும். இரவின் முற்கூறான மாலைக்கு ஏதுவாக அமைவது எற்பாடு ஆகும். சிறுபொழுதைப் பற்றி சொல்லும் போது தொல்காப்பியர் சூரிய உதய நேரத்தையோ சூரிய மறைவு நேரத்தையோ நேரடியாகக் குறிப்பிடும் எற்பாடு என்ற சொல்லைக் கையாளுகின்றார்.

**எற்பாடு மாலைப்பொழுதே:**

இருளோடு கூடிய மாலை பல வகையான ஒளிபெற்று வந்துசேரும் வேளையில் கணவரைப் பிரிந்த தலைவியரின் காமநோய் மிகும். இதனை நெய்தல்நிலத் தலைவி கணவரைப் பிரிந்த மகளிரது உயிரை வாங்கும் கொடிய காலம் என்று இதனை அறியாமல், அறிவு மயங்கியோர் காலங்களுள் இதுவும் ஒன்று என்று கூறி மகிழ்கின்றனர் எனச் சாடினாள். இதனை,

> **“செந்தீச் செவ்வழல் தொடங்க வந்ததை!**
> **வால்இழை மகளிர் உயிர்பொதி அவிழ்க்கும்**
> **காலை யாவது அறியார்**
> **மாலை என்மனார் மயங்கி யோரே”** **(நெய்தற்கலி.119:13-16)**

என்ற அடிகள் உணர்த்தும். காமநோய் துன்புறுத்தும் காலம் எற்பாடு என்பர். இதனை,

> **“காலை அரும்பிப் பகல்எல்லாம் போதாகி**
> **மாலை மலரும்இந் நோய்”**[41]

என்று உலகப் பொதுமறையும் சுட்டும். மாலைப்பொழுதின் வரவு கண்டு தலைவி மயங்குவாள். நெய்தல் நிலத்தலைவி தன் காதலன் கடற்சேர்ப்பனைத் தேடி கானல்வரிப்பா இசைத்தாள் என்பர். இதனை,

**“கதிரவன் மறைந்தனனே! கார்இருள் பரந்ததுவே**
**எதிர்மலர் புரைஉண்கண் எவ்வநீர் உகுத்தனவே!”[42]**

என்ற அடிகள் விளக்கும். தமிழிலக்கியச் சான்றுகளையும், முன்னோர் உரைமரபு களையும் நோக்கும் பொழுது எற்பாடு எனும் மாலைப்பொழுதே விடிபொழுதைவிட மகளிரை மயக்கும் தன்மை கொண்டுள்ளது என்பது விளங்கும்.

நெய்தல்நில உப்பங்கழியில் வரிசையாகப் பூக்கள் குவியவும் கடலானது ஒலிமிகுந்து ஒலிக்கவும் மீன் உண்ணும் பறவைக் கூட்டம் புன்னை மரக்கூடுகளில் சென்று சேரவும், சுற்றித்திரியும் வண்டுகள் ஆரவாரித்துக் கொண்டே தத்தம் இடங்களில் சென்று தங்கவுமான மாலைப்பொழுதில் நெஞ்சமானது பெருந்துயரை எண்ணி வருந்துவதாய்த் தலைவி உரைத்தாள். இதனை,

**“கானல், மாலைக் கழிப்பூக் கூம்ப**
**நீல்நிறப் பெருங்கடல் பாடுஎழுந்து ஒலிப்ப**
**மின்ஆர் குருகின் மென்பறைத் தொழுதி**
**குவைஇரும் புன்னை குடம்பை சேர**
**அசைவண்டு ஆர்க்கும் அல்குறு காலைத்**
**தாழை தளரத் தூங்கி மாலை**
**அழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்**
**காமர் நெஞ்சம் கையறுபு இனைய” (அகம்.40:1-8)**

என்ற அடிகள் உறுதிப்படுத்தும். கடற்சோலைகளில் வாழும் நாரைகள் கடலில் வாழும் சுறாமீன்களின் கூட்டத்தை சிதறடிக்கும்படி மோதும் அலைகளையுடைய கடல் துறையைச் சார்ந்த தலைவன் பொருளீட்டுவதற்காகப் பிரிந்து சென்றதால் மாலை நேரங்களில் வருந்தும் தலைவியை திணை இலக்கியப் பாடல்கள் பதிவு செய்துள்ளன. இதனை,

**“எறிசுறாக் குப்பை இனங்கலக்கத் தாக்கும்**
**எறிதிரைச் சேர்ப்பன் கொடுமை - அறியாகொல்**
**கானகம் நண்ணி அருள் அற்றிடக் கண்டும்**
**கானலுள் வாழும் குருக”[43]**

என்று ஐந்திணை எழுபது சுட்டும்.

**பாலை நிலத்திற்கான பொழுது:**

பாலைநிலமானது இளவேனில், முதுவேனில் எனும் பெரும்பொழுதுகளையும், நண்பகல் எனும் சிறுபொழுதையும் தன்னகத்தே கொண்டது. இதனை,

> **“நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
> **முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே”**
> **(தொல்.பொருள்.அகத்.11)**

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்கும். மேலும் முல்லையையும், குறிஞ்சியையும் அடுத்த கொடிய வழிநிலமே பாலை என்பதால் வேனில் காலத்தொடு பின்பனிக்காலமும் பாலைக்கான பெரும் பொழுதாய்க் கொள்ளப்பெறும். இதனை,

> **“பின்பனி தானும் உரித்தென மொழிப”     (தொல்.பொருள்.அகத்.12)**

என்று தொல்காப்பியர் விளக்கியுள்ளார்.

பின்பனிக்காலமானது மாசி, பங்குனி எனும் இரு மாதங்களைத் தன்னகத்தே கொண்டது. இருப்பினும் “வேனில் காலம் போன்று பின்பனிக்காலமானது சிறப்புடைய தன்று என்பதை வலியுறுத்துகின்றார் மு.சண்முகம் பிள்ளை.”[44]

**இளவேனில் பொழுது:**

இளவேனில் பொழுதானது பிரிந்து சென்று மீண்டு வந்த தலைவரைப் பெற்ற பெண்டிருக்கு இன்பத்தையும், வரவை எதிர்நோக்கும் பெண்டிருக்கு துன்பத்தையும் மிகுவிக்கும். “பிரிவிற்குரிய மாலைப்பொழுதில் கொளுத்தும் வெயிலில் தலைவன் வரவிற்காகத் தலைவி ஏங்கினாள் என்று பாடும் முறை தமிழ்முறை அன்று. தமிழுக்கு உறவுமுறையும் அன்று. தமிழுக்கு ஆரியத்திடம் இருந்து வந்த வரவுமுறை என்கின்றார் க.ப.அறவாணன்.”[45] ஆனால் இளவேனிற் பருவம் ஏனைய நாட்டின்கண் வாழ்வோரைக் காட்டிலும் வடவேங்கடம் தென்குமரியாயிடைக் கிடந்த தண்டமிழ் நாட்டின் கண் வாழ்வோர்க்கே பெரிதும் உரிமையுடையது என்பதை இளங்கோவடிகளின் சிலப்பதிகார வேனிற்காதை புலப்படுத்தும். இதனை,

> **“நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்**
> **தமிழ்வரம்பு அறுத்த தண்புனல் நல்நாட்டு**
> **மாட மதுரையும் பீடுஆர் உறந்தையும்**

**கலிகெழு வஞ்சியும், ஒலிபுனல் புகாரும்**
**அரைசு வீற்றிருந்த உரைசால் சிறப்பின்**
**மன்னன் மாரன் மகிழ் துணை ஆகிய**
**இன்இள வேனில் வந்தன இவண் என"[46]**

என்ற அடிகள் உணர்த்தும். இலக்கியங்களில் முதிர்வேனிலிற் பிரிந்தார் கார்காலத்தில் கூடுவர். பின்பனிக்காலத்தில் பிரிந்தார் இளவேனிலிற் கூடுவர். இளவேனில் கூடுதலுக்கே உரிய பருவமாகும். முதுவேனில் பிரிவுக்கு மட்டுமே உரியது.

வெள்ளி வட்டிலைப் போன்று பகன்றை மலர்ந்து விளங்கும் கடுமையான முன்பனி வீசும் காலத்தில் பிரிந்து சென்ற தலைவன் இளவேனிற்பருவத்தில் தலைவியைக் காண மீண்டு வருவதாகக் கூறிச்செல்வான்.

இளவேனிற்பருவமானது சுரிதகம் எனும் அணிகலனைப் போன்ற கோங்கமரத்தின் மலர்ந்த அரும்புகளாலும், கண்டவரை விருப்பங்கொள்ளச் செய்யும் ஈங்கைச் செடியின் நல்ல தளிர்களாலும் அழகுபெறும் தன்மையுடையது. இப்பருவத்தை முற்றாத இளவேனிற்பருவம் என்றும் சிறப்பித்தனர். இதனை,

**"அறவர் வாழி தோழி! மறவர்**
**வேல் என விரிந்த கதுப்பின் தோல**
**பாண்டில் ஒப்பின் பகன்றை மலரும்**
**கடும்பனி அற்சிரம், நடுங்கக் காண்தகக்**
**கை வில் வினைவன் தையுபு சொரிந்த**
**சுரிதக உருவின ஆகிப் பெரிய**
**கோங்கம் குவி முகை அவிழ, ஈங்கை**
**நல் தளிர் நயவர நுடங்கும்**
**முற்றா வேனில் முன்னி வந்தோரே!" (நற்.86:1-9)**

என்ற அடிகள் விளக்கும்.

**முதுவேனில் நண்பகல்:**

தலைவன் பிரிந்து செல்லும் காலமாக முதுவேனில் நண்பகல் பேசப்பட்டது. வறண்ட கொடிய தன்மை கொண்ட பாலை நிலத்தில் மராமரத்தின் ஒத்த பூங்கொத்தினை உண்ணும் வண்டு பசிநீங்காது பறந்து செல்லும். இளவேனிற் காலத்தில் கிடைக்கப்பெற்ற குளிர்ச்சியினால் அம்மரங்களில் ஓரிரு பூக்கள் மலர்ந்திருந்தன.

அத்தகைய வறண்ட பாலைச்சுரத்தில் நண்பகல் பொழுதில் பிரிந்து சென்ற தலைவனை எண்ணி தலைவி வருந்துவாள். இதனை,

> **“……………………… எஞ்சாது**
> **தீய்ந்த மராஅத்து ஓங்கல் வெஞ்சினை**
> **வேனில் ஓர்சிணர் தேனோடு ஊதி**
> **ஆராது பெயரும் தும்பி**
> **நீர்இல் வைப்பின் சுரன்இறந் தோரே”** **(குறுந்.211:3-7)**

என்ற அடிகள் விளக்கும். பாலை நிலமானது ஏனைய நிலைத்த நிலங்களைப் போன்றல்லாது பிரிவு, கூடல் எனும் இரு முரண்பட்ட ஒழுக்கங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளதாய் அமைந்துள்ளது. முல்லைநிலத்து ஆற்றியிருத்தலும், குறிஞ்சி நிலத்தின் கூடலும் இடம்பெறுதலை உணரமுடிகின்றது.

**கருப்பொருள் : உரிப்பொருள்:**

மக்கள் வாழ்வதற்கு அடிப்படையான நிலத்தையும் பொழுதையும் கொண்டு தோன்றும் பொருள்கள் கருப்பொருள் ஆகும். முப்பொருள்களில் உரிப்பொருளே உயிர்ப்பொருள் என்பர். உரிப்பொருளை விளக்கவந்தனவே மற்றைய இரண்டும். அவை உடலும், அணிகலன்களும். முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்று நிலப்பகுதியை ஐந்தாகப் பகுத்து அங்கு வாழும் மக்களின் வாழ்நிலைக்கேற்ப பெரும்பான்மை ஒழுக்கம் வரையறுக்கப்பட்டது. “இவற்றில் ஒழுக்கத்தின் பிறப்பிடமான நிலமும், பொழுதும், ஒழுக்கத்தின் பாடுபொருளாகக் கருப்பொருளையும், ஒழுக்க நிலையாக உரிப்பொருளையும் கொண்டு மக்கள் இயங்கி வந்தனர் என்கின்றார் கு.சிவப்பிரகாசம்.”[47]

சங்க இலக்கியப் பாடல்களில் திணை - துறை குறித்தோர் முதற்பொருளுக்கும், கருப்பொருளுக்கும் தலைமை கொடுத்தனர். எனினும் முன்னோர் முதற்பொருள் இல்லாத பாட்டையும், கருப்பொருள் இல்லாத பாட்டினையும் பாடினர். ஆனால் உரிப்பொருள் அற்ற பாடலை இயற்றியது இல்லை. பழந்தமிழரின் வாழ்வியலானது உரிப்பொருளை மையமாகக் கொண்டது. உரிப்பொருளானது முதற்பொருளுடனோ அல்லது கருப்பொருளுடனோ இணைந்து திணை இலக்கியங்களின் பாடுபொருளையும்,

வாழ்வியலையும் நிறைவு செய்துள்ளது. “உரிப்பொருளைத் தலைமையாகவும், பிற இரண்டைத் துணைமையாகவும் கொள்ளலே இலக்கியநீதி என்கின்றார் க.ப.அறவாணன்.”[48]

ஐந்திணைக்கும் உரிய உரிப்பொருளை புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடுதல் என ஒழுக்கவகைகளாக எடுத்துரைப்பர். இதனை,

**“புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே”** **(தொல்.பொருள்.அகத்.16)**

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்தும்.

**நிலங்களுக்குரிய உரிப்பொருள்:**

| **நிலம்** | - | **ஒழுக்கம்** |
|---|---|---|
| முல்லை | - | ஆற்றியிருத்தலும் ஆற்றியிருத்தல் நிமித்தமும் |
| குறிஞ்சி | - | புணர்தலும் புணர்தல் நிமித்தமும் |
| மருதம் | - | ஊடலும் ஊடல் நிமித்தமும் |
| நெய்தல் | - | இரங்கலும் இரங்கல் நிமித்தமும் |
| பாலை | - | பிரிதலும் பிரிதல் நிமித்தமும் |

மக்களை குறிஞ்சி மலையின் குளிர் அணையவைக்கும் பாலை வெயில் பிரிய வைக்கும். குறிஞ்சி வளம் காதலன் காதலியரைச் சேர்க்கும். மழையற்ற பாலைவனம், அவர் தம்மைப் பொருள்தேடப் பிரிக்கும். புணர்தல் உரிப்பொருளுக்குக் குறிஞ்சிக் கருப்பொருள் காரணம். பிரிதல் உரிப்பொருளுக்கு பாலைக் கருப்பொருள் காரணம். முதற்பொருளைச் சார்ந்து வருதலானும் உரிப்பொருளுக்குக் காரணமாய் இருத்தலானும் கருப்பொருள் நடுநிலையானது. தொல்காப்பியர் நிலங்களுக்கு உரிய கருப்பொருளாக தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், யாழ், பண் என்பனவற்றையும் நிலம் சார்ந்த பிறவற்றையும் வரையறுத்துள்ளார். இதனை,

**“தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப”** **(தொல்.பொருள்.அகத்.20)**

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்கும்.

நிலம் சார்ந்த பிற என்பனவற்றில் மக்கள், ஊர், நீர், பூ போன்றவையும் சுட்டப்பெறும். கருப்பொருள்கள் ஒவ்வொரு திணையிலும் தன்னளவில் தனித்தன்மை உடையனவாக இருத்தலையும் பிற திணைகளில் இல்லாதவற்றை உடையனவாக இருத்தலையும் வெளிப்படுத்துகின்றன. இவை அந்தந்த நிலத்தின் இயல்பை அடிப்படையாகக் கொண்டவை. மக்களின் வாழ்வியலைப் பொறுத்தமட்டில் இவை நில இயல்புக்கேற்ற விளைபொருட்களை மட்டுமே ஒவ்வொரு திணையும் உடையனவாக இருந்தன என்பதைக் காட்டுகின்றன. கவிதையியலைப் பொறுத்தமட்டில் மரம், பறவை, விலங்கு முதலானவை காதற்பொருளைப் பாடுவதற்கான பின்னணிகளாக அமைந்துள்ளன.

நிலம் இயற்கையானது. தனக்குரிய நிலைத்த இயல்புகளை உடையது. இந்நிலம் வெவ்வேறுபட்ட பருவச் சூழல்களுக்கு ஏற்ற மாற்றங்களை உடையது. நிலமும் பொழுதும் இயைந்த இயைபில் ஏற்படும் சூழல் குறிப்பிட்ட தாவரங்கள் வளருவதற்கும், குறிப்பிட்ட வகை விலங்குகள் வாழ்வதற்குமான வாய்ப்பானதாக அமைகின்றது. இந்த இயற்கைச் சூழலைப் பயன்படுத்தி மக்கள் தங்களுக்குரிய வாழ்வியல் ஆதாரங்களைக் கட்டமைத்துக் கொள்ளும் இயல்புடையவராக உள்ளனர்.

ஐந்திணை மக்களும் அந்தந்த நிலத்தின் இயற்கைச் சூழலுக்கு ஏற்ற விளைபொருட்களை உற்பத்தி செய்து கொண்டனர். இந்த உற்பத்திப் பொருட்களுடன் செயற்கையாகப் படைத்துக் கொள்ளப்பட்ட பொருட்களையும் கருப்பொருட்களாக உரையாசிரியர்கள் பட்டியலிட்டுக் காட்டியுள்ளனர்.

**நிலங்களுக்குரிய கருப்பொருள்கள்:**

| | **முல்லை** | **குறிஞ்சி** | **மருதம்** | **நெய்தல்** | **பாலை** |
|---|---|---|---|---|---|
| தெய்வம் | மாயோன் (திருமால்) | சேயோன் (முருகன்) | வேந்தன் (இந்திரன்) | வருணன் | கொற்றவை (கனலி) |
| மக்கள் | தோன்றல் ஆயர் ஆய்ச்சியர் | வெற்பன் குறவர் குறத்தியர் | ஊரன், உழவர், உழத்தியர் | சேர்ப்பன் பரதவர் பரத்தியர் | எயினர் எயிற்றியர் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உணவு | வரகு<br>சாமை | மலைநெல்<br>தினை | செந்நெல்<br>வெண்ணெல்<br>கரும்பு | மீன்<br>உப்புக்குப்<br>பெற்ற<br>பொருள் | சூறையாடலால்<br>வரும் பொருள் |
| விலங்கு | முயல்<br>மான் | புலி, கரடி<br>சிங்கம்<br>யானை | எருமை<br>நீர்நாய் | முதலை<br>சுறா | வலியிழந்த<br>யானை புலி<br>செந்நாய் |
| பூ | முல்லை<br>தோன்றி | குறிஞ்சி<br>காந்தள்<br>சுனைக்<br>குவளை | செங்கழுநீர்<br>பூ, தாமரை | தாழை<br>நெய்தல் | குரவம்,<br>பாதிரி |
| மரம் | கொன்றை<br>காயா | அகில்<br>வேங்கை<br>தேக்கு<br>மூங்கில்<br>ஆரம் திமிசு | காஞ்சி<br>மருதம்<br>வஞ்சி | புன்னை<br>ஞாழல்<br>கண்டல் | வற்றின<br>இருப்பை<br>பாலை<br>ஓமை<br>உழிஞை |
| பறவை | காட்டுக்கோழி<br>மயில் | கிளி, மயில் | நாரை<br>நீர்க்கோழி<br>அன்னம் | கடற்காகம்<br>அன்றில்<br>அன்னம் | புறா,<br>பருந்து<br>கழுகு |
| ஊர் | பாடி, சேரி | சிறுகுடி<br>குறிச்சி | பேரூர்<br>மூதூர் | பட்டினம்<br>பாக்கம் | குறும்பு |
| நீர் | காட்டாறு<br>குறுஞ்சுனை | அருவி<br>சுனைநீர் | மனைக்<br>கிணறு<br>பொய்கை<br>யாற்று நீர் | மணற்<br>கிணறு<br>உவர்க்கழி | வற்றிய சுனை<br>கிணறு |
| பறை | ஏறுகோட்பறை | தொண்டகம்<br>முருகியம் | மணமுழவு<br>நெல்லரி<br>கிணை | மீன்<br>கோட்பறை | துடி சூறை<br>கோட்பறை |
| யாழ் | முல்லை<br>யாழ் | குறிஞ்சி யாழ் | மருதயாழ் | விளரியாழ் | பாலையாழ் |
| பண் | முல்லைப்பண்<br>சாதாரிப்பண் | குறிஞ்சிப்பண் | மருதப்பண் | செவ்வழிப்<br>பண் | பஞ்சுரப்பண்<br>(பாலைப்பண்) |
| தொழில் | ஏறுதழுவல்<br>நிரை<br>மேய்த்தல் | தேன்<br>எடுத்தல்<br>(தேன்<br>அழித்தல்)<br>கிழங்கு<br>அகழ்தல்<br>தினை<br>முதலியன<br>விளைத்தல் | நெல்லரிதல்<br>களை<br>பறித்தல்<br>விளைத்தல்<br>வித்தல் | மீன்<br>பிடித்தல்<br>உப்பு<br>விளைத்தல்<br>நாவாய்<br>செலுத்துதல் | வழிப்பறி<br>நிரைகவர்தல் |

**பழந்தமிழ் மக்களின் வாழ்வியல்:**

சங்ககால மக்களின் வாழ்க்கை முறையினை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற நிலப்பாகுபாட்டின் மூலமாகவும், தொழிலில் கொண்டிருந்த ஈடுபாட்டின் காரணமாகவும் அடையாளம் காணமுடியும். அம்மக்கள் தாம் செய்யும் தொழிலையே துணையாகக் கொண்டனர். "உணவு சேகரிப்போர், வேட்டையாடுவோர், பண்டைய வேளாண் குழுவினர் (புராதன விவசாயம் செய்வோர்) கால்நடை வளர்ப்போர் ஆகியோர் வாழ்ந்த இனக்குழுச் சமுதாயத்தில் முழு ஒற்றுமையும், குலச்சமத்துவமும் அவர்களுடைய வளமையாக இருந்தன"[49] என்கின்றார் க.திலகவதி.

முல்லை நிலத்திலே ஆயர், குறிஞ்சி நிலத்திலே குறவர், மருத நிலத்திலே உழவர், நெய்தல் நிலத்திலே பரதவர், பாலை நிலத்திலே எயினர் என்ற பகுப்புடன் வாழ்ந்தனர். மேலும் இவர்களேயன்றி பழந்தமிழகத்தில் பிட்டு வாணிகம் செய்வாரும், அப்பம் சுடுவாரும், கள்விற்கும் வலைச்சியரும், மீன் விற்கும் பரதவரும், வெண்மையான உப்புவிற்கும் உமணரும், வெற்றிலை விற்பவரும், வாசனைப் பொருள்கள் விற்பவரும், பலவகையான ஊன்களை விற்பவரும், எண்ணெய் வாணிகரும், நெருக்கமாக வாழும் பலவித பொருட்களைக் கொண்ட கடைத்தெருக்கள் மிகுந்திருந்தன. அக்கடைத்தெருக்களில் உலோகங்களை உருக்கிப் பொருள் செய்வாரும், செம்புப்பாத்திரங்கள் செய்வாரும், மரவேலை செய்யும் தச்சரும், வலிய கையினையுடைய கொல்லரும், சித்திரக்காரர்களும், மண்பொம்மைகள், சிலைகள் செய்பவரும், பொற்பணி செய்யும் தட்டாரும், இரத்தின வேலைகள் செய்பவரும், தையற்காரரும் என கைத்தொழிலால் பல்வேறுபட்ட மக்களும் வாழ்ந்தனர். இதனை,

> **"காழியர் கூவியர் கள்நொடை ஆட்டியர்**
> **மீன்விலைப் பரதவர் வெள்உப்புப் பகருநர்**
> **பாசவர் வாசவர் பல்நிண விலைஞரோடு**
> **ஓசுநர் செறிந்த ஊன்மலி இருக்கையும்**
> **கஞ்ச காரரும், செப்புசெய் குநரும்,**
> **மரம்கொல் தச்சரும், கருங்கைக் கொல்லரும்**
> **கண்ணுள் வினைஞரும், மண்ணீட் டாளரும்**

**பொன்செய் கொல்லரும் நன்கலந் தருநரும்**
**துன்ன காரரும், தோலின் துன்னரும்"[50]**

என்ற சிலப்பதிகார அடிகள் விளக்கும். **'இலக்கியம் என்பது காலக் கண்ணாடி'** ஐந்திணைகளிலும் வாழ்ந்த பழந்தமிழ் மக்களின் வாழ்வியல் நெறிகளையும், வாழ்க்கைக் கூறுகளையும் அறிந்துகொள்ளப் பயன்படும் பண்பாட்டுப் பெட்டகமாகவும், வரலாற்றுக் கருவூலமாகவும் சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. "திணைப்பகுப்பையும், ஒழுக்கப் பண்பையும் ஏற்று வாழ்ந்த தமிழ்ச் சமுதாயத்தின் பிரதிபலிப்பே இலக்கியமாக வெளிப்பட்டிருக்கின்றது"[51] என்கின்றார் கு.சிவப்பிரகாசம்.

பழந்தமிழ் மக்கள் வாழ்ந்த முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை முதலான நிலப்பகுதிகளின் இயற்கை அமைப்பையும், மக்களின் வாழ்வியல் நிகழ்வுகளையும் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியமுடியும். செம்மாந்த பண்புகளைக் கொண்ட சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்கள் எனப்படுகின்றன. "செவ்வியல் இலக்கியங்கள் மிகப்பழமை பெற்றதாக இருத்தல் வேண்டும். பழமையான மக்களின் வாழ்க்கையை, வாழ்க்கைக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு அவற்றைப் பிரதிபலித்து நிற்றல் வேண்டும்"[52] என்கின்றார் ச.அகத்தியலிங்கம்.

**முல்லைநில வாழ்வியல்:**

முல்லை நிலமானது செம்மண் பரப்பை உடையது. பயிரின்றி தரிசாய்க் கிடந்த இடத்தைக் **'கொல்லை' (அகம்.89:17)** எனவும், மரங்கள் நிறைந்த பகுதியை **'புறவு' (சிறுபாண்.169)** எனவும், நறுமணமிக்க மலர்களால் நிறைந்த பகுதியை **'கானம்' (குறுந்.21:4)** எனவும் குறிப்பிட்டனர்.

உழுது உழுது பண்படுத்தப்பட்ட முல்லை நிலமானது பறவை இனங்களும், விலங்கினங்களும் தம் காதலைப் பகிர்ந்துகொள்ள ஏற்ற இடமாக விளங்கியது. அந்நிலத்தில் மரக்கொம்புகளில் மலரும் கொன்றை, காயா போன்றவையும், கொடியில் மலரும் முல்லை, தளவம், பிடவம் போன்ற மலர்களும் மலர்ந்து நறுமணம் கொண்ட சோலையாக்கின. இதனை,

**“புள்ளு மாவும் புணர்ந்தினி துகளக்**
**கோட்டவுங் கொடியவும் பூப்பல பழுனி**
**மெல்லிய லரிவை கண்டிகு**
**மல்ல லாகிய மணங்கமழ் புறவே”     (ஐங்.414:1-4)**

என்ற அடிகள் விளக்கும். அழகிய நறுமணமிக்க உயிரினங்கள் தங்கள் இணையுடன் மகிழ்ந்து வாழும் ஈரப்பசை கொண்ட முல்லை நிலமானது வாழ்வியல் கூறுகளான காதல், இயற்கை வளம், உழவுத்தொழில், உயிரினங்களைக் கொண்டு வாழ்வதற் கேற்ற நிலஅமைப்பைப் பெற்றிருந்தது.

“முல்லை நிலத்தின் இயற்கை வளம் பற்றிய பதிவுகள் சங்க இலக்கியத்துள் பல இடங்களில் சுட்டப்பெறுகின்றன.”[53]

முல்லை நிலமக்கள் ஈரடியால் உலகை அளந்த திருமகளாகிய மறுவினை மார்பில் அணிந்த கடல் நிறத்தவனாகிய திருமாலை வழிபட்டனர். இதனை,

**“இருநிலம் கடந்த திருமறு மார்பின்**
**முந்நீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்த்**
**திரைதரு மரபின் உரவோன் உம்பல்**
**மலர்தலை உலகத்து மன்னுயிர் காக்கும்”**
**(பெரும்பாண்.29-32)**

என்ற அடிகள் விளக்கும். திருமால் மாவலி மன்னனின் ஆணவத்தை அடக்குவதற்காக அவன்பால் சென்று மூவடி மண் இரந்து பெற்று, மண்ணுலகை ஓர் அடியாலும் விண்ணுலகை மற்றோர் அடியாலும் அளந்து கொண்டவன் என்பது புராணக்கதை. இதனை,

**“மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா வகைமுடியத்**
**தாவியசே வடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து”[54]**

என்ற சிலப்பதிகார அடிகளும் எடுத்துரைக்கும்.

“ஆயர்கள் திருமால் அன்பினர்; திணைத்தெய்வப் பற்றுடையவர்; நானில மக்களுள்ளும் முல்லைத்திணையினர் எவ்வகை வினைக்கும் தெய்வம் பரவுவர்; எல்லாம் தெய்வச் செயலெனக் கருதுவர்; அதனாற்போலும் தொல்காப்பியர் “மாயோன் மேய காடுறை உலகம்” என்று தெய்வ வரிசையில் முல்லைக்கு முதலிடம் அளித்தனர்”[55] என்கின்றார் வ.சுப.மாணிக்கம்.

முல்லை நிலத்திலும் ஏனைய நிலங்களிலும் வாழ்ந்த மக்களின் திணை நிலைப்பெயரினைக் குலப்பெயர் எனவும், தொழிற்பெயர் எனவும் வரையறுத்துள்ளார் தொல்காப்பியர். இதனை,

**“பெயரும் வினையுமென்று ஆயிரு வகைய**
**திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே”**
**(தொல்.பொருள்.அகத்.22)**

என்ற நூற்பா உணர்த்தும். முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்களின் திணைநிலைப் பெயரானது குலப்பெயராக ஆண்களை உணர்த்துகையில் ஆயர், வேட்டுவர் எனவும், தொழிற்பெயராகையில் முல்லை நிலத்திடத்து ஆட்சி புரியும் கிழவர் (உரிமையாளர்) குறும்பொறைநாடன் எனவும் அழைக்கப்பட்டதை தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**“ஆயர் வேட்டுவர் ஆடுஉத் திணைப்பெயர்**
**ஆவயின் வருஉம் கிழவரும் உளரே”** **(தொல்.பொருள்.அகத்.23)**

என்ற நூற்பா புலப்படுத்தும். முல்லை நிலமானது மருதம், நெய்தல் ஆகிய மென்மையான நிலங்களுக்கு இடைப்பட்ட பகுதியானதால் இது ‘இடைநிலம்’ எனவும் பெயர்பெறும். அதனால் இந்நிலத்தில் வாழ்ந்த மக்கள் இடையர் எனவும், குற்றமில்லாத கோவலர் எனவும், அறம்புரி நெஞ்சுடைய ஆயர் எனவும் குறிக்கப்பட்டனர். “இடையருள் உயர்ந்த வகுப்பினரைக் குறும்பொறை நாடன், தோன்றல், மனைவி, கிழத்தி என்று அழைத்தனர். இடையர், ஆயர், இடைச்சியர், ஆய்ச்சியர் என்போர் பொதுமக்களாக நடுத்தர வகுப்பினராகக் கருதப்பட்டனர்”[56] என்கின்றார் ஏ.சுவாமிநாதன்.

முல்லைநில மக்களின் வாழ்வியலில் பசுக்கள், ஆடுகள் போன்ற கால்நடைகளின் வளர்ப்பு மிகுதியாக இருந்தது. இம்மக்கள் பால், தயிர், நெய் முதலியனவற்றை தானும் உண்டு, மற்றவருக்குக் கொடுத்து அதற்குப் பதிலாக நெல்லையும் பெற்று உண்டனர்.

எளியமுறை விவசாயத்தை அறிமுகப்படுத்திய முல்லைநில மக்கள் தங்களின் நிலத்தில் விளைந்த தினையரிசிச் சோற்றையும், வரகரிசிச் சோற்றையும், அவரைப்

பருப்பையும், வரகுச்சோறையும் சேர்த்துச் சமைத்த பருப்புச் சோற்றையும் உணவாகக் கொண்டனர். இதனை,

**“நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன**
**குறுந்தாள் வரகின் குறள்அவிழ்ச் சொன்றி**
**புகர்இணர் வேங்கை வீகண் டன்ன**
**அவரை வான்புழுக்கு அட்டிப் பயில்வுற்று**
**இன்சுவை மூரல் பெறுகுவிர்” (பெரும்பாண்.192-196)**

என்ற அடிகள் விளக்கும். மேலும் பருப்புச்சோறு **‘மூரல்’** எனவும் **‘கும்மாயம்’** எனவும் குறிப்பிடப்பட்டது. முல்லைநிலத்து மகளிர் வரகு அரிசியை உரலில் குற்றி கிணற்றில் நீர் முகந்து பானையில் உலை வைத்து அடுப்பு மூட்டி உணவு சமைத்துள்ளனர். இதனை,

**“சிறுதலைத் துருவின் பழுப்புஉறு விளைதயிர் அரிசியொடு**
**இதைப்புனவரகின் அவைப்புமான்” (அகம்.394:1-3)**

என்ற அடிகள் உணர்த்தும். இந்நிலத்து மக்கள் உணவு உற்பத்தி செய்வதோடு உணவு சேகரிப்பிலும் ஈடுபட்டுள்ளனர். “உணவு சேகரிப்பு என்பதிலிருந்து தான் மனித சமூகத்தின் வரலாறு ஆரம்பமாகின்றது என்பது அ.கா.பெருமாள் கருத்து.”[57]

முல்லைநில மக்கள் உணவு சேகரிப்பதற்காக வேட்டையாடினர். வேட்டையாடிய மானின் இறைச்சியைத் தோட்டத்தில் அறுத்து சமைத்துள்ளனர். இறைச்சியை உண்ணும் போது கள்ளினைப் பருகியும் மகிழ்ந்தனர். இதனை,

**“தினைக்கள் உண்ட தெறிகோல் மறவர்**
**விதைத்த வில்லர், வேட்டம் போகி**
**முல்லைப் படப்பைப் புல்வாய் கெண்டும்” (அகம்.284:8-10)**

என்ற அடிகள் உணர்த்தும். ஆநிரைகளிடமிருந்து பெறப்பட்ட பால், மோர், வெண்ணெய், நெய் முதலியனவும், புற்றுக்களில் பிடிக்கப்பட்ட ஈசலும், கார்காலத்தினால் புளிப்புத்தன்மை பெற்ற இனிய கனிகளால் ஆன புளியஞ்சோறும் உணவாக்கப்பட்டன. இதனை,

**“கார்வாய்த்து ஒழிந்த ஈர்வாய்ப் புற்றத்து**
**ஈயல்பெய்து அட்டஇன்புளி வெஞ்சோறு**
**சேதான் வெண்ணெய் வெம்புறத்து உருக” (அகம்.394:4-6)**

என்ற அடிகள் விளக்கும். முல்லைநிலப் பகுதி அடர்ந்த மரங்களைக் கொண்ட காட்டுப் பகுதியாக இருப்பினும் அங்கு மக்களை துன்புறுத்தும் விலங்கினங்கள் அல்லாது மென்மைத் தன்மையும், மருளும் குணமும் கொண்ட முயல், மான் போன்றவையே இடம்பெறுகின்றன. கார்கால மாலைப்பொழுதில் முல்லையாகிய அழகிய காட்டில் முயல்குட்டிகள் துள்ளி விளையாண்டுள்ளன. இதனை,

**"முயற்பறழ் உகளும் முல்லையெம் புறவில்**
**கவைக்கதிர் வரகின் சீறூர் ஆங்கண்" (அகம்.384:5-6)**

என்ற அடிகள் காட்சிப்படுத்தும். மனித நடமாட்டத்திற்கு மான்கள் அஞ்சுவது இயல்பு. ஆனால் முல்லை நிலத்திலோ மாலைப்பொழுதில் மான்கள் மரத்தின் கீழே திரளாகக் கூடியிருந்தன. இந்நிகழ்வு கருப்பொருளுக்கும் மக்களுக்கும் இடையேயுள்ள இணக்கமான உறவுநிலையை வெளிப்படுத்துகின்றன. கார்கால மாலைப்பொழுதில் காட்டின் உயிரினங்கள் உரத்த குரலொலி கொண்டு தங்கள் இணைகளை அழைக்கும். ஆண் மான் தன் பெண் மானுடன் முல்லைக் கொல்லையில் உகளும் என்பதை,

**"மடக்கண் பிணையொடு மறுகுவன உள" (மதுரை.276)**

என்ற அடி விளக்கும். முல்லை நிலத்திற்கென 'இரலைமான்' குறிப்பிடப்பட்டுள்ளது. இரலை, நவ்வி, மரையான் என்று மூன்று வகையான மான்கள் காணப்படுகின்றன. இவற்றுள் இரலை மான் மிகவும் அழகுடையது. ஆண் இரலைமானின் கழுத்துப்பகுதி கருமையாகவும், அடிப்பகுதி வெண்மையாகவும் காணப்பட்டது. பெண் இரலை மானுக்கு இத்தனியழகு கிடையாது. இதனை,

**"................................ இருங்கேழ்**
**இரலை சேக்கும் பரல்உயர் பதுக்கை" (அகம்.91:9-10)**

என்ற அடிகள் விளக்கும்.

கொன்றை, குருந்தம், காயா முதலியவை முல்லை நிலத்தின் மரங்களாகக் குறிக்கப்பட்டன. கொன்றை மரம் அதன் மலராலும், கொன்றைக் காய்களினால் உருவாக்கப்படும் கொன்றைக் குழலாலும் சிறப்புப்பெற்றது. குருந்தமும், காயாவும் மலர்களினாலே வருணிக்கப்பட்டன. முல்லை, பிடவம், தளவம், தோன்றி, பீரம், பித்திகம் முதலியன முல்லை நிலத்திற்குரிய மலர்களாகச் சுட்டப்பட்டன. "சூடாமணி

நிகண்டு பூவிற்கு ‘மலர்’, ‘போது’, ‘அலர்’, ‘தார்’, ‘தாமம்’, வீ, இணர், துணர், சமனசம், குசுமம் எனப்பல பொருள் தருவதை வெற்றிச்செல்வன் குறிப்பிட்டுள்ளார்.”[58] இதனை,

**“தகைபெறு குசுமம் போது தாரலர் சமனசந்தான்**

**மிகுமண மலரே தாமம் வீயிணர்துணர் பூவின் பேர்”**[59]

என்ற அடிகள் உணர்த்தும். பல பெயர்களைக் கொண்ட மலர்கள் அவை மலர்கின்ற இட அமைவால் கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என நான்கு வகையாகச் சுட்டப்படுகின்றது. இதனை,

**“கோட்டினும் கொடியினும் நீரினும் நிலத்தினும்**

**காட்டிய பூவிற் கலந்த பித்தையன்”**[60]

என்று சிலப்பதிகாரமும்,

**“கோட்டு மலரும் நில மலரும்**

**குளிர்நீர் மலரும் கொடுங்கொடியின்**

**தோட்டு மலரும்”**[61]

என்று பெரியபுராணமும்,

**“கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ வோடு**

**புகர்ப்பூ என்றிவை நால்வகைப் பூவே”**[62]

என்று பிங்கல நிகண்டும் உணர்த்தும். கோட்டுப்பூ என்பது மரத்தின் கிளைகளில் பூக்கும் பூவாகும். முல்லைநில மரங்களான கொன்றை, காயா, குருந்தம் போன்றவற்றின் மலர்கள் கோட்டுப்பூ வகையைச் சார்ந்தவையாகும். இக்கோட்டுப் பூவினை மரப்பூவென்றும், கிளைப்பூவென்றும் சினைப்பூவென்றும் அழைப்பர்.

கொன்றை மரத்தின் காய்கள் நச்சுத்தன்மை கொண்ட விதைகளைத் தன்னுள்ளே கொண்டவை. முல்லைநில மக்கள் இம்மரத்தில் காய்களைத் துளைத்து குழல் செய்து இசைத்தனர். நிறவொப்புமை காரணமாக பொன் போன்று விளங்கும் பூக்களில் நிறைவான இடத்தைப் பெற்று விளங்கும் கொன்றைப்பூவானது சிவனுக்குரிய வழிபாட்டு மலராகவும் விளங்குகின்றது. “கொன்றை மலர்ந்து அழகூட்டுவதை சங்க இலக்கியங்கள் பலவிடத்தும் பதிவு செய்துள்ளன.”[63] தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஏற்படும் பசலையை கொன்றைப்பூவின் நிறத்தொடு ஒப்பிடுவர். இதனை,

**"............................ கொன்றை**

**ஊழுறு மலரிற் பாழ்பட முற்றிய"** **(அகம்.398:4-5)**

என்ற அடிகள் விளக்கும். காய்க்காத மரம் **'காயாமரம்'** ஆகும். இம்மரத்தின் மலர்கள் நீலநிறமும், கருமைநிறமும் கலந்து மணி போன்ற வடிவம் கொண்டு ஒளி வீசுவதைப் போன்ற பொழிவான மலர்களாகக் காணப்படுகின்றன. "காயாமலரின் தன்மை பற்றிய பதிவுகள் சங்க இலக்கியத்துள் பரவிக் காணப்படுகின்றன."[64]

ஆநிரைகளைக் காவல்புரியும் திருமாலின் திருவுருவ நிறத்துடன் ஒப்பிடத்தக்கது காயாமலர் என்பதை புறப்பொருள் வெண்பாமாலை பூவை நிலை எனும் துறையாகவே விளக்குகின்றது. இதனை,

**"கறவை காவலன் நிறனொடு பொரீஇப்**

**புறவலர் பூவைப் பூப்பக்கழந் தன்று"**[65]

என்ற அடிகள் உணர்த்தும். மலைப்பகுதிகளில் புதர்ச்செடிகளாய் வளரும் குருந்தம் முல்லை நிலக்காட்டாறுகளின் ஓரத்தில் மரங்களாக வளர்ந்திருந்தன. இம்மரத்தின் மலர்கள் அழுக்குத் தன்மை கொண்ட வெண்ணிறமுடையன. பழந்தமிழ் மக்களின் வாழ்வியலில் கருப்பொருள்கள் இன்றியமையாதன. அவற்றுள் பூக்கள் சிறப்பிடம் பெறுகின்றன. மலர்கள் மென்மைக்குச் சான்றாக விளங்குவதுடன் **'ஒருநாள் தேவதை'** எனவும் வருணிக்கப்படுகின்றன. அவ்வகையில் முல்லை நிலத்தவரின் வாழ்வியல் நெறியுடன் ஒன்றிய தொடர்புடையது முல்லை மலராகும்.

முல்லை சூடுவதற்கெனத் தனித்தன்மை சுட்டப்பட்டது. கற்பில் சிறந்தவர்கள் மட்டுமே முல்லை சூடத் தகுந்தவர்கள் என்பதால் தமிழர் வாழ்வியலில் **'கற்பின் மலர்'** எனப் போற்றப்பட்டது. விறலியரின் வருணனை கூறுமிடத்து மான் போல் பார்வையும், முல்லை சூடுவதற்கு ஏற்ற கற்பினையும் கொண்ட மென்மையானவள் என்பதை,

**"முல்லை சான்ற கற்பின்; மெல் இயல்;**

**மடமான் நோக்கின் வாள்நுதல் விறலியர்"** **(சிறுபாண்.30-31)**

சிறுபாணாற்றுப்படை உணர்த்தும். கற்புடை மகளிர் தலையில் சூடிக்கொள்ளும் முல்லை **'நன்முல்லை', 'சந்தனமுல்லை'** எனவும் அழைக்கப்படுகின்றது.

வெண்மையான முல்லை மலரானது பெண்களின் பல்லுக்கு உவமையாகக் கூறப்பட்டது. தலைவியைப் பிரிந்துள்ள தலைவன் முல்லை மலர்ந்து இருப்பது தன் துயரைப் பார்த்து எள்ளி நகையாடுவதாய் உள்ளதாகக் கூறினான். இதனை,

**"முல்லை வாழியோ முல்லை நீநின்**
**சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை**
**நடுவை போலக் காட்டல்**
**தகுமோ மற்றிது தமியோர் மாட்டே" (குறுந்.162:3-6)**

என்ற அடிகள் விளக்கும். கார்கால மாலையில் மலர்கள் மலர்ந்து மணம் பரப்புவது இயல்பு. அம்மலரையும் உயிர்ப் பொருளாகக் கருதி தலைவன் வருந்துவது இயற்கையோடு இயைந்த வாழ்வினைச் சிறப்பிக்கின்றது.

நாள்தோறும் மலரும் முல்லையின் ஒருவகையே தளவம். இம்மலரின் புற இதழ்களின் வெளிப்பக்கம் சிவப்பாக இருக்கும். இதனை **'செம்முல்லை',** **'சாதிமுல்லை'** எனவும் அழைப்பர்.

முல்லையின் மணத்தைவிட நறுமணம் மிகுந்ததால் இந்நில மகளிர் தளவமலரை விரும்பிச் சூடினர். கார்கால மழையை ஏற்று தளவம் மலரும் காட்டில் வளரும் புதர்ச்செடியில் தோன்றுவது பிடவம் மலர். முள் போன்று காட்சிதரும் பிடவம் வெண்மைநிறம் கொண்டது. பிடவமலர் தளவமலரொடு இணைந்தே மலரவல்லது. இதனை,

**"கண்அகன் இருவிசும்பில் கதழ்பெயல் கலந்துஏற்ற**
**தண்நறும் பிடவமும் தவழ்கொடித் தளவமும்" (முல்.கலி.102:1-3)**
**"வெண்பிடவு அவிழ்ந்த வீகழ் புறவு" (அகம்.184:7)**
**"பிடவ மலரத் தளவ நனையக்" (ஐங்.499:1)**

என்ற அடிகள் தெளிவுபடுத்தும். விளக்கு எரிவதைப் போன்ற வடிவம் கொண்டது தோன்றி மலர். இதனை,

**"சுடர்புரை தோன்றிப் புதல்தலைக் கொளாஅ" (அகம்.364:6)**

என்ற அடிகள் உணர்த்தும். முல்லைநிலத்து வேலிகளில் கொடி போன்று படர்ந்து வெண்ணிற மலர்களைத் தருவது முசுண்டைக் கொடி. இதனை,

**“குவைஇலை முசுண்டை வெண்பூக் குழைய” (அகம்.94:2)**

என்ற அடிகள் உணர்த்தும். முல்லை நிலத்தின் மலர்கள் கார்காலத்தில் மலர்வன. பித்திகமும், பீரமும் மாரி என்ற அடைமொழி கொண்டே அழைக்கப்படுகின்றன. பித்திகம் மாரிக்கால மாலையில் மலர்வதால் இம்மலரின் அரும்புகள் மலர்வதைக் கொண்டே மகளிர் மாலைக்காலத்தை அறிந்துள்ளனர். இதனை,

**“செவ்வி அரும்பின் பைங்கால் பித்திகத்து**
**அவ்விதழ் அவிழ்பதங் கமழப் பொழுதறிந்து” (நெடுநல்.40-41)**

என்ற அடிகள் விளக்கும். உடல் சூட்டினைத் தணித்து குளிர்ச்சியாக வைத்துக் கொள்ளும் தன்மை கொண்ட இம்மலர் கூர்மையான முகையினைக் கொண்டது. சிலப்பதிகாரத்தில் மாதவி பித்திகத்தின் அரும்பினை எழுத்தாணியாகக் கொண்டு செம்பஞ்சுக் குழம்பில் தேய்த்து, கோவலனுக்குத் தாழை மடலில் கடிதம் எழுதிய செய்தி இங்கு குறிப்பிடத்தக்கது. இதனை,

**“ஒருமுக மன்றி உலகுதொழு திறைஞ்சும்**
**திருமுகம் போக்குஞ் செவ்விய ளாகி**
**அலத்தகக் கொழுஞ்சேறு அளைஇ அயலது**
**பித்திகைக் கொழுமுகை ஆணி கைக்கொண்டு”[66]**

என்ற அடிகள் தெளிவுபடுத்தும். முல்லைநிலத்தில் காணப்பெறும் பீர்க்கங்கொடியினை ‘பீரம்’ என்றும் ‘பீர்’ என்றும் வழங்குவர். இதன் மலர்கள் மஞ்சள் நிறம் கொண்டவை. இதனை,

**“பொன் போல் பீரம்” (நெடுநல்.14)**

**“கண்ணெனக் கருவிளை மலரப் பொன்னென**
**இவர்கொடிப் பீர மிரும்புதன் மலரும்” (ஐங்.464:1-2)**

என்ற அடிகள் உணர்த்தும்.

முல்லை நிலமானது பலவகை மலர்களாலும் அழகு பெற்று கவின்மிகு காடாய் காணப்பட்டது. இதனை,

**“செறியிலைக் காயா அஞ்சனம் மலர**
**முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்**
**கோடல் குவிமுகை அங்கை அவிழத்**
**தோடார் தோன்றி குருதி பூப்பக்**
**கானம் நந்திய செந்நிலப் பெருவழி” (முல்லைப்பா.93-97)**

என்ற அடிகள் உணர்த்தும்.

முல்லை நிலத்தின் உணவு உற்பத்தி செய்யும் வளமான வாழ்விற்கு நிலத்தை அடுத்து நீர்வளம் இன்றியமையாததாக அமைந்தது. இதனை,

**"உணவெனப் படுவது நிலத்தொடு நீரே" (புறம்.18:21)**

என்ற அடி விளக்கும். காட்டுப்பகுதியில் காணப்பட்ட குறுஞ்சுனையும், காட்டாறும் உழவுத் தொழிலுக்கு உதவின. கார்கால மழையினால் செம்மண் கலந்த நிலமானது நீர் நிரம்பி காணப்பட்டது. காட்டுப்பகுதியில் நீர்வளம் மிகுந்து காணப்பட்டதால் வயல்வெளிகளில் ஆயர்கள் தங்கள் ஆநிரைகளை மேய்த்தனர். இதனை,

**"தொறுத்தவய லாரல் பிறழ்நவும்" (பதிற்று.13:1)**

என்ற அடி உணர்த்தும். முல்லைநில வாழ்வியலில் கால்நடை வளர்ப்புடன், வேளாண்மையும் செழித்து காணப்பட்டது.

"மேய்ச்சலோடு வேளாண்மையும் இணைந்த கலப்புப் பொருளாதாரமே சங்ககால ஆயர் இனக்குழுக்களின் முக்கியப் பொருளாதார முறையாக இருந்தது எனலாம். எந்த ஒரு இனக்குழுச் சமூகமும் தனித்த ஒரு வாழ்வாதாரத்தைக் கொண்டு வாழ முற்படாது என்ற வகையிலேயே சங்ககால ஆயர்களும் இரண்டு முக்கிய வாழ்வாதாரங்களைக் கொண்டிருந்தனர் என்கின்றார் பக்தவத்சல பாரதி."[67]

நிலைத்த குடியிருப்புகளை அமைத்துக் கொண்ட முல்லை நிலத்தினர் அப்பகுதிகளில் வாழ்ந்த பறவைகளையும், விலங்குகளையும் தமக்கே உரித்தாக்கிக் கொண்டனர். பொதுவுடைமை நீங்கி தன்னுடைமை என்னும் அதிகார வர்க்கம் இந்நிலத்தவரிடம் தலைதூக்கியது. **"கானாங்கோழியும்** (காட்டுக்கோழி) **மயிலும்** முல்லைநிலத்துப் பறவைகளாக சுற்றித் திரிந்ததை சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன."[68] கானாங்கோழி கழுத்தில் ஒள்ளிய புள்ளிகளைக் கொண்டது. இதனை,

**"கானாங் கோழிக் கவர்குரற் சேவல்**
**ஒண்பொறி எருத்தின் தண்சிதர் உறைப்பப்" (குறுந்.242:1-2)**

என்ற அடிகள் விளக்கும். மேலும் முல்லை நிலத்தில் 'குறும்பூழ்' என்னும் சிறிய கால்களையும், கருமையான கழுத்தினையும் உடைய பறவை பறக்க முடியாத தன் குஞ்சுகளை அழைத்துக்கொண்டு காட்டில் தங்கியுள்ளது குறிப்பிடத்தக்கது. இதனை,

**“வளர்இளம் பிள்ளை தழீஇக் குறுங்கால்**
**கறையணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்**
**வன்புலம் இறந்த பின்றை”      (பெரும்பாண்.203-205)**

என்ற அடிகள் உணர்த்தும். சங்க காலத்தில் இசை மிகுந்த சிறப்பிடத்தைப் பெற்றிருந்தது தோல் கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, துளைக்கருவி, மிடற்றுக்கருவி முதலான இசைக்கருவிகள் இருந்தன. யாழ், குழல், பறை, முழவு, முரசம், பதலை, பறை, தடாரி ஆகியன வழக்கில் இருந்த இசைக்கருவிகள் ஆகும். சீறியாழ், பேரியாழ், வில்யாழ் என்பன யாழின் வகைகள், பத்தல், தோல், ஆணி, மருப்பு, திவவு, நரம்பு என்பன யாழின் உறுப்புகள். யாழின் ஒரு பகுதி பண். முல்லைநில மக்களின் பண் ‘முல்லைப்பண்’ எனவும், ‘சாதாரிப்பண்’ எனவும் அழைக்கப்பட்டது. இம்மக்கள் ‘ஆம்பல்’ எனும் பண்ணினையும் இசைத்துள்ளனர். இவர்களது பறை ‘ஏறுகோட்பறை’ எனப்பட்டது. ஏறுதழுவல் நிகழ்வில் பயன்படுத்தப்படுவது இப்பறை. எளிய இசைக்கருவியான புல்லாங்குழல் கோவலர்களின் இசைக்கருவியாகும். முல்லைநில மக்களின் வாழ்வியலில் ‘குழலிசை’ ஆநிரைகளை ஒன்று சேர்ப்பதற்காகவும், பொழுது போக்கிற்காகவும் பயன்பட்டிருக்கின்றது. “முல்லை நிலத்தவரின் குழலிசை சங்க இலக்கியங்களில் பலவிடத்தும் பதிவு செய்யப்பட்டுள்ளது.”[69] முல்லை நிலத்தில் விளைந்த கொன்றைக் காய்களைத் துளைத்து விதைகளை அகற்றிவிட்டு குழல் செய்து இசைத்து மகிழ்ந்தனர். கோவலர் கொன்றைக்குழலை இசைத்த வண்ணம் பசுக்கூட்டத்தின் பின்னே செல்லும் நிகழ்வினை,

**“படுமணி மிடற்ற பயநிரை யாயம்**
**கொடுமடி யுடையர் கோற்கைக் கோவலர்**
**கொன்றையம் குழலர் பின்றைத் தூங்க”      (அகம்.54:9-11)**

என்ற அடிகள் காட்சிப்படுத்தும். மேலும் கன்றுகளையும், பசுக்கூட்டத்தையும் காட்டில் மேய்க்கும் இடையன் தீக்கடைக்கோலால் தீ உண்டாக்கி அக்கோலால் மூங்கிலில் துளைபோட்டுக் குழல் செய்து பாலைப்பண்ணை இசைத்தான். பாலைப்பண்ணை வெறுத்தால் குமிழமரத்தின் துளையை உடைய கொம்பை வளைத்து, மரலை நரம்பாகக் கொண்டு வில்யாழிசைத்தான். அதில் குறிஞ்சிப்பண்ணைப் பாடினான். இதனை,

**“ஞெலிகோல் கொண்ட பெருவிரல் நெகிழிச்**
**செந்தீத் தோட்ட கருத்துளைக் குழலின்**
**இன்தீம் பாலை முனையிற் குமிழின்**
**புழற்கோட்டுத் தொடுத்த மரல்புரி நரம்பின்**
**வில்யாழ் இசைக்கும் விரல்எறி; குறிஞ்சிப்**
**பல்காற் பறவை கிளைசெத்து ஓர்க்கும்**
**புல்ஆர் வியன்புலம் போகி” (பெரும்பாண்.178-184)**

என்ற அடிகள் உணர்த்தும். “சங்ககால மக்களது தங்குமிடங்கள் குடிசை, மனை, அகம், நகர், இருக்கை, குடில், குடியிருப்பு எனப் பல பெயர்களால் வழங்கப்பட்டன”[70] என்கின்றார் கே.பி.அழகம்மை. குடிசைகள் அந்தந்த நிலத்தின் பொருட்களால் அமைக்கப்பட்டிருந்தன. முல்லை நிலத்தில் வரகுதாள்கள் கொண்டு வேயப்பட்ட குடிசைகள் இருந்தன. இம்மக்கள் வாழ்ந்த ஊர் **‘ஆயர்பாடி’, ‘சிறுகுடி’, ‘மூதூர்’** என அழைக்கப்பட்டன. இதனை,

**“கூழுடை நல்மனைக் குழுவின இருக்கும்**
**மூதில் அருமன் பேர் இசைச்சிறுகுடி” (நற்.367:5-6)**

என்ற அடிகள் விளக்கும்.

மனிதன் தம் வாழ்வின் தேவையை நிறைவேற்றிக் கொள்ளவும். பொருளாதாரத்தை உயர்த்தவும் தொழில் அவசியமாகின்றது. முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்வியலானது கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டது. இந்நிலத்து ஆண்கள் கால்நடை பராமரிப்பையும், பெண்கள் கால்நடைகளிலிருந்து பெறப்படும் பால் பொருட்களை விற்பனை செய்யும் பணியிலும் ஈடுபட்டனர். காடும் காடு சார்ந்த பகுதியான முல்லை நிலத்து வாழ்வியலில் ஆற்றியிருத்தல் எனும் தலைவியின் கற்புடைத்திறன் சிறப்பாகும்.

**குறிஞ்சி நில வாழ்வியல்:**

உயர்ந்த மலைப்பகுதிகளைக் கொண்ட குறிஞ்சி நிலத்துப் புன்செய் நிலத்தைத் **‘துடவை’** (குறுந்.105:1) என்றும், மரங்களை அழித்து விளைநிலமாக்கப்படும் புதிய புனத்தை **‘இதை’** (அகம்.394:3) என்றும், பழமையான விளைநிலத்தை **‘முதைபுனம்’** (குறுந்.155:1) என்றும் குறிப்பிட்டனர்.

குறிஞ்சி நிலமானது ஓங்கி உயர்ந்த மலைகளையும், மலை உச்சியிலிருந்து ஓசையுடன் விழும் அருவிகளையும் பழங்கள் நிறைந்த சோலைகளையும் கொண்டு முருகப்பெருமானின் உறைவிடமாக விளங்கியது. இதனை,

**"இழுமென இழிதரும் அருவி**
**பழம்முதிர் சோலை மலைகிழ வோனே!" (திருமுருகு.316-317)**

என்ற அடிகள் விளக்கும். முருகப்பெருமானின் அடையாள மாலை கடம்பமாலை ஆகும். இக்காரணத்தினாலே முருகனைக் கடம்பன் எனவும் வழங்கினர். கடம்பமாலை அணிந்த முருகனை குறிஞ்சிநில மக்கள் வழிபட்டனர். இதனை,

**"கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி**
**வேலன் வேண்ட" (நற்.34:8-9)**

என்ற அடிகள் உணர்த்தும். "முருகனுக்குப் புனிதமான மரம் கடம்பு; முருகனின் ஆன்மா கடம்பில் உறைவதாக நம்பினர். திருப்பரங்குன்ற மலையின் அடிவாரத்தில் ஒரு குறிப்பிட்ட கடம்புமரம் மிகுந்த பக்தியுடன் பக்தர்கள் வழிபடுவதாக இருந்தது என்கின்றார் தனிநாயக அடிகள்."[71]

மலைப்பகுதிகளில் விளைந்த இன்சுவைமிக்க கனிகளையும், கிழங்குகளையும், மலைத்தேனையும், தினை அரிசியையும், தினை மாவினையும், குறிஞ்சி நிலத்தவர் உணவாகக் கொண்டனர். குறமகளிர் பலாப்பழத்தின் வெண்மையான கொட்டைகளின் மாவினையும், புளியம் பழத்தின் புளிப்பையும், மோருடன் கலந்து உலையாக வைத்து மூங்கிலில் விளைந்த நெல்லரிசியைச் சோறாகச் சமைத்து விருந்து படைத்துள்ளனர். இதனை,

**"வெண்புடைக் கொண்ட துய்த்தலைப் பழனின்**
**இன்புளிக் கலந்து மாமோர் ஆக**
**கழை வளர் நெல்லின் அரிஉலை ஊழத்து**
**வழைஅமல் சாரல் கமழத் துழைஇ**
**நறுமலர் அணிந்த நாறுஇரு முச்சிக்**
**குறமகள் ஆக்கிய வாலவிழ் வல்சி" (மலைபடு.178-183)**

என்ற அடிகள் உணர்த்தும். குறவர்கள் மலையில் கிடைக்கும் இயற்கை உணவுப் பொருட்களுடன் இறைச்சியையும் உட்கொண்டனர். வேட்டையாடுதல் மூலம் இறைச்சியைப்பெற நாய்களைப் பழக்கினர். கொழுத்த தசையினை உடைய பெண்

நாயினை ஏவி பெறப்பட்ட மான், உடும்பினது கறியை சோற்றோடு கலந்து உண்டனர். இதனை,

**"வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை**
**முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை**
**பிணவுநாய் முடுக்கிய தடியொடு விரைஇ"     (மலைபடு.175-177)**

என்ற அடிகள் விளக்கும். யானை, புலி, கரடி, சிங்கம் போன்ற விலங்குகள் மலைப்பகுதிகளில் அதிகமாகக் காணப்பட்டன. இந்நிலத்தில் வாழ்ந்த அந்தணர்கள் வளர்த்த வேள்வித்தீ அணையாமல் இருப்பதற்கு யானைகள் முறித்து வந்த விறகுகள் பயன்பட்டுள்ளன. இதனை,

**"செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்**
**களிறுதரு விறகின் வேட்கும்"     (பெரும்பாண்.498-499)**

என்ற அடிகள் நிறுவும். மேலும் யானைகளின் கொம்புகளைக் காவு மரமாகக் கொண்டு உணவுப் பொருட்களை எடுத்துச் செல்லவும் பயன்படுத்தினர். இதனை,

**"பொருதுதொலை யானைக் கோடு சீராகத்**
**தூவொடு மலிந்த காய கானவர்"     (மலைபடு.154-155)**

என்ற அடிகள் விளக்கும். அகில், தேக்கு, சந்தனம், வேங்கை போன்றவை குறிஞ்சி நிலத்தில் காணப்பட்ட மரங்களாகும். குறிஞ்சிநில மகளிர் மரங்களிலிருந்து பெறப்படும் நறுமணத் துகள்களால் தங்களை அழகுபடுத்திக் கொண்டனர். நறுமணம் மிகுந்த அகில் மரத்தின் துகளையும், சந்தன மரத்தின் துகளையும் அரைத்து தம் தோள்களில் பூசிக்கொள்வதோடு, கூந்தலுக்கு அகிலின் புகையையும் காட்டினர். இதனை,

**"நறுவீ நாகமும் அகிலும் ஆரமும்**
**துறைஆடு மகளிர்க்குத் தோட்புணை ஆகிய"     (சிறுபாண்.116-117)**

**"அகில்உண விரித்த அம்மென் கூந்தலின்"     (சிறுபாண்.263)**

என்ற அடிகள் உணர்த்தும். மலைகளில் மலர்ந்த குறிஞ்சிப்பூவினை எருதுகளின் கொம்புகளில் அணிவித்தனர். செழுமையான இதழ்களை உடைய குறிஞ்சிப்பூவானது வாடும்படி எருதுகள் ஒன்றையொன்று புண்படும்படி முட்டிக்கொண்டன. இதனை,

**"நல்லேறு பொரூஉம் கல்லென் கம்பலை**
**மலைத்தலை வந்த மரையான் கதழ்விடை**
**மாறா மைந்தின் ஊறுபடத் தாக்கிக்**

**கோவலர் குறவரோ டொருங்கியைந் தார்ப்ப**

**வள்ளிதழ்க் குளவியுங் குறிஞ்சியுங் குழைய''    (மலைபடு.331-335)**

என்ற அடிகள் விளக்கும். மலைச்சாரலில் பூத்துக்குலுங்கும் வேங்கைப் பூவினை பறிக்கும் பெண்கள் மற்றவர்கள் அஞ்சும்படி புலி! புலி! என்று கூச்சலிட்டனர். இதனை,

**''ஒலிசினை வேங்கை கொய்குலம˙ சென்றுழி**

**புலிபுலி என்னும் பூசல் தோன்ற''    (அகம்.48:6-7)**

என்ற அடிகள் உணர்த்தும். மலையின் கண் வாழுகின்ற அழகுபெற்ற ஆண் மயில்கள் பெண் மயில்களை கவர்வதற்கு குரல் எழுப்பின. இதனை,

**''வரைப் பொலிந்து இயலும் மடக்கண் மஞ்ஞை**

**கானக் கோழிக் கவர் குரல் சேவல்''    (மலைபடு.509-510)**

என்ற அடிகள் புலப்படுத்தும். மலைநிலத்து மக்களைப் போன்றே அப்பகுதிகளில் வாழ்ந்த உயிரினங்களும் தங்கள் இணைகளுடன் இன்புற்று வாழ்ந்துள்ளன.

மலைகளில் வாழ்ந்த அந்தணர்களின் வீடுகளில் கிளிகளை வளர்ப்புப் பறவையாக வளர்த்தனர். இதனை,

**''மனைஉறை கோழியொடு ஞமலி துன்னாது**

**வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்''    (பெரும்பாண்.299-300)**

என்ற அடிகள் விளக்கும். குறிஞ்சிநில மக்கள் தொண்டகப்பறையை அடித்தும், குறிஞ்சி யாழினை மீட்டியும், குறிஞ்சிப் பண்ணினைப் பாடியும் மகிழ்ந்துள்ளனர். வேட்டை காரணமாகக் கொலைத் தொழிலைப் புரியும் குறவர்கள் தேனாலான கள்ளினைச் சுற்றத்தாருடன் உண்டு மகிழ்ந்து, தொண்டகப்பறையை அடித்து அதன் தாளத்திற்கு ஏற்பக் குரவைக் கூத்தாடி முருகனை வழிபட்டனர். இதனை,

**''கொடுந்தொழில் வல்வில் கொலைஇய கானவர்**

**நீடுஅமை விளைந்த தேக்கள் தேறல்**

**குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து**

**தொண்டகச் சிறுபறைக் குரவை அயர''    (திருமுருகு.194-197)**

**''தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே**

**தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின்**

**கோடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின்''[72]**

என்ற அடிகள் எடுத்தியம்பும். நறுமணமிக்க மலர்களைச் சூடி கரிய நிறமுடைய மலைப்பகுதியில் வாழக்கூடிய குறமகளிர் குறிஞ்சிப் பண்ணினைப் பாடி மலைத்தெய்வங்களை வழிபடுவர். இதனை,

**"நறுங்கார் அடுக்கத்து குறிஞ்சி பாடிக்**

**கைதொழூஉப் பரவிப் பழிச்சினர் கழிமின்"** **(மலைபடு.359-360)**

என்ற அடிகள் விளக்கும். மலைப்பகுதிகளில் காணப்படும் அருவிநீரும், சுனை நீரும் குறிஞ்சிநில வேளாண்மைக்கும் உணவு உற்பத்திக்கும் வளம் சேர்த்தன.

மலைகளில் தோன்றி நீண்ட ஓசையுடன் பல பக்கங்களிலும் விழும் அருவி நீரானது பலாப்பழம் முதலான உணவுப் பொருள்களை அடித்து இழுத்து வரும். அத்தகைய வளமிக்க அருவிகளில் தேவமகளிர் நீராடுவர். இதனை,

**"மலை முழுதும் கமழும் மாதிரம் தோறும்**

**அருவி நுகரும் வானர மகளிர்"** **(மலைபடு.293-294)**

என்ற அடிகள் விளக்கும். குவளைக் கொடிகளால் அழகுபெற்ற சுனைநீர் பருகுவதற்கு சுவையுடையதாய் இருந்தது. மலை வழியைக் கடந்து செல்பவருக்கு பசியமரவும், தாகம் தீரவும் இந்நீர் நிலைகள் பயன்பட்டன. இதனை,

**"குவளைஅம் பைஞ்சுனை அசைவிடப் பருகி**

**மிகுத்துப் பதங் கொண்ட பரூஉக்கண் பொதியினிர்"**

**(மலைபடு.251-252)**

என்ற அடிகள் தெளிவுபடுத்தும். குறிஞ்சி நிலத்து மக்களான குறவர், குறத்தி, கொடிச்சி, வெற்பன் முதலானோர் பல்வேறு தொழில்களை மேற்கொண்டனர். தினை விளைவித்தலும், தேன் எடுத்தலும், கிழங்கு அகழ்தலும், வேட்டையாடுதலும், கள் விற்றலும் இந்நிலத்திற்கேற்ற தொழில்களாயின. குறவர்கள் திசை தெரியாமல் மயங்கும் இரவு நேரத்தில் விலங்குகளை வேட்டையாடுவர். இதனை,

**"தேஎம் மருளும் அமையம் ஆயினும்**

**இறாஅ வன்சிலையர் மா தேர்பு கொட்கும்**

**குறவரும் மருளும் குன்றத்துப் படினே"** **(மலைபடு.274-275)**

என்ற அடிகள் விளக்கும். தினைப்புனம் காத்தலில் குறிஞ்சிநில மகளிர் ஈடுபட்டனர். மூங்கிலைப் பிளந்து அதைப் பரணாக அமைத்து அதன்மீது ஏறி நின்று தினைகளை

உண்ண வருகின்ற கிளியினை மூங்கில் தட்டைகளினால் ஒலியெழுப்பி விரட்டினர். இதனை,

**"ஒலிகழைத் தட்டை புடையுநர் புனந்தோறும்**
**கிளிகடி மகளிர் விளிபடு பூசல்" (மலைபடு.328-329)**

என்ற அடிகள் விளக்கும். தினைக்கதிர்களை உண்ணவருகின்ற யானைகளை விரட்டவும் "அகல் மலை இறும்பில் துவன்றிய யானைப்" (மலைபடு.205) தேனடைகளைப் பெறுவதற்காக தேனீக்களை அழிப்பதற்கும் கவணைப் பயன்படுத்தினர். இதனை,

**"பெரும்பயன் தொகுத்த தேம்கொள் கொள்ளை**
**அருங் குறும்பு எறிந்த கானவர் உவகை" (மலைபடு.317-318)**

என்ற அடிகள் விளக்கும்.

மலையும் மலைசார்ந்த பகுதியுமான குறிஞ்சி நிலமானது காதலர்களின் களவு நீட்டிப்பதற்கும் இல்லறத்தாரின் மகிழ்வான வாழ்விற்கும் ஏற்ற இடமானது. ஆகையால் குறிஞ்சிநில வாழ்வியலில் புணர்தல் ஒழுக்கம் வலுப்பெறலாயிற்று.

**மருதநில வாழ்வியல்:**

மருதநிலம் நீர்வளம் நிறைந்த நிலப்பகுதியாகும். மருதநிலப் பகுதிகள் **'கழனி'** (ஐங்.70:2) **'பழனம்'** (அகம்.96:3) **'வயல்'** (ஐங்.25:2) **'செறு'** (நற்.210:2) என்ற சொற்களால் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றுள் **"கழனி என்பது சேற்று வயலையும்"[73]**, **"பழனம் என்பது நெல் வயலையும்"[74]** குறிக்கும். மருதநில விளைநிலங்கள் வயல் என்று குறிப்பிடப்பட்டன.

"பயிர்த்தொழிலுக்கு ஏற்ற நிலப்பகுதிகள் தவிர விளைவின்றி கால்நடைகளின் மேய்ச்சலுக்கு விடப்பட்ட நிலம் **'விடுநிலம்'** எனவும் பயன்படாத நிலங்கள் **'கரம்பை'**, **'முரம்பு'** என வழங்கப்பட்டுள்ளதையும் வி.சி.சசிவல்லி குறிப்பிடுகின்றார்."[75] மருதநிலமானது வேளாண்மைக் களமாகக் காணப்பட்டது. இந்நிலத்தில் பெண்கள் கரும்பை உலக்கையாகக் கொண்டு அதற்கு வெள்ளியினால் செய்த பூணை அணிவித்துத் தங்களின் கொடி இடை அழகுபட இசையுமாறு தம்முடைய குடியினரின் பெருமைகளைப் பாடிக்கொண்டே தானியங்களைக் குற்றுவர். அதைக்காணும் சிறுமியர்

காஞ்சிமரத்தின் நிழலில் முத்து போன்ற வெண்மணலைக் குவித்து அதைக் குற்றுவது போல் விளையாடுவர். பெண்களின் உலக்கைப் பாட்டைக் கேட்டவாறு இறால்மீன்களை நிறையத்தின்னும் சிறுமீன்கொத்திப் பறவையானது மருதமரத்தின் தாழ்ந்த கிளையில் அமர்ந்து உறங்கும் தன்மை கொண்டது மருதநிலம். இதனை,

**"வெள்ளி விழுத்தொடி மென்கரும்பு உலக்கை**
**வள்ளி நுண்இடை வயின்வயின் நுடங்க**
**மீன்சினை அன்ன வெண்மணல் குவைஇக்**
**காஞ்சி நீழல் தமர்வளம் பாடி**
**ஊர்க்குறு மகளிர் குறுவழி விறந்த**
**வராஅல் அருந்திய சிறுசிரல் மருதின்**
**தாழ்சினை உறங்கும்….."       (அகம்.286:1-7)**

என்ற அடிகள் விளக்கும். நான்கு கொம்புகளைக் கொண்ட **'ஐராவதம்'** என்னும் யானையை வாகனமாகக் கொண்ட இந்திரனை மருதநிலத்தினர் வணங்கினர். இதனை,

**"ஈர் இரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடைத்**
**தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை**
**எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்"   (திருமுருகு.157-159)**

என்ற அடிகள் உணர்த்தும். உழவுத்தொழிலை உயிராகக் கொண்டவர்கள் மருதநிலத்து உழவர்கள். அவர்கள் வயலில் விளைவித்த வெண்ணெல்லையும், செந்நெல்லையும் அறுவடை செய்து அவற்றின் சோற்றோடு இறைச்சியையும் உணவாகக் கொண்டனர். இம்மக்கள் முற்றிய கதிர்களிடமிருந்து வெளிவந்த அரிசியினை நன்கு ஆராய்ந்துப் பார்த்துப் பின் சோறாகச் சமைத்தனர். இதனை,

**"அரிசெத்து உணங்கிய பெருஞ்செந்நெல்லின்**
**தெரிகொள் அரிசித் திரள்நெடும் புழுக்கல்"**
**(பெரும்பாண்.473-474)**

என்ற அடிகள் விளக்கும். வெண்ணெல் விளைய குளத்து நீர் பயன்படுத்தப்பட்டது. இதனை,

**"குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்"   (புறம்.33:5)**

என்ற அடிகள் விளக்கும். வெண்ணெல் விளைந்த ஊர் பெறற்கரிய செல்வத்தை உடைய இடமாகக் கருதப்பட்டது. இதனை,

**“வெண்ணெல் வைப்பின் நல்காடு பெறினும்” (அகம்.201:13)**

என்ற அடி விளக்கும். மருதநில மக்கள் வெண்ணெல் சோற்றோடு நண்டினையும் கலந்து உண்டனர். இதனை,

**“அவைப்பு மாண்அரிசி அமலை வெண்சோறு**
**கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுகுவிர்” (சிறுபாண்.194-195)**

என்ற அடிகள் தெளிவுறுத்தும். மருதநிலத்தில் விளைவிக்கப்படும் சிவந்த நெல்லான செந்நெல், நெல் வகைகளில் சிறந்ததாகக் கருதப்பட்டது. இதனை,

**“செந்நெலஞ் செறுவிற் கதிர்கொண்டு” (ஐங்.27:1)**

என்ற அடி உணர்த்தும். நன்கு முற்றிய செந்நெல்லின் வெளிப்புறம் உள்ள அரிசியினை உணவாகப் பயன்படுத்தினர். இதனை,

**“பைதுஅற விளைந்த பெருஞ்செந் நெல்லின்**
**தூம்புடைத் திரள்தாள் துமித்த வினைஞர்” (பெரும்பாண்.230-231)**

என்ற அடிகள் விளக்கும். மருதநிலப் பகுதிகளில் எருமையும், நீர் நாயும் மிகுந்து காணப்பட்டன. நீர்வளம் நிறைந்த மருதநில நீர்நிலைகளில் அகன்ற வாயினை உடைய எருமைகளானது அங்கு மலரும் செங்கழுநீர் பூக்களின் இதழ்களை உண்ணும். இதனை,

**“கழுநீர் மேய்ந்த கடவாய் எருமை” (சிறுபாண்.42)**

என்ற அடி உணர்த்தும். புலால் நாற்றமுடைய நீர்நாய் பொய்கையில் காலை நேரத்தில் வாளைமீனைத் தேடி உணவாய்க்கொள்ளும். இதனை,

**“பொய்கை நீர்நாய்ப் புலவுநாறு இரும்போத்து**
**வாளை நாள்இரை தேரும் ஊர” (அகம்.386:1-2)**

என்ற அடிகள் விளக்கும்.

மருதமரமும், காஞ்சிமரமும் இந்நிலத்திற்கான மரங்களாகக் குறிப்பிடப்படுகின்றன. பிற நிலத்துப் பறவைகளும் மருதநிலத்து மரங்களில் இளைப்பாறின. காஞ்சிமரமானது பொலிவிழந்த குறுகிய அடிகளையும், நறுமணமிக்க மலர்களைக் கொண்டும் குளக்கரையின் ஓரங்களில் காணப்பட்டது. இதனை,

**“நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினைக்**
**குறுங்காற் காஞ்சி” (சிறுபாண்.178-179)**

என்ற அடிகள் விளக்கும். மருதமரமானது குளிர்ந்த நிழலைத் தரவல்லது. மருதமரநிழலில் பாம்புகள் உறங்கும் என்பர். இதனை,

**“பாம்பு உறை மருதின் ஓங்குசினை நீழல்” (பெரும்பாண்.232)**

என்ற அடி உணர்த்தும். கருமையான நிறமுடைய புற இதழ்களையும், வெண்மையான உள் இதழ்களையும் கொண்ட மருதமலர்கள் நிறைந்தும் காணப்பட்டன. இதனை,

**“................................ கருந்தகட்டு**
**உளைப்பூ மருதின் ஒள்இணர் அட்டி” (திருமுருகு.27-28)**

என்ற அடிகள் விளக்கும். மருதநில குளங்களில் மட்டுமின்றி வயல்களிலும் தாமரை மலர்கள் மலர்ந்திருந்தன. இதனை,

**“கழனித் தாமரை மலரும்” (ஐங்.53:3)**

என்ற அடி விளக்கும். நெருப்பின் நிறத்தைப் போன்று நீர்நிலைகளில் மலரும் தாமரை மலரின் இதழ்கள் மணிச்சிரல் பறவையில் கால்நகம்பட்டு கிழியும் தன்மையுடையன. இதனை,

**“புலவுக் கயலெடுத்த பொன்வாய் மணிச்சிரல்**
**வள்உகிர் கிழித்த வடுஆழ் பாசடை**
**முள்அரைத் தாமரை” (சிறுபாண்.181-183)**

என்ற அடிகள் விளக்கும்.

மருதநிலத்து நீர்நிலைகளில் வாழும் ஆமைகளின் வயிற்றுப் பகுதியின் தசைகளை உண்ணும் குருகு (நாரை) இந்நிலத்துப் பறவையாகக் குறிப்பிடப்பட்டது. இதனை,

**“குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை**
**யரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டு” (ஐங்.81:1-2)**

என்ற அடிகள் விளக்கும். குருகு மருத நிலத்துப் பறவை என்றும் நெய்தல் நிலத்துப் பறவை என்றும் குறிப்பிடுவர். “குருகு மருத நிலத்துப் பறவை என்பதை நம்பியகப்பொருள் சுட்டிக்காட்டும்.”[76] உழவுத் தொழிலை மேற்கொள்வதற்கு ஏற்ற ஆறுகளும், குளங்களும், காணப்பட்டதுடன் வீடுகளில் கிணற்று நீரும், மருதநிலத்து நீர்நிலைகளாகக் காணப்படுகின்றன. செம்மண் நிலத்தில் தோண்டப்பெற்ற கிணற்று

நீரும் செம்மண் நிறமாகவே காணப்பட்டது. அந்நீரை வீட்டின் முற்றத்தில் அகன்ற வாயையுடைய சாடியில் வைத்திருந்தனர். இதனை,

**“பூவல் படுவில் கூவல் தொடீஇய**
**செங்கண் சின்னீர் பெய்த சீறில்”** **(புறம்.319:1-2)**

என்ற அடிகள் விளக்கும். உழவர்கள் இரும்பைத் தகடாக்குவது போல விளைநிலங்களைப் பண்படுத்தி விதைகளைத் தூவி பயிர்களை வளர்ப்பர். இதனை,

**“இரும்பு வடித்தன்ன மடியா மென்தோல்**
**கருங்கை வினைஞர்”** **(பெரும்பாண்.222-223)**

என்ற அடிகள் உணர்த்தும். வயல்களில் பயிர்களுக்கிடையே விளையும் களைகளைப் பறிக்கும் உழத்தியர் கொண்டைகளில் மலர்களைச் சூடியிருப்பர். இதனை,

**“கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்**
**சிறுமாண் நெய்தல் ஆம்பலொடு கட்டும்”** **(புறம்.61:1-2)**

என்ற அடிகள் விளக்கும். முற்றிய நெற்கதிர்களை அரியும் முன்னர் மருதநிலத்து மக்கள் பறையடிப்பர். அப்பறையொலியைக் கேட்டு வயல்களில் வாழும் பறவை இனங்களும், பிற உயிரினங்களும் அவ்விடத்தை விட்டு நீங்கும். மற்ற உயிரினங்களுக்கு இடையூறு அளிக்காது பெரும் ஆரவாரத்துடன் நெல்லினை அறுவடை செய்வர். இதனை,

**“வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்**
**பழனப் பல்புள் இரியக் கழனி”** **(நற்.350:1-2)**

என்ற அடிகள் உணர்த்தும். நெல்லரிதலில் பறையொலித்து, பாடல் இசைப்பதை சிலப்பதிகாரமும்,

**“அரிந்துகால் குவித்தோர் அரிகடா வுறுத்த**
**பெருஞ்செய்ந் நெல்லின் முகவைப் பாட்டும்**
**தெண்கிணைப் பொருநர் செருக்குடன் எடுத்த**
**மண்கனை முழவின் மகிழ்இசை ஓதையும்”**[77]

என்று விளக்கும். கதிர் அறுவடை நேரத்தில் உழவர்களைப் போற்றிப் பாடும் இரவலர்களுக்கு நெல்லை வழங்குவது உழவர்களின் வழக்கம். இதனை,

**“தூம்புடைத் திரள்தாள் துமித்த வினைஞர்**
**பாம்புஉறை மருதின் ஓங்குசினை நீழல்**
**பலிபெறு வியன்களம் பலிய ஏற்றி”** **(பெரும்பாண்.231-233)**

என்ற அடிகள் விளக்கும். நெற்களத்து வழி பாடும் இரவலரைப் பற்றி புறப்பொருள் வெண்பாமாலை 'களவழி வாழ்த்து' எனும் துறையாகக் குறிப்பிடுகின்றது. இதனை,

**"செங்களத்துச் செழுஞ்செல்வம்**
**வெண்குறையாழ்ப் பாணர் விளம்பின்று"[78]**

என்ற அடிகள் விளக்கும். மருதப்பண், மருத யாழ், முழவு உள்ளிட்ட இசைக்கருவிகளும் விறலியரால் இசைக்கப்பட்டது. இதனை,

**"மழைஎதிர் படுகண் முழவு கண் இகுப்பக்**
**கழைவளர் தூம்பின் கண்இடம் இமிர**
**மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்" (மலைபடு.532-534)**

என்ற அடிகள் உணர்த்தும். மருதநிலத்தில் வாழ்ந்த மக்கள் உழவர், கடைசியர், வினைஞர், அறிஞர், ஊரன், மகிழ்நன் என்றும் அழைக்கப்பட்டனர். எனினும் தொழிற்பெயரான உழவர் என்பதே பரவலாகக் குறிப்பிடப்பட்டது.

வயலும் வயல் சார்ந்த பகுதியுமான மருதநிலமானது உழுதுண்டு வாழும் இல்லறத்தாரின் இன்ப வாழ்வை உள்ளடக்கியது. புத்திரப்பேறு முதலிய செல்வங்களைப் பெற்றுக் குறைவின்றிக் குடும்பம் நடத்தும் மருதநிலத் தலைவன் மேற்கொள்ளும் பரத்தையர் ஒழுக்கத்தால் தலைவி ஊடல் கொள்வது இந்நிலத்து ஒழுக்கமாகும். இவர்களது வாழ்வியலில் கணவன் ஒழுக்கக்கேடு புரிந்தாலும் மனைவி ஏற்றுக் கொள்வதே கற்புடைமை எனப்பட்டது.

**நெய்தல் நில வாழ்வியல்:**

நெய்தல் நிலமானது மழை பொழிந்தால் நெல் விளையும் பகுதியாகவும், மழை பெய்யாது வறண்டு போகும் காலத்து கருமையான காய்ந்த சேற்றிடமெல்லாம் உப்பு விளையும் பகுதியாகவும் காணப்பட்டது. இதனை,

**"பெயினே விடுமான் உளையின் வெறுப்பத் தோன்றி**
**இருங் கதிர் நெல்லின் யாணர.்.தே**
**வறப்பின், மா நீர் முண்டகம் தா அய்ச் சேறு புலர்ந்து**
**இருங் கழிச் செறுவின் வெள் உப்பு விளையும்" (நற்.311:1-4)**

என்ற அடிகள் விளக்கும். நெய்தல் நிலத்துச் சிறுமியர் இடையில் தழை உடை அணிந்து வலம்புரிச்சங்குகளையும், முத்துக்களையும் வைத்து கடல் தெய்வமாகிய வருணனை வழிபடுவர். இதனை,

**“அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து**
**தழைஅணிப் பொலிந்த கோடுஏந்து அல்குல்**
**பழையர் மகளிர் பனித்துறைப்பரவப்”     (அகம்.201:5-7)**

என்ற அடிகள் புலப்படுத்தும். பரதவப் பெண்கள் கடல் பகுதிகளில் கிடைக்கும் மீன், நண்டு முதலான உணவுப் பொருட்களையும், உப்பு விற்றுப் பண்டமாற்று முறையில் கிடைத்த பொருட்களையும் உணவாகக் கொண்டனர். மீன்பிடிக்கும் தொழிலுக்காக கடலுக்குச் சென்ற தந்தைக்கு, இளைய மகள் மீன் கொண்டு வருவதற்கு முன்பே தான் உப்பு விற்றுப் பெற்ற நெல்லாலே ஆக்கப்பட்ட வெண்சோற்றைப் புளிக்குழம்போடும் மீன் துண்டோடும் சமைத்து வைப்பாள். இதனை,

**“நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு**
**உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு**
**அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து**
**கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்”     (அகம்.60:3-6)**

என்ற அடிகள் விளக்கும். முதலை, சுறா முதலானவை நெய்தல் நிலத்து விலங்குகளாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. சுறாமீன்கள் கடலும், ஆறும் இணையும் உப்பங்கழிப்பகுதி வரை வந்து செல்லும் வேளையில் பரதவர்கள் எளிதில் வேட்டையாடுவர். இதனை,

**“கோட் சுறா வழங்கும் வாள் கேழ் இருங்கழி”   (நற்.78:1)**

என்ற அடி உணர்த்தும். சுறாமீன்கள் மீனவர்களைத் தாக்கி புண்ணை ஏற்படுத்தும் தன்மை கொண்டவை. இதனை,

**“வயச்சுறா எறிந்த புண்தணிந்து எந்தையும்**
**நீல்நிறப் பெருங்கடல் புக்கனன்”     (குறுந்.269:3-4)**

என்ற அடிகள் நிறுவும். அகழிகளில் வளைந்த கால்களைக் கொண்ட முதலைகள் வாழ்ந்தன. இதனை,

**“இரைதேர்ந்து இவரும் கொடுந்தாள் முதலையொடு**
**திரைபடக் குழிந் தகல்அகழ் கிடங்கின்”   (மலைபடு.90-91)**

என்ற அடிகள் உணர்த்தும். இரவுக்குறி வரும் தலைவனுக்கு அகழிகளில் இருக்கும் முதலைகள் தீங்குவிளைவிக்கும் எனத் தோழி அஞ்சினாள். இதனை,

**“கொடுந்தாள் முதலைக் கோள்வல் ஏற்றை**

**வழிவழக்கு அறுக்கும் கானல்அம் பெருந்துறை” (குறுந்.324:1-2)**

என்ற அடிகள் விளக்கும்.

புன்னையும், ஞாழலும் நெய்தல் நிலத்தில் காணப்பட்ட மர வகைகளாக உள்ளன. கடற்கரை மணலில் பொன்னிற நறுமணமிக்க மலர்களைக் கொண்டு புன்னை மரங்கள் நிறைந்து காணப்பட்டன. இம்மரத்தின் கீழே தலைவன் தலைவியின் களவுக்காலக்குறி நிகழ்வதுண்டு. இதனை,

**“… … … … …… … பொன் என**

**நன்மலர் நறுவீ தாஅம்**

**புன்னை நறும்பொழில் செய்தநம் குறியே” (அகம்.360:18-19)**

என்ற அடிகள் விளக்கும். பகன்றை கொடிகள் படர்ந்திருக்கும் மரங்களின் அருகில் ஞாழல் மரங்களானது சூழ்ந்து காணப்படும். இதனை,

**“… … … … … … … பகன்றைத்**

**தளிர்ப் புன்கின் தாழ் காவின்**

**நனை ஞாழலொடு மரம் குழீஇய” (பொருநர்.196-197)**

என்ற அடிகள் உணர்த்தி நிற்கும். வெண்குருகின் நிறத்தைப் போன்ற தாழை மலர்களை வண்டுகள் மொய்க்கும். இதனை,

**“துறுகடற் தலைய தோடு பொதி தாழை**

**வண்டு படு வான் போது வெரூஉம்” (நற்.211:7-8)**

என்ற அடிகள் உணர்த்தும். நெய்தல் நிலத்துப் பெண்டிர் சூடிக்கொண்ட நெய்தல் மலரானது கருநீலநிறமுடையது. இதனை,

**“மை என விரிந்தன, நீள் நறு நெய்தல்**

**செய்யாப் பாவை வளர்ந்து கவின் முற்றிக்” (மலைபடு.124-125)**

என்ற அடி விளக்கும். மீனுண் குருகும் (கொக்கு), அன்னமும், கடற்காகமும் நெய்தல்நிலப் பறவைகளாகும். உப்பங்கழிகளில் மீனினைத் தேடி உண்ணும் அன்னப்பறவைகள் மணற்மேட்டில் நின்று சிறகுகளை உலர்த்தும். இதனை,

**“நெடுங்கழி துழைஇய குறுங்கால் அன்னம்**

**அரும்புஅமர் எக்கர் அம்சிறை உளரும்” (அகம்.320:8-9)**

என்ற அடிகள் விளக்கும். நெய்தல்நில மக்கள் காக்கைக்கு பலிச்சோறிடும் பழக்கத்தைக் கொண்டு இருந்தனர். தங்கள் இல்லங்களில் படைத்த உணவுகளை

தெய்வத்திற்கு வைத்து வணங்கிய பின்னர் காக்கைக்குப் பலியிடுவர். காக்கைகள் அச்சோற்றினை உண்டபின் முற்றத்தில் காயும் மீன்களையும் கவர்ந்து சென்றன. இதனை,

**"திருவுடை வியல் நகர் வரு விருந்து அயர்மார்**
**பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த**
**கொக்கு உகிர் நிமிரல் மாந்தி, எல் பட**
**அகல் அங்காடி அசை நிழல் குவித்த**
**பச்சிறாக் கவர்ந்த பசுங் கட் காக்கை**
**தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்" (நற்.258:4-9)**

என்ற அடிகள் விளக்கும். கடலில் இயங்கும் சிவந்த வாயினையுடைய ஆண் நீர்க்காகம் பெண் நீர்க்காகத்திற்காக கரிய சேற்றிலிருந்து அயிரை மீனைத் தேடும் அன்பினைக் கொண்டது. இதனை,

**"கடல்அம் காக்கைச் செவ் வாய்ச் சேவல்**
**படிவ மகளிர் கொடி கொய்து அழித்த**
**பொம்மல் அடும்பின் வெண் மணல் ஒரு சிறை**
**கடுஞ்சூல் வதிந்த காமர் பேடைக்கு**
**இருஞ் சேற்று அயிரை தெரிய" (நற்.272:1-5)**

என்ற அடிகள் விளக்கும். மீனைத் தின்னும் கொக்கானது நெய்தல்நில மலர்களில் உறையும் தன்மை கொண்டது. இதனை,

**"நெய்த லிருங்கழி நெய்த னீக்கி**
**மீனுண் குருகிளங் கான வல்குங்" (ஐங்.184:1-2)**

என்ற அடிகள் விளக்கும். கடற்கரைப் பட்டினங்களில் வாழ்ந்த பரதவர்கள் கடலையே வாழ்வாதாரமாகக் கொண்டு மீன்பிடித்தல், உப்புவிளைவித்தல், அவற்றை விற்றல் உள்ளிட்ட தொழில்களை மேற்கொண்டனர். மீன்பிடிப்பதற்காக பரந்த கடலில் படகினைச் செலுத்துவதற்குமுன் பரதவர்கள் தங்கள் இல்லங்களில் சினைச்சுறாவின் கொம்பில் வருணனை வைத்து வழிபட்டனர். இதனை,

**"சினைச் சுறவின் கோடு தட்டு**
**மனைச் சேர்த்திய வல் அணங்கினான்" (பட்டினப்.86-87)**

என்ற அடிகள் விளக்கும். கடலில் பிடித்துவரும் மீன்கள் பெண்களால் திருவிழா நிகழும் தெருக்களில் விலை கூறி விற்கப்பட்டது. இதனை,

**“திமிலோன் தந்த கருங்கண் வயமீன்**
**தழைஅணி அல்குல் செல்வத் தங்கையர்**
**விழவுஅயர் மறுகின் விலைஎனப் பகரும்” (அகம்.320:2-4)**

என்ற அடிகள் உணர்த்தும். பரதவர்கள் உப்பங்கழிகளில் பாத்திகளை அமைத்து அதில் உப்புநீரை ஏற்றி உப்புக்களை விளைவித்தனர். அவ்வாறு விளைந்த உப்புக்களை உணவுக்குப் பயன்படுத்தியதுடன் பிற இடங்களுக்குச் சென்று விற்று உப்புக்குப் பதிலாக நெல்லையும் பெற்றனர். இதனை,

**“உமணர் தந்த உப்பு நொடை நெல்லின்**
**அயினிமா இன்று அருந்த நீலக்**
**கணம் நாறு பெருந் தொடை புரளும் மார்பின்**
**துணை இலை தமியை சேக்குவை அல்லை**
**நேர் கண் சிறு தடி நீரின் மாற்றி**
**வானம் வேண்டா உழவின்” (நற்.254:6-11)**

என்ற அடிகள் விளக்கும். எயில் பட்டணத்தில் ஒட்டகம் உறங்கிக்கிடப்பது போல கடல் அலைகளானது கொண்டு சேர்த்த மணம் கமழும் அகில் கட்டைகளில் தீயைப் பொருத்தி மகளிர் தேறலைக் (கள்) காய்ச்சினர். இதனை,

**“ஓங்குநிலை ஒட்டகம் துயில்மடிந் தன்ன**
**வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகின்**
**கரும்புகைச் செந்தீ மாட்டி” (சிறுபாண்.154-156)**

என்ற அடிகள் நிறுவும். கள் விற்கப்படும் இடங்களில் விலையை எடுத்துக் காட்டும் கொடிகள் பறக்கவிடப்பட்டன. இதனை,

**“பலர் புகு மனைப் பலிப் புதவின்**
**நறவு நொடைக் கொடியோடு” (பட்டி.179-180)**

**“விளரி நரம்பின் நயவரு சீறியாழ்**
**மலிபூம் பொங்கர் மகிழ்குரற் குயிலொடு**
**புணர்துயில் எடுப்பும் புனல்தெளி காலையும்” (அகம்.279:11-13)**

என்ற அடிகள் உணர்த்தும். மரக்கலத்தை கடலில் செலுத்தும் நெய்தல்நில மக்களின் பறையொலி இசைப்பொலிவு மிக்கது. பரதவ மக்களின் சிறுபறையின் ஒலியானது குரவை பாடுதற்கும் ஏற்றது. இதனை,

**“கலவர்தஞ் சிறுபறை ணயிசையிற் கைவினைப்**
**புலவர்தேம் பிழிமகிழ் குரவை பொங்குமே”[79]**

என்ற அடிகள் விளக்கும். மாலை நேரத்தில் பெண்கள் கடலுக்குச் சென்ற பரதவரை எண்ணி இரங்குவர். இரங்கற் பண்ணாகிய செவ்வழிப்பண் நெய்தல் நிலத்திற்குரியதாய் இசைக்கப்பட்டது. இதனை,

**"அருளா யாகலோ கொடிதே இருள்வரச்**
**சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்"** (புறம்.144:1-2)

என்ற அடிகள் விளக்கும். கடலும் கடல் சார்ந்த பகுதியுமான நெய்தல் நிலமானது பரதவ மக்களின் மீன்பிடித் தொழிலுக்கு மூலதனமானது. மீன்பிடித்தலுக்காக கடலில் படகை செலுத்தும் மீனவர்களை நினைத்துப் பெண்கள் வருந்தும் இரங்கல் ஒழுக்கமானது இம்மக்களின் வாழ்வியலில் இன்றியமையாதது.

**பாலைநில வாழ்வியல்:**

பாலை நிலம் என்னும் பகுதி தொல்காப்பியரால் தனியே வகுத்துரைக்கப்படாத நிலையில் சிலப்பதிகார அடிப்படையில் உரையாசிரியர்கள் குறிப்பிடும் பாலை நிலமானது ஏனைய நிலமக்கள் கடந்து செல்லும் வழிநிலமாகவே சுட்டப்பெறுகின்றது. வாழ்விடமாக இருந்த குறிஞ்சியையும், முல்லையையும் அடுத்த வளங்குன்றிய வறண்ட நிலப்பகுதியான பாலைநிலம் 'சுரம்' என்றழைக்கப்பட்டது. கடந்து செல்லும் சுரம் கொடியது என்பதால் **'வெஞ்சுரம்'** (அகம்.277:12) **'அருஞ்சுரம்'** (அகம்.269:13) எனவும் குறிப்பிடப்பட்டது.

பாலை நிலமானது கடந்து செல்வோரை அச்சுறுத்தும் தன்மை கொண்டு விளங்கியது. வழிப்பறிக்காக வில்லேந்தித் திரியும் வேடர்கள் வழிச்செல்வோரைக் கொன்று அப்பிணங்களின் மீது கற்களைக் குவித்து அக்குவியல்களின் மேல் பிணங்களின் மயிரோடு கூடிய தலைகளை நட்டுவைப்பர். இக்கொடிய காட்சியே பாலைநிலம் முழுதும் காணப்படும். இதனை,

**"கொடுவில் கானவர் கணைஇடத் தொலைந்தோர்**
**படுகளத்து உயர்த்த மயிர்த்தலைப் பதுக்கைக்**
**கள்ளிஅம் பறந்தலைக் களர்தொறும் குழீஇ"** (அகம்.231:5-7)

என்ற அடிகள் விளக்கும். வீரமும் கருணையும் கொண்ட மறவர்களுக்கு நடுகல் அமைக்கப்பட்டது. பாலைநிலத்தில் நடுகல் மிகுந்து காணப்பட்டதால் நடுகல் வழிபாடும்

நிகழ்ந்தது. பெயரும், சிறப்பும் பொறிக்கப்பட்ட நடுகல்லின் முன் வேலினை ஊன்றி கேடயத்தைச் சார்த்தி, மயில் தோகையை உடன் வைத்து வழிபட்டனர். இதனை,

**"பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்**
**பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்**
**வேல்ஊன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்" (அகம்.131:10-12)**

என்ற அடிகள் உணர்த்தும். போரில் வெற்றியைத்தரும் கொற்றவையை பாலைநில மக்கள் வழிபட்டனர். பிரிந்து சென்ற தலைவன் விரைவில் மீண்டுவர இந்நிலத்து மகளிர் சூலத்தை உடைய கொற்றவையை வேண்டி நூலைக் கையில் கட்டிக்கொண்டு நற்சொல் கேட்டு புள் நிமித்தத்தையும் பார்த்தனர். இதனை,

**"விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்**
**கடனும் பூணாம்; கைந்நூல் யாவாம்;**
**புள்ளும் ஓராம்; விரிச்சியும் நில்லாம்;" (குறுந்.218:1-3)**

என்ற அடிகள் விளக்கும். நம்பியகப்பொருள் கொற்றவையை கன்னி (அழிவில்லாத துர்க்கை) என்று குறிப்பிடும். இதனை,

**"கன்னி விடலை காளை மீளி**
**இன்னகை எயிற்றி எயினர் எயிற்றியர்"[80]**

என்ற அடிகள் உணர்த்தும்.

பாலைநில மக்கள் வறண்ட ஆழமான கிணற்றின் அடியில் ஊறிய சிறிதளவு உவர்நீரை உலையாக வைத்து புல்லரிசி சோற்றினைச் சமைத்து கருவாட்டுடன் சேர்த்து உண்டனர். இதனை,

**"குறுங்காழ் உலக்கை ஓச்சி, நெடுங்கிணற்று**
**வல்ஊற்று உவரிதோண்டி தொல்லை**
**முரவுவாய்க் குழிசி முரிஅடுப்பு ஏற்றி**
**வாராது அட்ட வாடுஊன் புழுக்கல்" (பெரும்பாண்.97-100)**

என்ற அடிகள் விளக்கும். பாலை நிலத்துப் பெண்டிர் விருந்தினர்க்கு நெய்யை அதிகமாக ஊற்றி கொழுத்த ஊனைச் சமைத்தனர். இதனை,

**"கிளர் இழை அரிவை! நெய் துழந்து அட்ட**
**விளர் ஊன் அம்புகை எறிந்த நெற்றி" (நற்.41:7-8)**

என்ற அடிகள் உணர்த்தும். பாலை நிலத்தைக் கடந்து செல்வோர் செந்நாயால் வேட்டையாடி உண்டெஞ்சிய மானின் இறைச்சியை உணவாகக் கொள்வர். இதனை,

**“ஓய்பசிச் செந்நாய் உயங்குமரை தொலைச்சி**
**ஆர்ந்தன ஒழிந்த மிச்சில் சேய் நாட்டு**
**அருஞ் சுரம் செல்வோர்க்கு வல்சி ஆகும்” (நற்.43:3-5)**

என்ற அடிகள் தெளிவுபடுத்தும். பாலை நிலத்து விலங்கான புலி வலியிழந்த பொறிகளையுடைய யானையினைத் தாக்கும் தன்மை கொண்டது. ஆனால் யானையின் கொம்புகளினால் காயம் பெறும். இதனை,

**“மிகுவலி இரும்புலிப் பகுவாய் ஏற்றை**
**வெண்கோடு செம்மறுக் கொளீஇய விடர்முகைக்”**
**(குறுந்.343:3-4)**

என்ற அடிகள் விளக்கும். இந்நிலத்தில் யானைகளுக்கு உணவாகக்கூடிய காய்களைக் கொண்ட பாலை மரம் பூங்கொத்துக்களுடன் காட்சிதரும். காற்றின் வேகத்தால் பெருமளவு இலைகள் உதிர்ந்து நெற்றுக் காய்களுடன் தோற்றமளிக்கும் ஓமை மரம். இதனை,

**“கொடிறு போல் காய வால் இணர்ப் பாலை**
**செல்வளி தூக்கலின் இலை தீர் நெற்றம்**
**கல்இழி அருவியின் ஒல்லென ஒலிக்கும்**
**புல்இலை ஓமைய” (நற்.107:3-6)**

என்ற அடிகள் விளக்கும். பாலை நிலத்தின் நீரின்மையால் வறண்ட இருப்பை மரத்தின் பூக்களை கரடிகள் உண்டன. இதனை,

**“இருங்கிளை எண்கின் அழல்வாய் ஏற்றை**
**கருங்கோட்டு இருப்பை வெண்பூ முனையின்”**
**(அகம்.247:4-5)**

என்ற அடிகள் உணர்த்தும். பாலை நிலத்தில் பந்துக்களைப் போன்ற பழங்களைக் கொண்ட விளாமரம் நிறைந்து காணப்பட்டது. இம்மரத்தின் பழங்கள் வழிச்செல்வோர்க்கு உணவாகப் பயன்பட்டன. இதனை,

**“பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்டு**
**உடும்பு அடைந்தன்ன நெடும்பொரி விளவின்” (நற்.24:1-2)**

என்ற அடிகள் விளக்கும். இளவேனிற் காலத்தில் குரவம், மராமரம், பாதிரி மலர்களும் மலர்ந்து பாலை நிலத்தை அழகூட்டின. இதனை,

**“குரவ மலர மரவம் பூப்பச்”  (ஐங்.357:1)**

**“உயர்கரைக் கான்யாற் றவிர்மண லகன்துறை**

**வேனிற் பாதிரி விரிமலர் குவைஇத்”  (ஐங்.361:1-2)**

என்ற அடிகள் உணர்த்தும். இந்நிலத்து மக்கள் இசைக்கும் பஞ்சுரப்பண்ணின் இசையால் அங்கு வாழும் கழுகு, பருந்து முதலான பறவைகள் அஞ்சின. இதனை,

**“புள்ளொலிக் கமர்த்த கண்ணள் வெள்வேற்**

**றிருந்துகழற் காளையொ டருஞ்சுரங் கழிவோ”  (ஐங்.382:1-2)**

என்ற அடிகள் விளக்கும். எயினர், எயிற்றியர், மறவர் எனவும் குறிப்பிடப்பட்ட பாலைநில மக்கள் வழிப்பறி செய்வதையும், ஆநிரை கவர்தலையும் தொழிலாய்க் கொண்டனர். கொடிய தொழிலையுடைய வில்லேந்திய மறவர்கள் பாலைநிலம் வழியே செல்வோரை வழிப்பறி செய்து பொருட்களைப் பெறுவதற்காகவே காத்துக் கொண்டிருப்பர். இதனை,

**“அத்தம் நண்ணி, அதப்பார்த்து இருந்த**

**கொலைவெங் கொள்கைக் கொடுந்தொழில் மறவர்”**

**(அகம்.363:9-10)**

என்ற அடிகள் உணர்த்தும்.

பாலை நிலமானது பொருள் தேடுவதற்காகத் தலைவியைப் பிரிந்து செல்லும் தலைவனின் பிரிவுத்துயரை வெளிப்படுத்துவதாய் அமைகின்றது. பாலை நிலத்தின் வறண்ட கொடிய தன்மையை எண்ணிப் பிரிவின் வழிக் கலங்குதல் இந்நிலத்து ஒழுக்கமாகும்.

ஆற்றியிருத்தல், புணர்தல், ஊடல், இரங்கல், பிரிதல் எனும் ஒழுக்கங்கள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை எனப்பட்ட நிலங்கள் அனைத்திற்கும் உரியவையே. இருப்பினும் ஒவ்வொரு நிலத்தின் முதற்பொருளுக்கு ஏற்ப ஒழுக்கநிலைகள் முக்கியத்துவம் பெறுகின்றன.

**பழந்தமிழரின் ஒன்றுபட்ட வாழ்வும் வளர்ச்சியும்:**

பழந்தமிழ் மக்களின் வாழ்வியலானது நிலப்பகுப்பின் அடிப்படையிலான தொழிலை மையமாகக் கொண்டு விளங்கியது. இருப்பினும் நானில மக்களும் பிற நிலத்தவரோடு இணங்கிய உணர்வுடன் வாழ்ந்துள்ளனர். தங்கள் நிலத்தில் கிடைக்கும் பொருட்களை மற்ற நிலத்துப் பொருட்களுடன் பண்டமாற்று செய்து உறவினை

வளர்த்துக் கொண்டனர். குறிஞ்சி நிலத்தின் தேன், நெய், கிழங்குகள் நெய்தல் நிலத்து மீனுக்கும் கள்ளுக்காகவும் பறிமாற்றப்பெற்றன. கரும்பு, அவல் முதலானவற்றை கூறுகட்டி விற்ற மருதநில மக்கள் முல்லை நிலத்து மான் இறைச்சியையும் மதுவையும் கொண்டு சென்றனர். உணவுப் பொருட்கள் மட்டுமின்றி குறிஞ்சிப் பண்ணை பரதவர் பாடவும்; நெய்தல் நில மலர்களை குறவர்கள் சூடவும்; முல்லை நிலத்து மக்கள் மருதப்பண் பாடவும்; மருதநில மக்கள் முல்லை நிலத்தைக் கொண்டாடி மகிழ்ந்ததையும் அறியமுடிகின்றது. இதனை,

**"தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யொடு நறவு மறுகவும்**
**தீங்கரும்போடு அவல் வகுத்தோர்**
**மான்குறையொடு மது மறுகவும்**
**குறிஞ்சி பரதவர் பாட நெய்தல்**
**நறும்பூங் கண்ணி குறவர் சூட**
**கானவர் மருதம் பாட, அகவர்**
**நீல்நிற முல்லைப் பல்திணை நுவல"      (பொருநர்.214-221)**

என்ற அடிகள் விளக்கும். பறவையினங்களும் விலங்கினங்களும் மக்களைப் போன்றே பிறநிலத்து வளங்களை நாடிச்சென்றன. முல்லை நிலத்துக் காட்டுக்கோழிகள் மருதநிலத்திற்குச் சென்று நெற்கதிரைக் கொத்தித் தின்றன; மருதநிலத்து மனைக்கோழிகள், குறிஞ்சி நிலத்திற்குச் சென்று தினையை விரும்பித் தின்றன; குறிஞ்சி நிலத்து மலைவாழ் குரங்குகள், நெய்தல் நிலத்துக் கழியிலே மூழ்கி நீராடும்; நெய்தல் நிலத்துக் கழியில் திரியும் நாரைகள் குறிஞ்சி நிலத்து மலைகளில் இளைப்பாறின; இதனை,

**"கானக் கோழி கதிர் குத்த**
**மனைக் கோழி தினைக் கவர**
**வரை மந்தி கழி மூழ்க**
**கழி நாரை வரை இறுப்ப"      (பொருநர்.222-225)**

என்ற அடிகள் விளக்கும். முல்லை, மருதம், நெய்தல் எனப்பட்ட நான்கு நிலப்பகுப்புகளிலும் பழந்தமிழ் மக்கள் பெறுவதற்குரிய வளங்களைப் பயன்படுத்தித் தங்கள் வாழ்வுதனைச் செம்மைப்படுத்தினர். பழந்தமிழ் மக்களிடையே தொழில் வகையால் பாகுபாடு இருந்ததே தவிர பிறப்புப் பற்றி சாதிப்பாகுபாடு இருந்ததில்லை.

**தொகுப்புரை:**

- ❖ இயற்கையோடு இயைந்து ‘வாழ்க்கை வாழ்வதற்கே’ என்ற நேர்த்தியான கொள்கை கொண்டு வாழ்ந்தவர்கள் பழந்தமிழர்கள் என்பதை அறியமுடிகின்றது.

- ❖ தமிழ் மக்கள் வாழ்ந்த பகுதியை தொல்காப்பியம் வடவேங்கடத்திற்கும் தென்குமரிக்கும் இடைப்பட்ட பகுதி என்று எடுத்தியம்புகின்றது.

- ❖ பழந்தமிழ் மக்களின் வாழ்க்கையைச் சங்க இலக்கியங்கள் பிரதிபலிக்கின்றன. இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல் என்பது கோட்பாடு. இதன்வழி தொல்காப்பியம் தமிழரின் வாழ்வியலுக்கு பொருள் இலக்கணம் வகுத்துள்ளதை அறியமுடிகின்றது.

- ❖ அகவாழ்வியலை உணர்த்தும் அகத்திணைகள் ஏழு என்றும் புறவாழ்வியலை உணர்த்தும் புறத்திணைகள் ஏழு என்றும் தொல்காப்பியத்தின் வழி அறியமுடிகின்றது.

- ❖ அகத்திணைகள் ஏழனுள் கைக்கிளை, பெருந்திணை நீங்க ஏனைய ஐந்தும் அன்பின் ஐந்திணை என்றழைக்கப்படுகின்றன. அவற்றுள்ளும் பாலை நீங்கலாக முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நான்கும் தனக்கெனத் தனிநிலம் பெற்றவை என்பதை அறியமுடிகின்றது.

- ❖ கைக்கிளை என்பது ஒருதலைக் காதல் என்பதும், பெருந்திணை என்பது பொருந்தாக்காமம் என்பதையும் அறியமுடிகின்றது.

- ❖ ஒவ்வொரு நிலத்தின் வாழ்வியலையும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனும் மூன்று அகத்திணைக் கூறுகளைக் கொண்டு அறியமுடிகின்றது.

- ❖ மனிதனின் ஒழுக்க நிகழ்வுகளுக்கு அடிப்படை ஆதாரம் நிலம். திணைக்குரிய ஒழுக்கமானது காலம் என்ற தளத்தை மையமாக வைத்து அமைவதால் நிலமும் பொழுதும் முதற்பொருளாக அமைக்கப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

- மனிதன் வாழ்வதற்குத் தேவையான உணவு, நீர், மலர், தெய்வம் உள்ளிட்டவை கருப்பொருளாகக் கருதப்பட்டதை அறியமுடிகின்றது.

- ஒவ்வொரு திணைக்குமுரிய ஒழுக்கமே உரிப்பொருளானதைக் காணமுடிகின்றது.

- முல்லைத்திணைக்குரிய நிலம் காடும் காடு சார்ந்த பகுதியாகும். பெரும்பொழுது கார்காலம், சிறுபொழுது மாலை என்பதை அறியமுடிகின்றது.

- பெரும்பொழுதானது ஓராண்டின் 24 மாதங்களை இரண்டிரண்டு மாதங்களாகக் குறிப்பது. சிறுபொழுது என்பது ஒருநாளின் 24 மணி நேரங்களை நான்கு நான்கு மணி நேரங்களாகப் பகுப்பது என்பதை அறியமுடிகின்றது.

- பெரும்பொழுது 6 பகுப்புகளையும், சிறுபொழுது 6 பகுப்புகளையும் கொண்டு அமைவதைக் காணமுடிகின்றது.

- முல்லைத் திணைக்குரிய பெரும்பொழுதான கார்காலம் ஆவணி புரட்டாசி எனும் இருமாதங்களை தன்னுட் கொண்டதாய் அமைகின்றது.

- முல்லைத்திணையின் சிறுபொழுதான மாலைப்பொழுதானது இரவின் முற்கூறு என்றும் அழைக்கப்படுகின்றது. மாலை 6 மணி முதல் இரவு 10 மணி வரையிலான நான்கு மணி நேரங்களை உள்ளடக்கிக் காணப்படுகின்றது.

- ஒவ்வொரு திணைக்கும் உரிய முதற்பொருள் முதலாகவும் கருப்பொருள் கருவாகவும் உரிப்பொருள் உயிராகவும் நின்று திணை வாழ்வியலை வளப்படுத்தியமையை அறியமுடிகின்றது.

- அன்பின் ஐந்திணை என்று சுட்டப்பெறினும் பாலைக்கெனத் தனிநில அமைப்பு இல்லை. பாலை என்பது வாழ்நிலம் அன்று வழிநிலமே என்பதை அறியமுடிகின்றது.

- திணைச் சமுதாயத்தில் வாழ்ந்த பழந்தமிழ் மக்களிடையே ஒற்றுமை காணப்பட்டது. நெய்தல் நில மக்கள் உப்பு, மீன் உட்பட்ட விளைபொருள்களை மற்ற திணை மக்களுக்குத் தந்து மாறாகப் பிறதிணைப்பொருட்களைப் பெற்றனர்.

- முல்லைநில மகளிரோ நெய்யை விற்று அதற்குப் பதிலாக நெல் முதலான உணவுப் பொருள்களைப் பெற்றுக் கொண்டது தெரியவருகின்றது.

- பழந்தமிழரின் வாழ்வாதாரம் பண்டமாற்றுமுறை வாணிபத்தையும் அடிப்படையாகக் கொண்டு அமைந்ததை அறியமுடிகின்றது.

- பழந்தமிழரின் நிலப்பகுப்பும் வாழ்வியல் முறையும் உலகத்தினரால் போற்றுதற்குரிய பண்பாட்டு முறையில் அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

- ஒருவனுக்கு ஒருத்தி எனும் கற்புக் கோட்பாடு, விருந்தோம்பல், குழந்தை வளர்ப்பு முதலான பண்பாட்டுக் கூறுகள் பழந்தமிழரால் கற்றுக் கொடுக்கப்பட்ட கருவூலங்கள் என்பதை அறியமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. புறப்பொருள் வெண்பாமாலை, கரந்தைப் படலம்: நூ.14:3-4.
2. தமிழண்ணல் தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள் பாகம்-2, ப.11.
3. சிலப்பதிகாரம், காடுகாண்காதை:19-20.
4. இலா.வின்சென்ட், தமிழ் நிலமும் இனமும், ப.32.
5. K.A.N. Sastri, History of South India Oxford, 1966, ப.117,
6. வெள்ளைவாரணன், வித்துவான்.க. தமிழ் இலக்கிய வரலாறு, தொல்காப்பியம், ப.95.
7. அருணாச்சலம்.ப. தொல்காப்பியர், ப.26.
8. S.Vaiyapuripillai, History of Tamil Language and Literature, Chennai, 1956, ப.65.
9. இலா.வின்சென்ட், தமிழ் நிலமும் இனமும், ப.27.
10. மேலது., ப.33.
11. மு.அருணாச்சலம் பிள்ளை, தொல்.பொருள்.அகத்திணையியல், ப.48.
12. தனிநாயக அடிகள், நில அமைப்பும், தமிழ்க் கவிதையும், ப.10.
13. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.171.
14. நம்பியகப்பொருள், சூ.3:4:5.
15. சாமி.சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், ப.88.
16. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.19.
17. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ.), தொல்.பொருள்.அகத்.4, ப.15.
18. மு.அருணாச்சலம் பிள்ளை, அகத்திணையியல் உரைவளம், ப.2.
19. ம.ரா.போ.குருசாமி, சங்ககாலம், ப.25.
20. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.138.
21. சாமி.சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், ப.93.
22. சிலப்பதிகாரம், காடுகாண்காதை:64-66.
23. கோ.சுரேஷ், இலக்கியங்களில் வாழ்வியல் சிந்தனைகள், ப.10.
24. தனிநாயக அடிகள், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும், ப.47.

25. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.95.

26. மேலது., ப.95.

27. தனிநாயக அடிகள், நிலஅமைப்பும் தமிழ்க்கவிதையும், ப.118.

28. இளம்பூரணம் மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ.), தொல்.பொருள்.அகத்.4, ப.15.

29. எஸ்.உலகநாதன் பிள்ளை, குறிஞ்சிப்பாட்டின் பருப்பொருள் பத்துப்பாட்டு ஆய்வுகள் (தொ.ஆ.) நைசி.கரிகாலன், ப.73.

30. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.29.

31. தனிநாயக அடிகள், நில அமைப்பும், தமிழ்க் கவிதையும், ப.39.

32. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.101.

33. மேலது., ப.101.

34. மு.வேங்கடசாமி நாட்டார், கபிலர், ப.31,

35. ஞா.மாணிக்கவாசகன், பத்துப்பாட்டு மூலமும் விளக்க உரையும், ப.291.

36. புறப்பொருள் வெண்பாமாலை, பொதுவியற்படலம்:நூ.37.

37. திணைமாலை நூற்றைம்பது: பா.18.

38. ஐந்திணை ஐம்பது: பா.6:1-4.

39. நைசி.கரிகாலன், (தொ.ஆ.), பத்துப்பாட்டு ஆய்வுகள், ப.78.

40. திணைமாலை நூற்றைம்பது: பா.138:1-4.

41. திருக்குறள்: 1227.

42. சிலப்பதிகாரம்: கானல்வரி: 18:5-6.

43. ஐந்திணை எழுபது: பா.65:1-4.

44. மு.சண்முகம் பிள்ளை. தொல்காப்பியம், பொருள். இளம்பூரணம்:1, ப.25.

45. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.46.

46. சிலப்பதிகாரம், வேனிற்காதை: 1-7.

47. கு.சிவப்பிரகாசம், புறநானூற்றில் வாழ்வியல் விழுமியங்கள், ப.92.

48. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.98.

49. க.திலகவதி, சங்ககால மகளிர் வாழ்வியல், ப.18.

50. சிலப்பதிகாரம், இந்திரவிழாவூர் எடுத்த காதை, 2:24-32.

51. கு.சிவப்பிரகாசம், புறநானூற்றில் வாழ்வியல் விழுமியங்கள்.

52. ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப.86.
53. மதுரை.271-285, பெரும்பாண்,196-206, ஐங்.438:2, 407:4, சிறுபாண்.166, பட்டினப்.245, அகம்.64:8-14, 34:1-4, மலைபடு.102, 105.
54. சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை, 14:1-2.
55. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல், ப.146.
56. டாக்டர் ஏ.சுவாமிநாதன் தமிழ்நாட்டு சமுதாயப் பண்பாட்டு வரலாறு, ப.27.
57. அ.கா.பெருமாள், உணவுப் பண்பாடு, ப.1.
58. வெற்றிச்செல்வன், தமிழ் இலக்கியத்தில் மலர்கள், ப.3.
59. சூடாமணி நிகண்டு, மரபுப்பெயர் தொகுதி, நூ.325.
60. சிலப்பதிகாரம், அழற்படுகாதை, 93-94.
61. பெரியபுராணம், பா.1030.
62. பிங்கல நிகண்டு, நூ.375.
63. நற். 242:3-4,371:1, குறுந்.21:3-4,66:1, ஐங்.412:1,420:1-2, முல்லைப்பா.94.
64. சிறுபாண்.164:9, ஐங்.405:3-4, 412:1, 420:2, நற். 242:4, 371:1,
65. புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம்:நூ.4, பூவைநிலை.
66. சிலப்பதிகாரம், வேனிற்காதை, 52-55.
67. பக்தவத்சலபாரதி, தமிழகப் பழங்குடிகள், ப.130.
68. நற்.94:1,314:3, குறுந்.168:1,251:1, அகம்.42:1-3,295:19.
69. அகம்.124:14, 214:3, சிலம்பு.17:21, நெடுநல்.3.
70. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.28.
71. தனிநாயக அடிகள், நிலஅமைப்பும் தமிழ்க்கவிதையும், ப.66.
72. சிலப்பதிகாரம் குன்றக்குரவை: 15-17.
73. தமிழ்ப் பேரகராதி, தொகுதி இரண்டு, ப.799.
74. தமிழ்ப்பேரகராதி, தொகுதி நான்கு, ப.2547.
75. வி.சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.44.
76. நம்பியகப்பொருள், சூ.23.
77. சிலப்பதிகாரம், நாடுகாண்காதை: 136-139.
78. புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண்படலம் நூ.19, களவழி வாழ்த்து.
79. சூளாமணி: பா.34:1-2.
80. நம்பியகப்பொருள்: சூ:21.

# இயல்-2

## அற்றைநாள் ஆயர்களின் அகவாழ்வியல்

முல்லை நிலத்தில் வாழ்ந்த, கால்நடைப் பொருளாதாரத்தை அடித்தளமாகக் கொண்ட மக்கள் குழுவினர் ஆயர் என்ற பெயர் பெற்றனர். தமிழிலக்கிய மரபுகளுக்கும், நெறிகளுக்கும் தொடக்க மூலமாக அமையும் தொல்காப்பியம் முல்லைநிலத்து மக்களை 'ஆயர், 'வேட்டுவர்', 'குறும்பொறைநாடன்' (தொல்.பொருள்.அகத்.23) என வகைப்படுத்தும். ஐந்திணைகளைக் களமாகவும் மனித உளவியலை மையமாகவும் கொண்டு அக, புற நிகழ்ச்சிகளைக் கருவியாக்கி அவற்றில் தோன்றும் சிறுசிறு சிக்கல்களைப் பின்னிப்புனையும் சங்க இலக்கிய நூல்கள் "முல்லைநிலவாழ் மக்களை குடவர் (அகம்.393:16) பொதுவர் (கலி.101:49) கோவலர் (அகம்.74:16) இடையர்(ன்) (புறம்.54:11) ஆயர் (முல்லைக்கலிப் பாடல்கள்) எனப் பல பெயர்களில் விரிவுபடுத்திக் காட்டுகின்றது."[1]

வாழ்க்கை என்பதனை நாணயமாகக் கொண்டால் அகம் என்பதும் புறம் என்பதும் அதன் இரண்டு பக்கங்கள் என்பது தெளிவுபெறும். அன்பினால் பொருந்திய ஒருவனும் ஒருத்தியும் இணைந்து வாழ்கின்ற காலத்துப் பிறந்த பேரின்பமே அகம் எனப்பட்டது. பருவம் எய்திய ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு இருவரும் ஒருவராய் இணைந்து வாழும் இல்வாழ்க்கையே அகவாழ்க்கை என சிறப்புப் பெற்றது. பழந்தமிழர் தம் அகவாழ்வு களவும், கற்பும் சார்ந்து வளர்ச்சி பெற்றது. பழந்தமிழ்ச் சமூகத்தில் வாழ்ந்த அற்றைநாள் ஆயர்குல மக்களின் அகவாழ்வியல் களவும், கற்பும் சார்ந்து சிறப்புற்றிருந்தது. ஆயர்களின் அகவாழ்வியலில் கற்பு முதன்மைப்படுத்தப்பெறும். இருப்பினும் அவர்களின் களவொழுக்கம் முல்லைக்கலியில் வெளிப்படுகின்றது. களவு கற்பாக மாறுதற்கு நிகழும் திருமணம் 'ஏறுதழுவல்' எனும் வீரவிளையாட்டை மையப்படுத்தி அமைந்தது. களவு ஒழுக்கம் கற்பாகச் சிறக்கும் திருமணத்தையும், கற்பு வாழ்க்கையில் தலைவன் தலைவியருக்கு ஏற்படும் பிரிவையும், தலைவியின் ஆற்றியிருக்கும் ஒழுக்கத்தையும், தலைவனின் கடமையையும், தலைவியின் இல்லறப் பண்பாட்டினையும் ஆராய்ந்து விளக்குவதாய் இவ்வியல் அமைகின்றது.

**ஆயர்:**

முல்லை நிலத்தில் வாழ்ந்த கால்நடை வளர்ப்பினை மேற்கொண்ட பிரிவினர் 'ஆயர்' எனப்பட்டனர். ஆயர் பழந்தமிழகத்தில் வாழ்ந்த தொன்மையான குடியினராகக் கருதப்படுகின்றனர். "முல்லைநில மக்களைக் குறிக்கும் ஆயரென்னும் இப்பெயர் ஆநிரை மேய்த்தற்றொழிலால் வந்த பெயராகும் என்கின்றார் மு.அருணாச்சலம் பிள்ளை."[2] "ஆயம் என்ற சொல்லுக்கு ஆதாயம், சுங்கம், சூதாடுங்கருவி, தாய், தோழி, ஞானி, நீளம், மகளிர் கூட்டம், மல்லரி எனப் பொருள் தருகின்றது சதுரகராதி."[3]

"ஆயம் எனப்படும் பசுக்கூட்டங்களை மேய்த்தவர் ஆயர் என்கின்றார் சி.ஈ.இராமச்சந்திரன்."[4] "ஆவினை மேய்ப்பவர் ஆயர் எனப்பட்டனர் என்கின்றார் கா.வெள்ளைவாரணனார்."[5] ஆநிரைகள் பெருஞ்செல்வமாகக் கருதப்பட்டன. எனவே தான் மன்னராட்சியில் போரின் தொடக்கமாக ஆநிரை கவர்தல் நடைபெற்றது. பெருஞ்செல்வமான ஆநிரைகளைக் காப்பதும் மேய்ப்பதும் அவற்றிலிருந்து பெறப்படும் பால்பொருட்களை விற்று வாழ்வதும் ஆயர்களின் வாழ்நிலையாகும். இதனை,

> **"புனத்துளான் எந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ?**
> **இனத்துளான் என்னைக்குக் கலத்தொடு செல்வதோ?**
> **தினைக்காலுள் யாய்விட்ட கன்றுமேய்க் கிற்பதோ?"**
>
> **(கலி.108:31-33)**

என்ற அடிகள் விளக்கும். "ஆயர்-இடையர், ஆயர்குலம்-இடைச்சாதி, ஆயர்பாடி-இடையரூர் கிருஷ்ணன் ஒளிக்கப்பட்டு வளர்ந்த ஊர். ஆயன்-இடையன், கிருஷ்ணன் என்று ஆயர் என்பது இடையனைக் குறிப்பதாய்த் தமிழ்மொழி அகராதி பொருள் கூறும்."[6]

**ஆயர் பிரிவுகள்:**

முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள் 'ஆயர்' என்ற பொதுவான குலப்பெயரைக் கொண்டிருந்தாலும் அவர்கள் வளர்த்த கால்நடைகளின் அடிப்படையில் **'மாட்டினத்து ஆயர்', 'ஆட்டினத்து ஆயர்', 'எருதினத்து ஆயர்'** எனப் பிரிக்கப்பட்டனர். மாடுகளை மேய்த்து வருபவர்களை **'மாட்டினத்து ஆயர்கள்'** என்றும் ஆடுகளை மேய்த்து வருபவர்களை **'ஆட்டினத்து ஆயர்கள்'** என்றும் வகைப்படுத்தினர். இதனை,

**"எல்லா! இ∴தொன்று கூறு குறும்புஇவர்**
**புல்லினத் தார்க்கும் குடஞ்சுட் டவர்க்கும்எம்**
**கொல்லேறு கோடல் குறையெனக் கோவினத்தார்**
**பல்வேறு பெய்தார் தொழூஉ"** **(கலி.107:1-4)**

என்ற அடிகள் உணர்த்தும். மாட்டினத்து ஆயர்களில் பசுவினத்து ஆயர், எருதினத்து ஆயர் என இருபிரிவுகளாக உள்ளனர்.

**பசுவினத்து ஆயர்:**

பசுக்களை வளர்த்து அவற்றின் பால், மோர், வெண்ணெய் முதலியவற்றை உணவாகவும், வாணிபப் பொருளாகவும் பயன்படுத்தியவர் பசுவினத்து ஆயர்கள் எனப்பட்டனர். இதனை,

**"இடுதேள் மருந்தோநின் வேட்கை? தொடுதரத்**
**துன்னித்தந் தாங்கே நகைகுறித்து எம்மைத்**
**திளைத்தற்கு எளியமாக் கண்டை; அளைக்கு எளியாள்**
**வெண்ணெய்க்கும் அன்னள் எனக்கொண்டாய்"** **(கலி.110:3-6)**

என்ற அடிகள் விளக்கும். இதனை,

**"தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய**
**நல்லினத்து ஆயர் ஒருங்குதொக்கு எல்லாரும்"** **(கலி.104:5-6)**

**"இகுளை! இ∴து ஒன்று கண்டை! இ∴து ஒத்தன்!**
**கோட்டினத்து ஆயர் மகனன்றே?** **(கலி.103:32-33)**

என்ற அடிகள் உணர்த்தும். பசுவினத்து ஆயர் **'நல்லினத்து'** ஆயர் எனவும் **'கோட்டினத்து ஆயர்'** எனவும் அழைக்கப்பட்டனர். இவ்ஆயர்களின் தலையாயப் பணி ஆநிரைகளை மேய்த்தலும், பால் கறத்தலும் ஆகும். கறந்த பாலினைத் தயிராகவும், மோராகவும் பக்குவப்படுத்தி அருகிலுள்ள இடங்களுக்குச் சென்று விற்று வருதல் ஆயர்குலப் பெண்களான ஆய்ச்சியரின் விருப்பமான தொழிலாக மேற்கொள்ளப்பட்டது. இதனை,

**"அ∴து அவலம் அன்று மன**
**ஆயர் எமரானால் ஆய்த்தியேம் யாம்மிகக்"** **(கலி.108:8-9)**

என்ற அடிகள் விளக்கும். மேலும் பல பசுக்களைக் கொண்ட **'கோவலர்' (குறுந்.358:6, அகம்.124:14, புறம்.224:15, 269:10, ஐங்.476:3), 'பொதுவர்' (கலி.103:5)** எனும் பிரிவினரும் இவ்வகையினரே.

**ஆட்டினத்து ஆயர்**

ஆடு மேய்ப்பதையே தொழிலாகக் கொண்டவர்கள் ஆட்டினத்து ஆயர்கள் எனப்பட்டனர். இவர்கள் **'புல்லினத்து ஆயர்'** எனவும் அழைக்கப்பட்டனர். இதனை,

**"தளர்இயால்! என்னறிதல் வேண்டின் பகையஞ்சாப்**
**புல்லினத்து ஆயர் மகனேன் மற்றுயான்" (கலி.113:6-7)**

என்ற அடிகள் உணர்த்தும். ஆட்டினத்து ஆயர்கள் இடையர் எனவும் குறிக்கப்பட்டுள்ளனர். ஆடுகளைப் பராமரித்து வளர்ப்பவர்கள் இடையர் **(அகம்.94:3-4, 394:11-12, புறம்.54:11)** எனப்பட்டதை சங்க இலக்கியம் சுட்டிக் காட்டுகின்றது. "இடையர்கள் முல்லை நிலஞ்சார்ந்த ஆடுமேய்க்கும் தமிழ் நாட்டிற்குரிய சாதியார் என்கின்றார் எட்கர் தர்ஸ்டன்"[7] "குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைப் பாகுபாட்டில் இடையர்கள் முல்லை நிலஞ்சார்ந்த ஆடு மேய்க்கும் தமிழ்நாட்டிற்குரிய சாதியார் ஆவர் என்கின்றார் பக்தவத்சலபாரதி."[8] "ஆயர் என்பதற்கு இடையர் எனப் பொருள் கூறுகின்றது சதுரகராதி."[9]

**எருதினத்து ஆயர்:**

உழவுக்குப் பயன்படும் எருதுகளை அதிகமாக வைத்திருந்த எருதினத்து ஆயர்கள் கோவினத்து ஆயர் எனவும் அழைக்கப்பட்டனர். இதனை,

**"கொல்லேறு கோடல் குறையெனக் கோவினத்தார்**
**பல்லேறு பெய்தார் தொழூஉ" (கலி.107:3-4)**

என்ற அடிகள் உணர்த்தும். மேலும் இவர்கள் எருதுகளுடன் பசுக்களையும் வளர்த்து அதன்மூலம் கிடைக்கும் பால் முதலிய பொருட்களை விற்று தங்களின் தேவையைப் பூர்த்தி செய்து கொண்டனர். ஆகையால் கோவினத்து ஆயர்களும் பசுவினத்து ஆயர் தான் என்பர். இதனை,

**"கோவினத்து ஆயர் மகனன்றே? ஓவான்**
**மறையேற்றின் மேலிருந்து ஆடித் துறைஅம்பி" (கலி.103:37-38)**

என்ற அடிகள் நிறுவும்.

ஆட்டினத்து ஆயரைவிட மாட்டினத்து ஆயர் சிறப்பானவர்களாகக் காணப்பட்டனர். இதனை,

**"புல்லினத்து ஆயனைநீ யாயின், குடஞ்சுட்டு**

**நல்லினத்து ஆயர் எமர்"** **(கலி.113:9-10)**

என்ற அடிகள் உணர்த்தும். "சமூகப் பொருளாதார நிலையில் ஆட்டினத்து ஆயரைவிட மாட்டினத்து ஆயரே மதிப்பும் செல்வாக்கும் உடையவராகக் கருதப்பட்டனர்."[10] இருப்பினும் பசுவினத்தாயரும் ஆட்டினத்தாயரும் தம்முள் திருமணத்தொடர்பு கொண்டிருந்தனர். **(கலி.113)**

**அகவாழ்க்கை:**

துறவறத்தைக் காட்டிலும் இல்லறமே வீடுபேறுக்கு வழிவகுக்கும் என்று இல்வாழ்க்கையே பெரிதும் போற்றப்பட்டது. ஓர் ஆடையை இரண்டாகப்பகுத்து உடுத்த வேண்டிய வறுமை நிலையிலும்கூட வாழ்நாள் முடியும் வரை ஒருவனும் ஒருத்தியும் ஒழுக்கத்துடன் இணைந்து வாழ்வதே வாழ்க்கை எனப்பட்டது. இதனை,

**"ஒன்றன்கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்**

**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை"** **(கலி.18:10-11)**

என்ற அடிகள் மெய்ப்பிக்கும். "ஒருவனும் ஒருத்தியும் இணைந்து வாழ்வாங்கு வாழ்வாராயின் அவர்களுக்கு வீடுபேறு தானாக வந்தெய்தும் என்பதை கொள்கையாகவே கொண்டிருந்தனர் என்கின்றார் சு.கு.பன்னீர்செல்வம்."[11] பழந்தமிழரின் அகவாழ்க்கையானது முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து நிலங்களின் உரிப்பொருளான ஆற்றியிருத்தல், கூடல், ஊடல், இரங்கல், பிரிதல் முதலியவற்றின் அடிப்படையில் அமைந்தது. "மனிதனின் அகவாழ்க்கையே இலக்கியத்தின் கருப்பொருளாகின்றது என்கின்றார் வை.சச்சிதானந்தன்."[12]

அகவாழ்க்கை **'களவு', 'கற்பு'** எனும் இருநிலைகளை உள்ளடக்கியது. திருமணத்திற்கு முன்பு தலைவன் தலைவியரிடையே நிகழும் இன்பம் களவு எனவும், திருமணத்திற்குப் பின்னர் கணவன் மனைவி இணைந்து நடத்தும் இல்லறநெறி கற்பு எனவும் அகப்பொருள் மரபு இயம்பும். நம்பியகப்பொருள் களவு, கற்பு எனும் இருவகை ஒழுக்கங்களும் ஐந்திணைகளிலும் இடம்பெறுவதை,

**"அளவில் இன்பத்து ஐந்திணை மருங்கின்**

**களவு; கற்பு எனஇரு கைகோள் வழங்கும்"**[13]

என்ற சூத்திரம் விளக்கும். இங்கு களவும் ஒழுக்கமாகவே கருதப்பட்டது குறிப்பிடத்தக்கது. ஆயர்களின் அகவாழ்வியல் களவும், கற்பும் சார்ந்தே அமைகின்றது.

**களவு ஒழுக்கம்:**

அன்பினால் ஒன்று கலந்த ஆணும் பெண்ணும் பிறர் அறியாது மறைந்து காணும் இன்பமே களவு எனப்பட்டது. இக்களவொழுக்கமானது பிறரால் அறிய இயலாத நிலையில் மறை (வேதம்) எனவும், பழந்தமிழ் மக்களால் அறம் எனவும் போற்றப்பட்டது. தொல்காப்பியரும் இக்களவினை **'அருமறை'** என்றும் **'மறைந்த ஒழுக்கம்'** என்றும் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்"**

**(தொல்.பொருள்.களவு.34)**

**"மறைந்த ஒழுக்கத் தோரையும் நாளும்**
**துறந்த ஒழுக்கங் கிழவற்கு இல்லை"**

**(தொல்.பொருள்.களவு.45)**

என்ற நூற்பாக்கள் உணர்த்தும்.

**களவும் காந்தருவ மணமும்:**

இன்பம், பொருள், அறம் என்று சொல்லப்பட்ட அன்புடன் சேர்ந்த ஐந்திணையிடத்தும் நிகழும் காமக்கூட்டத்தில் களவு என்பதை வடநூலில் கூறப்படும் பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் உள்ளிட்ட எண்வகை மணங்களுள் காந்தருவத்துடன் ஒக்கும் என்கின்றார் தொல்காப்பியர். இதனை,

**"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**
**அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்**
**காமக்கூட்டங் காணுங் காலை**
**மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்**
**துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே"**

**(தொல்.பொருள்.களவு.1)**

என்ற நூற்பா விளக்கும். மேலும் இறையனார் அகப்பொருளுரை இதனை,

**"அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது**
**அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்**
**கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்"[14]**

எனக் குறிப்பிடுகின்றது. மேலும் காந்தருவம் என்பது கொடுப்பவரும் கேட்பவருமின்றித் தலைவனும் தலைவியும் தனியிடத்துக் கூடுவது என்றும் விளக்குகின்றது.

**களவொழுக்கத்தின் வகைகள்:**

களவின் வகைகளை 'மறையறிந்தோர் வகுத்த நெறி' என்கின்றார் தொல்காப்பியர். இதனை,

> **"காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்**
> **பாங்கொடு தழாஅலும் தோழியிற் புணர்வுமென்று**
> **ஆங்கநால் வகையினும் அடைந்த சார்வொடு**
> **மறையென மொழிதல் முறையோர் ஆறே"**
>
> **(தொல்.பொருள்.செய்யு.178)**

என்ற நூற்பா உணர்த்தும்.

களவொழுக்கமானது நான்கு வகைப்படும். அவை;

- இயற்கைப் புணர்ச்சி (காமப்புணர்ச்சி)
- இடந்தலைப்பாடு
- பாங்கற்கூட்டம்
- பாங்கியற்கூட்டம்

என்பனவாகும். களவென்னும் கைகோளிற் புணர்ச்சி, இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பாங்கியற் கூட்டமென நான்கு வகையினையுடையது என்கின்றார் நம்பியகப்பொருளார். இதனை,

> **"இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப் பாடு**
> **பாங்கற் கூட்டம் பாங்கியற் கூட்டம்; என்று**
> **உணர்த்திய களவிற் புணர்ச்சிநால் வகைத்தே"[15]**

என்ற சூத்திரம் விளக்கும்.

**ஆயர்களின் வாழ்வியலில் களவு:**

ஆயர்களின் வாழ்வியலில் **'முல்லை சான்ற கற்பு'** என கற்புநெறி சார்ந்த இல்வாழ்க்கையே அடையாளப்படுத்தப்படும். இருப்பினும் கற்பிற்குக் காரணமாய் களவும் இம்மக்களின் வாழ்வியலில் இடம்பெற்றுள்ளதை முல்லைக்கலிப் பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

**ஆயர்களின் களவு ஒழுக்கத்தில் இயற்கைப் புணர்ச்சி:**

கொடுப்பவரும் கொள்வோரும் இன்றித் தலைவனும் தலைவியும் நல்லூழால் தாமே கூடும் களவுப் புணர்ச்சியின் முதல்நிலை இயற்கைப் புணர்ச்சியே ஆகும். அன்புடையார் இருவர் முற்பிறப்பின் நல்வினையால் எதிர்பாராது ஓரிடத்தில் சந்திக்கும் போது நிகழும் நெஞ்சக்கலப்பே இயற்கைப் புணர்ச்சி என்பர். இப்புணர்ச்சி தெய்வத்தாலும் தலைவியின் முயற்சியாலும் நிகழும் என்பதை நம்பியகப்பொருள் விளக்குகின்றது. இதனை,

**“தெய்வந் தன்னில் எய்தவும்; கிழத்தியின்**
**எய்தவும்; படூஉம் இயற்கைப் புணர்ச்சி”**[16]

என்ற சூத்திரம் உணர்த்தும்.

மனக்குறிப்பு இல்லாமல் எதிர்பாராத நிலையில், இயல்பாக நிகழ்வதால் **‘இயற்கைப் புணர்ச்சி’** எனப்பெறும் இப்புணர்ச்சி தெய்வத்தால் கூடுதலான் **‘தெய்வப்புணர்ச்சி’** எனவும் அன்பினால் கூடுதலால் **‘காமப்புணர்ச்சி’** எனவும், களவின் முதன் முதலாகக் கூடல் பெறுவதால் **‘முன்னுறு புணர்ச்சி’** எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தால் கிட்டும் போது எவ்வித முயற்சியும் இன்றித் தானே முடிவுறும். தலைவியால் கிட்டிடும் போது மிகுந்த முயற்சிக்குப் பின்னே முடியும் என்றும் இயம்புவர். இதனை,

**“இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தின் எய்துழி**
**முயற்சி இன்றி முடிவது ஆகும்”**[17]

என்ற சூத்திரம் உணர்த்தும். ஆயர்குலப் பெண்கள் மோர் விற்பதற்காக அருகில் உள்ள இடங்களுக்குச் செல்லும் பொழுது தலைவியின் அழகைக் கண்டு தலைவன் காதலுறுவான். தலைவியும் தலைவன் மீது கொண்ட அன்பால் அவ்விடத்தைவிட்டு அகல இயலாது நிற்பாள். தலைவனின் அன்பினை தலைவி ஏற்றுக் கொண்டதை அறிந்த தலைவன் புணர்ச்சிக்கு விழைவான். இந்நிலையில் தலைவி தாகத்திற்கு சிறிது மோர் அளித்தால் வெண்ணெய் வேண்டி நிற்பது போல் காமத்திற்கு உடனே மருந்தளிக்க இயலாது எனக் கடிந்துரைப்பாள். முதல் கன்றை ஈன்ற பசு அக்கன்றைவிட்டு அகழாது மேய்ச்சலுக்கும் செல்லாது நிற்பதைப் போல் தலைவியின்

அழகில் தலைவன் மனம் அலைபாயும். தலைவி சுற்றத்தாரின் பார்வைக்குப் பயந்து மறுநாள் சந்திப்பதற்கு இடம்கூறி நகர்வது இயற்கைப் புணர்ச்சிக்கு சிறப்பு. இதனை,

**“… … … … … … … … … தொடுதரத்**
**துன்னித்தந் தாங்கே நகைகுறித்து எம்மைத்**
**திளைத்தற்கு எளியமாக் கண்டை; அளைக்கு எளியாள்**
**வெண்ணெய்க்கும் அன்னள் எனக்கொண்டாய் ஒண்ணுதால்**
**ஆங்குநீ கூறின், அனைத்தாக நீங்குக,**
**அச்சத்தால் மாறி அசைவினால் போத்தந்து**
**நிச்சம் தடுமாறும்; மெல்லியல் ஆய்மகள்**
**மத்தம் பிணித்த கயிறுபோல் நின்நிலம்**
**சுற்றிச் சுழலும்என் நெஞ்சு”          (கலி.110:4-11)**

என்ற அடிகள் விளக்கும். ஆயர்கள் மேய்த்தல் தொழிலுக்காக அழைத்து வந்த பசுக்கூட்டங்கள் விருப்பமான ஏறுகளுடன் இன்புற்றிருக்கும் வேளையில் காட்டாற்றின் கரையோரம் உள்ள சோலையில் மலர்களைச் சூடி விளையாடி இன்புறுவர். பகற்பொழுதில் இயற்கைப் புணர்ச்சியில் ஈடுபட்ட ஆயர் மகன் இரவுப் பொழுதிலும் இன்புற தலைவியை அழைத்து வேண்டுவான். இதனை,

**“பல்கால்யாம் கான்யாற்று அவிர்மணல் தண்பொழில்**
**அல்கல் அகலறை ஆயமொடு ஆடி**
**முல்லை குருந்தொடு முச்சிவேய்ந்து எல்லை**
**இரவுற்றது இன்னம் கழிப்பி”          (கலி.113:23-26)**

என்ற அடிகள் உணர்த்தும். “இயற்கைப் புணர்ச்சி என்பது ஒருமுறையுடன் தணிவதல்ல. தலைவன் தலைவியின் களவு இன்பத்தை மிகுவிப்பது என்கின்றார் வ.சுப.மாணிக்கம்.”[18]

**ஆயர்களின் களவு ஒழுக்கத்தில் இடந்தலைப்பாடு:**

இயற்கைப் புணர்ச்சியில் இணைந்த தலைமக்கள் மீண்டும் சந்தித்து மகிழ இடம் குறிப்பது இடந்தலைப்பாடு எனப்படும். களவுக்காதலில் தலைமக்கள் மறைந்து கூடும் குறியிடங்களை பகற்குறி, இரவுக்குறி எனப் பகுத்தனர். இதனை தொல்காப்பியர்,

**“குறியெனப் படுவது இரவினும் பகலினும்**
**அறியக் கிளந்த ஆற்றதென்ப”          (தொல்.பொருள்.களவு.40)**

என்ற நூற்பாவால் விளக்குகின்றார். மேலும் பகற்குறி மதிலுக்கு வெளியிலும், இரவுக்குறி தலைவியின் இல்லத்திற்கும் மதிலுக்கும் இடையேயும் நடைபெறும் என்கின்றார் தொல்காப்பியர். இதனை,

**"பகற்புணர் களனே புறனென மொழிப**
**அவனறி வுணர வருவழி யான"** **(தொல்.பொருள்.களவு.42)**

**"இரவுக் குறியே இல்லகத் துள்ளும்**
**மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே**
**மனையகம் புகாஅக் காலையான"** **(தொல்.பொருள்.களவு.41)**

என்ற நூற்பாக்கள் விளக்கும். குறியிடம் தலைவிக்கு நன்கு பழக்கமுடைய இடமாகவே ஏற்படுத்தப்பட்டது. களவுக் காதலிலும் தலைவியின் பாதுகாப்பை உணர்ந்தே தலைவன் செயல்பட்டுள்ளதை அறியமுடிகின்றது. பகற்குறியாவது இல்லத்தின் எல்லையைக் கடந்தது. இரவுக்குறியாவது இல்லத்தின் எல்லைக்குள் அமைவது எனத் தெளிவாக விளக்கம் தருகின்றது நம்பியகப்பொருள். இதனை,

**"இல்வரை இகந்தது பகற்குறி; இரவுக்குறி**
**இல்வரை இகவா இயல்பிற்று ஆகும்"**[19]

என்ற சூத்திரத்தால் விளக்கும். ஆயர்களின் களவு ஒழுக்கத்தில் இடந்தலைப்பாடு என்பது பகற்பொழுதிலும், இரவுப்பொழுதிலும் நடைபெற்றது. பகற்பொழுதில் கன்று மேய்க்கச் செல்லும் கொல்லைப் புறத்தில் நிகழ்ந்தது என்பதற்கு,

**"நின்றாய் நீ, சென்றீ, எமர்காண்பர்; நாளையும்**
**கன்றொடு சேறும் புலத்து"** **(கலி.110:22-23)**

என்ற அடிகள் விளக்கம் தரும். ஆயர்களின் வாழ்விலும் பகற்பொழுதை விட இரவுப்பொழுதில் சந்திப்பது கடினமானதொன்றாகவே கருதப்பட்டது. இரவுப் பொழுதில் தலைவியின் வீட்டிற்கு அருகிலும், வீட்டின் கொல்லைப்புறத்தில் உள்ள மரங்களின் மறைவிலும் தலைமக்களின் சந்திப்பு நிகழ்ந்தது. இரவுக்குறிக்கு ஆயர்குல மக்களின் நடமாட்டம் இடையூறாய் இருந்தது. ஆயர்குலப் பெண்கள் பாண்டியனை வாழ்த்தியும் மலர்கள் நிறைந்த மன்றங்களில் குரவைக்கூத்தினை ஆடியும் மகிழ்வர். அப்பெண்களின் கண்களில் படாமல் ஆம்பல் பண்ணை இசைத்துக் குறி செய்து ஆய்ச்சியரைச் சந்திக்க ஆயர் சென்றனர். இதனை,

**"தேம்கொள் பொருப்பன் சிறுகுடி எம்ஆயர்**
**வேந்துஊட்டு அரவத்து நின்பெண்டிர் காணாமல்**
**காஞ்சித்தாது உக்கன்ன தாதுஎரு மன்றத்துத்**
**தூங்கும் குரவையுள் நின்பெண்டிர் கேளாமை**
**ஆம்பற் குழலால் பயிர்பயிர் எம்படப்பைக்**
**காஞ்சிக்கீழ்ச் செய்தேம் குறி"** **(கலி.108:58-63)**

என்ற அடிகள் விளக்கும்.

**ஆயர்களின் களவு ஒழுக்கத்தில் பாங்கற் கூட்டம்:**

தலைவியைக் கூடி இன்பம் பெற்ற தலைவன் தலைவியைச் சந்திக்க இயலாத காலத்தில் தோழனிடம் தன் எண்ணங்களைத் தெரிவிப்பதும் தோழனின் முயற்சியால் தலைவன் தலைவியைக் கண்டு இன்பம் பெறுதலும் 'பாங்கற் கூட்டம்' எனப்படும். ஆயர்குல ஆண் நறுமணமிக்க மலர்களைச் சூடி சோலையில் விளையாடும் ஒரு பெண் மீது காதல் கொண்டதும் தன் தோழனிடம் அவளைக் கூடுவதற்கு வழி கேட்பதற்கு தோழன் ஏறுதழுவி வெற்றிபெற்றால் மட்டுமே தலைவியைப் பெற முடியும் எனக் கடிந்துரைப்பான். ஆயரினத் தோழன் தலைவனை கற்பு சார்ந்த திருமணத்தின் மூலமே தலைவியைக் கூடவேண்டும் என வழிநடத்துவது குறிப்பிடத்தக்கது. இதனை,

**"ஓஒஇவள், பொருபுகல் நல்ஏறு கொள்பவர் அல்லால்**
**திருமாமெய் தீண்டலர் என்று கருமமா**
**எல்லாரும் கேட்ப அறைந்து அறைந்து எப்பொழுதும்**
**சொல்லால் தரப்பட் டவள்"** **(கலி.102:9-12)**

என்ற அடிகள் விளக்கும்.

**ஆயர்களின் களவு ஒழுக்கத்தில் பாங்கியற்கூட்டம்:**

களவினால் பெறும் இன்பம் நீண்ட நாளைக்குத் தொடர்ந்து நிகழவேண்டும் எனத் தலைவன் விரும்புவான். அதற்குத் தலைவிக்குச் சிறந்தாளாகிய தோழியை இரந்து பின்னின்று அவள் வாயிலாகத் தலைவியைக் கூடுவது **'பாங்கியற்கூட்டம்'** எனப்படும். இதற்கு **'இகுளையிற் கூட்டம்'** என்றும் பெயர் கூறுவர். "சங்க இலக்கியத்துள் களவுப் பாடல்கள் 882ல் 40 பாடல்கள் ஏனைய மூன்று வகை களவுக்குமுரியன. எஞ்சிய 90 விழுக்காடு பாடல்கள் தோழியற் கூட்டத்திற்கு உரியனவே என்கின்றார் வ.சுப.மாணிக்கம்."[20]

ஆயர்குலத் தலைவியின் மனநிலையை நன்கு அறிந்தவளாகத் தோழி காணப்படுகின்றாள். களவு நீட்டிக்கவும், நீட்டித்தவிடத்துத் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யக் கூறுவதிலும் தலைவிக்குத் தோழி உறுதுணையாய் இருந்தாள். களவுக் காலத்தில் தலைவன் கொடுத்த பூவினைத் தலைவி கூந்தலில் முடிந்திருந்ததை தாய் எதிர்பாராது பார்த்தும் ஒன்றும் கூறாது சென்றுவிட்டாள். இதனைத் தலைவி தோழியிடம்கூறி அஞ்சும் வேளையில், தோழி கவலைப்பட தேவையில்லை. ஏறுதழுவலில் வென்ற உன் அன்பினைப் பெற்ற தலைவனையே பெற்றோர் மணமுடிக்க முடிவு செய்துவிட்டனர் என்பதைத் தெரிவித்தாள். இதனை,

**“அஞ்சல், அவன்-கண்ணி நீபுனைந்தா யாயின் நமரும்**
**அவன்கண் அடைசூழ்ந்தார் நின்னை; அதன்கண்**
**வரைப்பில் மணல்தாழப் பெய்து திரைப்பில்**
**வதுவையும் ஈங்கே அயர்ப; அதுவேயாம்**
**அல்கலும் சூழ்ந்த வினை”** **(கலி.115:16-20)**

என்ற அடிகள் உணர்த்தும்.

ஆயர்களின் களவுக்காதல் அற்றைநாள் சமூகத்தினரால் ஏற்றுக் கொள்ளப்பட்டதாயினும் திருமணம் பெற்றோராலும், சுற்றத்தாராலும் முடிவு செய்யப்பட்டது. பெண்ணின் காதலைப் பெற்ற ஆண் மகனின் ஏறுதழுவும் வீரத்தை அடிப்படையாக வைத்து அவனின் குணஞ்செயல்களைப் பற்றி நன்கு கேட்டறிந்த பின்னரே திருமணம் முடித்தனர்.

**களவுக் காலத்திற்குரிய பிரிவுகள்:**

நிறைந்த அன்பினைக் கொண்ட களவுப் புணர்ச்சி நிகழும் காலம் இருவகைப் பிரிவுகளை உள்ளடக்கியது. அவை

- ஒருவழித்தணத்தல்
- வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிதல்

என்பனவாகும். இதனை நாற்கவிராசர் நம்பி,

**“ஒருவழித் தணத்தல்; வரைவிடை வைத்துப்**
**பொருள்வயிற் பிரிதல்; என்று இருவகைத்து ஆகும்**
**நிறைதரு காதல் மறையினில் பிரிவே”**[21]

என்ற சூத்திரத்தால் விளக்குகின்றார்.

**ஆயர்களின் களவுப் பிரிவு:**

ஆயர்களின் களவுக் காலத்தில் பிரிவுகளும் ஏற்பட்டுள்ளன. ஆய்ச்சியருடன் இயற்கைப் புணர்ச்சியால் பலகாலம் இன்பம் கண்டபின் சில நாள்கள் பிரிந்துவிட்டு மீண்டும் தலைவியைக் கண்டு தலைவன் இரங்கி நிற்பதை முல்லைக்கலி தெளிவுபடுத்தும். இதனை,

**"கொலை உண்கண், கூரெயிற்றுக் கொய்தளிர் மேனி**
**இனைவனப்பின் மாயோய்! நின்னிற் சிறந்தார்**
**நிலவுலகத்து இன்மை தெளிநீ வருதி**
**மலையொடு மார்புஅமைந்த செல்வன் அடியைத்**
**தலையினால் தொட்டுஉற்றேன் சூள்" (கலி.108:52-56)**

என்ற அடிகள் விளக்கும். களவுக் காலத்தில் தலைவன் சிலநாட்கள் சந்திக்காது இருந்ததால் தலைவனின் ஒழுக்கத்தை சந்தேகிக்கும் தலைவிக்கு திருமாலின் மீது சத்தியம் செய்து தன் அன்பை வெளிப்படுத்தினான் ஆயர்குலத் தலைவன் என்பதை உணரமுடிகின்றது. இவ்விதம் ஒரே ஊரின் கண்ணும், நாட்டிற்குள்ளும் பிரிகின்ற பிரிவே 'ஒருவழித்தணத்தல்' எனப்படும். இப்பிரிவிற்குப் பருவ வரையறையோ கால எல்லையோ கிடையாது. களவுக் காலத்தில் எந்நேரத்திலும் நடைபெறும். இதனை நம்பியகப்பொருள்,

**"அவற்றுள்**
**ஒருவழித் தணத்தற்குப் பருவம் கூறார்"[22]**

என்ற சூத்திரத்தால் விளக்கும். ஆயர்குலத் தலைமக்களிடையே களவு ஒழுக்கம் நிகழ்ந்து கொண்டிருக்கும் வேளையில் தலைவி ஏறுதழுவலில் வெற்றிபெறுவோர்க்கே என பறையறைந்து அறிவிக்கப்படுவாள். ஏறுதழுவும் நிகழ்வில் தோழி தலைவியிடம் நன்னிமித்தம் கண்டும், இடக்கண் துடிப்பதையும் வைத்து நம் தலைவன் இதேபோல் ஒருநாள் ஏறுதழுவி உன்னை மணப்பான் என்று கூறுவதிலிருந்து ஏறுதழுவுவதற்கும் குறிப்பிட்ட காலம் இடைவெளியாய் அமைந்தது, பிரிவிற்கு வழிவகுக்கும் என்பதை அறிவுறுத்தும். இதனை,

**"கோளாளர் என்னொப்பார் இல்என நம்மானுள்**
**தாளாண்மை கூறும் பொதுவன் நமக்கு ஒருநாள்**
**கேளாளன் ஆகாமை இல்லை; அவற்கண்டு**
**வேளாண்மை செய்தன கண்" (கலி.101:43-46)**

என்ற அடிகள் தெளிவுறுத்தும். திருமணத்திற்குப் பொருள் தேடிப் பிரிவது வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிதல் ஆகும். இப்பிரிவிற்குரிய காலம் இரண்டு மாதங்கள் ஆகும். இதனை,

**"வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவோர்**
**இருதுவின் கண்ணுடைத்து என்மனார் புலவர்"**[23]

என்ற சூத்திரம் உணர்த்தும். ஆயர்களின் திருமணத்திற்கு தலைவன் தனக்கென்று மனை அமைத்துக் கொள்ளும் பொருள்வளம் பெற்றிருத்தல் அடிப்படை வசதியாக எதிர்பார்க்கப்பட்டது. இதனை,

**"சிற்றில் புனைகோ சிறிது? என்றான்; எல்லா! நீ**
**பெற்றேம்யாம் என்று பிறர்செய்த இல் இருப்பாய்**
**கற்ற திலைமன்ற காண் என்றேன்; முற்றிழாய்!"** **(கலி.111:9-11)**

என்ற அடிகள் புலப்படுத்தும். ஆயர்கள் தாம் விரும்பிய பெண்ணை மணப்பதற்கு ஏறுதழுவும் வீரத்துடன் இல்லறம் நடத்துவதற்கு நல்மனையும் பொருள்வளமும் பெற்றிருப்பது தகுதியாகக் கொள்ளப்பட்டது.

**கற்பு ஒழுக்கம்:**

சங்க இலக்கியங்களுக்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியம், கற்பு என்பதற்கு பிறர் அறியாது மறைந்து இன்பம் காணும் தலைமக்கள் திருமணத்தின் வழியாக உலகறிய கணவன் மனைவி எனும் உறவு நிலையால் இல்வாழ்க்கையில் இணைவது என வரையறுக்கின்றது. கற்பு ஒழுக்கமானது அந்தந்த நிலத்து உரிப்பொருளுடன் தொடர்புடையது. களவு வெளிப்பட்டும், களவு வெளிப்படாது உறவினராலும் இணையும் இல்லறத்தினரது இருத்தல், மகிழ்தல், ஊடல், இரங்கல், பிரிதல் முதலியவற்றோடு கூடிவருவதையே கற்பு என்கின்றார் தொல்காப்பியர். இதனை,

**"மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்**
**இவைமுத லாகிய வியனெறி திரியாது**
**மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்**
**பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே"**

**(தொல்.பொருள்.செய்யு.179)**

என்ற நூற்பா விளக்கும். "கற்பு என்பது அன்பாலும், அறிவாலும், அழகாலும், பண்பாலும் ஒத்தநிலை கொண்ட அவனும் அவளும் களவொழுக்கத்தில் காதல்

வளர்த்து தம் விருப்பம் போல் மணம் செய்து கொள்வதும், பின்னர் இருவரும் இணைந்து இல்லறம் நடத்துதலும் ஆம் என்கின்றார் புலவர் செந்துறை முத்து."[24]

**கற்பின் இலக்கணம்:**

பொலிவினைத் தந்திடும் சிறப்பினை உடைய கற்பானது தலைவன் தலைவி ஆகியோரின் கூடலால் தோன்றும் மகிழ்ச்சி, அதைச் சிறப்பிக்கும் ஊடல், ஊடலை உணர்தல், தலைவன் தலைவியைப் பிரிதல் ஆகியவற்றுடன் பொருந்துவது என கற்பிற்கு இலக்கணம் வகுத்துள்ளார் நம்பியகப்பொருளார். இதனை,

**"பொற்பமை சிறப்பின் கற்பெனப்படுவது**
**மகிழ்வும்; ஊடலும்; ஊடல் உணர்த்தலும்;**
**பிரிவும்; பிறவும் மருவியது ஆகும்"[25]**

என்ற சூத்திரம் உணர்த்தும்.

**கற்பின் இருநிலைகள்:**

வரைவு எனப்பெறும் திருமணத்தால் நிலைபெறும் கற்பானது இருநிலைகளைக் கொண்டு அமையும். அவை,

1. களவின் வழி வந்த கற்பு
2. களவின் வழிவராத கற்பு

என்பனவாகும்.

**களவின் வழிவந்த கற்பு:**

தலைமக்கள் இருவரும் மறைமுகமான காதல் வாழ்வைச் சில காலம் மேற்கொண்டு, ஊரார் அலர் தூற்றிய பின், வரைவு நிகழ்வது களவின் வழிவந்த கற்பு எனப்படும். களவின் வழிவரும் கற்பு சிறப்புடையது என்பதை இறையனார் அகப்பொருள்,

**"முற்படப் புணராத சொல்லின் மையிற்**
**கற்பெனப் படுவது களவின் வழித்தே"[26]**

என்ற சூத்திரத்தால் உணர்த்தும். இத்தகைய கற்பு வாழ்க்கையையே பழந்தமிழர் போற்றினர் என்பதை சங்க இலக்கியம் புலப்படுத்தும்.

**களவின் வழி வராத கற்பு:**

தலைவன் தலைவியருக்குத் திருமணத்துக்கு முன்பு யாதொரு தொடர்பும் இன்றி பெற்றோர், சுற்றத்தினரால் அமைத்துத் தரப்பெறும் இல்லற வாழ்வு களவின் வழிவராக் கற்பு எனப்படும்.

**கற்பு மணம்:**

தனிமனித வாழ்வு குடும்பம் என்ற அமைப்பினை ஏற்று மேற்கொள்ளும் நிகழ்வுகள் கற்பெனும் ஒழுக்கமாகக் கருதப்படுகின்றன. திருமணச் சடங்குகளோடு பெற்றோரும், சுற்றத்தாரும் சூழ தலைவன் தலைவியை மணந்து உலகறிய இல்லறத்தில் ஈடுபடுவதே கற்பு எனப்படுகின்றது.

தலைவன் தலைவியை மணப்பதற்கு அன்பு மட்டுமே அன்றி குலத்தாலும், பண்புகளாலும் தகுதியுடையோனாய் இருத்தல் கற்பு மணத்தின் கோட்பாடானது. இதனை,

**"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்**
**கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்**
**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே"**

**(தொல்.பொருள்.கற்பு.1)**

என்ற தொல்காப்பிய நூற்பா விளக்கும். தலைவியின் பெற்றோர் தலைவனை ஏற்றுக் கொள்ளாதவிடத்து தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்ட தலைவியின் திருமணமானது அவளின் உறவினர்கள் இல்லாமலே நடைபெற்றது. இதனை,

**"கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே**
**புணர்ந்துடன் போகிய காலை யான"** **(தொல்.பொருள்.கற்பு.2)**

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்தும். திருமணம் என்பது தலைவன் தலைவியை பெற்றோரின் விருப்பத்துடனோ, விருப்பமின்றியோ மணச்சடங்கொடு பொருந்தா மணம் செய்து கொள்வது என்பதனை,

**"வரைவெனப் படுவது உரவோன் கிழத்தியைக்**
**குரவர் முதலோர் கொடுப்பவும் கொடாமையும்**
**கரணமொடு புணரக் கடி அயர்ந்து கொளல்"[27]**

என்று நம்பியகப்பொருள் விளக்கும். திருமணம் தலைவியின் பெற்றோரின் விருப்பத்தை அடிப்படையாக வைத்து இருநிலைகளைக் கொண்டு நிகழ்ந்தது புலனாகின்றது.

**ஆயர்குலத் திருமணம்:**

முல்லைநிலத்து மக்களாகிய ஆயர்களின் திருமணம் களவின் வழி வந்த கற்பாயினும், களவு வெளிப்படாத கற்பு எனினும் ஏறுதழுவல் எனும் வீரவிளையாட்டை

அடிப்படையாய்க் கொண்டே அமைந்துள்ளது. “களவின் வழிவந்த இல்லறத்தார் வாழ்க்கை இனிமை மிக்கது என்கின்றார் வ.சுப.மாணிக்கம்.”[28] ஆயர்குலத்தில் பெண் மக்கள் பிறந்த வீடுகளில் ஆணேற்றுக்கன்றுகளை வளர்க்கத் தொடங்கினர். பெண்களும் வளர்ந்தனர்; ஏறுகளும் வளர்ந்தன; ஆயர்குலப் பெண்ணை மணக்க விரும்பும் ஆண் அப்பெண்ணுடன் வளர்க்கப்பட்ட ஏற்றினை அடக்கிவெல்ல வேண்டும் என்பது பறை அறைந்து அறிவிக்கப்பட்டது. குறித்தநாளில் ஏறுதழுவலில் வெற்றிபெற்ற ஆண்மகனுக்கு ஆயர்கள் தங்களின் பெண்களை மணமுடித்தனர். “திருமணம் என்பது ஒரு சடங்கு நிகழ்வின் மூலம் ஆணும் பெண்ணும் கணவன் மனைவியாக அங்கீகரிக்கப்படுவது”[29] என்கின்றார் வெ.மன்னார். இக்குலப் பெண்களும் வீரமிக்க ஆண்களையே கணவனாகக் கொள்வதில் மகிழ்ச்சியடைந்தனர். இதனை,

**“கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்**
**புல்லாளே ஆய மகள்”** (கலி.103:63-64)

என்ற அடிகள் விளக்கும். காளையின் கொம்புகளுக்கு அஞ்சும் ஆண்மகனை இப்பிறவி மட்டுமன்றி மறுபிறவியிலும் கணவனாகக் கொள்ள விரும்புவதில்லை என்பதிலிருந்து ஆயர்குலப் பெண்களின் வீரவுணர்வு வெளிப்படுகின்றது. தாம் விரும்பிய ஆடவனாகவே இருப்பினும் வீரமற்றவனாக இருப்பின் தம் காதலையும் நிராகரிக்கும் வல்லமை கொண்டு விளங்கியதையும் அறியமுடிகின்றது. ஆயர்களின் திருமணமானது ‘ஏறுதழுவல்’ எனும் வீரம் சார்ந்த புறக்கூறினைத் தன்னுட்கொண்டதாய் அமைகின்றது.

**ஏறுதழுவல்: இலக்கண வரையறை:**

தொல்காப்பியத்தில் ஏறுதழுவல் பற்றிய செய்தி இல்லை. ஆனால் நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பொருளதிகாரம், களவியல் முதல் நூற்பாவில் எண்வகை மணங்களுக்கு விளக்கம் உரைக்கையில் அசுரம் என்பதில் ஏறுதழுவல் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். போட்டிகள் மூலம் பெண்ணை வென்று மணம் புரிவதையே அசுரம் என்பர். இதனை,

**“அசுரமாவது: கொல்லேறு கோடல் திரிபன்றியெய்தல்**
**வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல்**
**முகையவிழ் கோதையை முள்ளெயிற்று அரிவையைத்**

**தகைநலம் கருதும் தருக்கினிர் உளரெனின்**
**இவையிவை செய்தாற்கு எளியன்மற்று இவளெனத்**
**தொகைநிலை உரைத்த பின்றைப் பகைவலித்து**
**அன்னவை ஆற்றிய அளவையில்**
**தொல்நிலை அசுரம் துணிந்த வாறே"**

**(தொல்.பொருள்.களவு.1, நச்சினார்க்கினியம்)**

என்கின்றார் நச்சினார்க்கினியர். மேலும் களவியல் 53-வது நூற்பாவின் புலனெறி வழக்கு பற்றி குறிப்பிடும் நச்சினார்க்கினியர், "கைக்கிளையுள் அசுரமாகிய ஏறுகோடற் கைக்கிளை காமப்பொருளாகிய புலனெறி வழக்கில் வருங்கால் முல்லைநிலத்து ஆயரும் ஆய்ச்சியருங் கந்தருவமாகிய களவொழுக்கம் ஒழுகி வரையுங்காலத்து அந்நிலத்து இயல்பு பற்றி ஏறுதழுவி வரைந்து கொள்வர்"[30] என்று முல்லைநிலத்துத் திருமணத்தில் நடைபெறும் ஏறுதழுவலைச் சுட்டியுள்ளார்.

அகப்புறப் பெருந்திணைக்கு உரியனவற்றுள் ஒன்றாக ஏறுதழுவலை **'விடைதழால்'** என்று குறிப்பிட்டுள்ளார் நாற்கவிராசர்நம்பி. இதனை,

**"மடல்ஏ றுதலொடு; விடைதழால்; என்றா**
**... ... ... ... ... ... ... ... ... ...**
**அகன்ற அகப்புறம் பெருந்திணைக்கு ஆகும்"[31]**

என்ற சூத்திரம் விளக்கும். கலித்தொகையுள் மடலேறுதல் பற்றி நெய்தற்கலியும் ஏறுதழுவல் பற்றி முல்லைக்கலியும் விளக்கி நிற்கின்றன. நம்பியகப்பொருள் உரையாசிரியர்கள் **விடை-எருது, தழால்-தழுவுதல்** எனப் பொருள் குறித்துள்ளனர். புறப்பொருள் வெண்பாமாலையில் ஐயனாரிதனார் ஏறுதழுவி வெற்றி பெறுதலை **ஏறுகோள்வென்றி** என விளக்கியுள்ளார். ஏறுதழுவல் நிகழும் போது தலைவியின் மனம்கவர்ந்த தலைவனே வெற்றி பெற்றான்.தலைவியை மணந்துகொள்ளும் தகுதியைப் பெற்றதை எண்ணி தோழியும் தலைவியும் மகிழ்ந்தனர். இதனை,

**"குடைவரை ஏந்தியநம் கோவலனே கொண்டான்**
**அடையவிழ் பூங்கோதை அஞ்சல் - விடையரவம்**
**மன்றங் கறங்க மயங்கப் பறைபடுத்து**
**இன்று நமர்விட்ட ஏறு"[32]**

என்ற அடிகள் உணர்த்தும். முல்லைக்கலியின் பதினேழு பாடல்களில் முதல் ஏழு பாடல்களும் ஏறுதழுவல் நிகழ்வுகளை விளக்கி அமைந்துள்ளன.

**ஏறுகோள் விழா: ஏறுதழுவல்:**

கால்நடைகளைப் பாதுகாத்து வாழும் ஆயர்களின் வாழ்வானது காடும் காடுசார்ந்த பகுதியாகவும் காணப்பட்டதால் கொடிய விலங்குகளின் தாக்குதலில் இருந்து தம்மையும் தங்களின் கால்நடைகளையும் பேணிக்காக்க உடல் வலிமையும் வீரமும் அடிப்படைத்தகுதியானது. அத்தகைய வீரர்களுக்குத் தங்களின் பெண்களை மணமுடிப்பதற்கே **ஏறுதழுவல்** எனும் வீரவிளையாட்டு தோற்றுவிக்கப்பட்டது. "இம்மணமுறை நீலகிரியில் வாழும் தோதுவர்களிடம் பண்டைக்கால வழக்கில் இருந்தது என்கின்றார் பரமசிவானந்தம்."[33] வீரநிலைக்காலமாகிய சங்ககாலத்தில் கூரிய கொம்புகளைக் கொண்ட எருதுகளை ஆயுதம் எதுவுமின்றித் தம் உடல் வலிமையால் அடக்கும் ஆயர்கள் ஆண்மை நிறைந்தவர்களாய்க் கருதப்பட்டனர். "நாட்டுப்புற வாழ்க்கையில் ஏறுகோள் நிகழ்ச்சி வீரவிளையாட்டாக இடம்பெற்றதை சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம் எடுத்தியம்பும்"[34] என்கின்றார் சு.சிவகாமசுந்தரி.

**ஏறுதழுவுதலைப் பறையறைந்து அறிவித்தல்:**

ஆயர்குலத்து இளைஞன் விரும்பும் பெண்ணை மணப்பதற்கு ஏறுதழுவலில் வெற்றிபெற வேண்டும் என்பதறிந்து தன் விருப்பத்தை தோழன் வாயிலாகவோ, தலைவியின் தோழி வாயிலாகவோ தலைவியின் பெற்றோருக்குத் தெரிவிப்பான். இளைஞன் ஏறுதழுவித் தம் மங்கையை மணக்க விரும்புவதை உணர்ந்த பெற்றோரும் உறவினரும் ஏறுதழுவும் நாளை பறையறைந்து அறிவிக்கச் செய்தனர். இதனை,

> **"எல்லாரும் கேட்ப அறைந்து அறைந்து எப்பொழுதும்**
> **சொல்லால் தரப்பட் டவள்**
> **சொல்லுக, பாணியேம் என்றார்; அறைக என்றார்; பாரித்தார்"**
>
> **(கலி.102:11-13)**

என்ற அடிகள் விளக்கும். ஏறுதழுவல் நடைபெற அகன்ற பரப்பைக் கொண்ட தொழுவும், தொழுவினைச் சுற்றி உயர்ந்த இடங்களில் பரணும் அமைக்கப்பட்டது. பல நிறங்களைக் கொண்ட காளைகளை தொழுவினுள் வரிசையாக நிறுத்துவர். பரண்களில் ஒருபுறம் பெற்றோரும் சுற்றத்தாரும் அமர்வர். பரண்களில் குறிப்பிட்ட ஒரு வரிசையில் மணமுடிக்க வேண்டிய பெண்களும் தோழியரும் அமர்வர். ஏறுதழுவலை

எதிர்நோக்கியிருக்கும் இளைஞர்களை நோக்கி விரும்பிய மணப்பெண்ணை அடைய வேண்டுமெனில் எந்த ஏற்றை அடக்க வேண்டுமென அறிவிப்பர். வெள்ளைநிறக் காளையை அடக்குபவன் கூரிய பல்வரிசை கொண்ட இம்மங்கையை மணமுடிக்கலாம் எனவும், காளையின் நிறங்களைக் குறிப்பிட்டு மணப்பெண்களின் அழகை வருணித்து இளைஞர்களை உற்சாகப்படுத்துவர். இதனை,

**"அவ்வழி, முள்எயிற்று ஏஎர் இவளைப் பெறும் இது ஓர்**
**வெள்ளேற்று எருத்து அடங்குவான்**
**… … … … … … …**
**வேயுறழ் மென்தோள் துயில்பெறும்"** **(கலி.104:18-24)**

என்ற அடிகள் விளக்கும்.

**ஏறுதழுவும் தருணம்:**

ஏறுகோட்பறையொலி கேட்டதும் ஆயர்குல இளைஞர்கள் சினமிக்க ஏறுகளை அடக்க தொழுவினுள் சீறிப்பாய்வர் தமக்குரிய காளையை அடக்குவதற்கு கடும்போர் நிகழ்த்துவர் ஏறுதழுவும் காட்சியானது காண்போரை கலங்கச்செய்யும். இதனை,

**"கொலைமலி சிலைசெறி செயிர்அயர் சினஞ்சிறந்து**
**உருத்தெழுந்து ஓடின்று மேல்**
**எழுந்தது துகள்**
**ஏற்றனர் மார்பு**
**கவிழ்ந்தன மருப்புக்**
**கலங்கினர் பலர்"** **(கலி.102:19-24)**

என்ற அடிகள் உணர்த்தும். ஏறுதழுவலின் போது ஏறுகளின் கொம்புகளால் குத்துண்ட போதும் உடலில் வடியும் இரத்தத்தாலேயே கைபிசைந்து மீண்டும் களத்துள் புகுந்து ஏறுகளை எதிர்த்து வெற்றி பெற்ற இளைஞனுக்கு ஆயர்கள் பொருள் எதுவும் வேண்டாது விரும்பிய மங்கையை மணம் முடித்தனர். இதனை,

**"விலைவேண்டார் எம்இனத்து ஆயர்மகளிர்**
**கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்**
**முலையிடைப் போலப் புகின்"** **(கலி.103:71-73)**

என்ற அடிகள் விளக்கும். இதன்வழி சங்ககால ஆயர்குலத்தில் பெண்ணை மணம் புரிய ஆண்மகனே பொருள் கொடுக்க வேண்டிய நிலை நிலவியதை அறியமுடிகின்றது. பசுவினத்தாயரும் ஆட்டினத்தாயரும் எருதினத்தாயரும் ஏறுதழுவியே திருமணம்

புரிந்துள்ளனர் (கலி.103:32-49) ஆயர்கள் பராமரித்த கால்நடைகளைப் பொறுத்து சமூகத்தின் வெவ்வேறு படிநிலைகளில் இருந்தாலும் ஏறுதழுவும் வீரத்தின் அடிப்படையில் திருமணத் தொடர்பு கொண்டிருந்ததை அறியமுடிகின்றது.

**ஏறுதழுவலின் நிறைவு:**

ஆயர் மகன்கள் ஏறுதழுவி வென்ற பின்னர் வெற்றியைக் கொண்டாடும் வகையில் ஆயர்கள் குரவைக்கூத்து ஆடி மகிழ்ந்தனர். குரவைக் கூத்தாடும் மகளிர் ஏறுகளைத் தழுவிய இளைஞனின் தோள் வலிமை, குலப்பெருமை, வீரச்செயல் முதலியவற்றையும் அவனுக்கு மனைவியாகப்போகும் மங்கையின் முகப்பொலிவையும் உடல் அழகையும் குணத்தையும் சிறப்பித்துப் பாடினர். இதனை,

> **“பண்அமை இன்சீர்க் குரவையுள் தெண்கண்ணித்**
> **திண்தோள் திறல்ஒளி மாயப்போர் மாமேனி**
> **அம்துவ ராடைப் பொதுவனோடு ஆய்ந்த**
> **முறுவலாள் மென்தோள்பா ராட்டிச் சிறுகுடி**
> **மன்றம் பரந்தது உரை” (கலி.102:35-39)**

என்ற அடிகள் உணர்த்தும். ஏறுதழுவி வென்ற இளைஞர்களும் அவர்களை மணக்கவிருக்கும் மங்கையரும் கைகோர்த்து குரவையாடினர். இதனை,

> **“மாதர் மகளிரும் மைந்தரும் மைந்துற்றுத்**
> **தாதெரு மன்றத்து அயர்வர் தழூஉ” (கலி.103:61-62)**

என்ற அடிகள் விளக்கும். காளையை அடக்கியவனுக்கு காரிகை என குரவையாடும் நிகழ்வை சிலப்பதிகாரம்,

> **“தூநிற வெள்ளை அடர்த்தாற்கு உரியள்இப்**
> **பூவைப் புது மலராள் ஆங்கு**
> **தொழுவிடை ஏறு குறித்து வளர்த்தார்**
> **எழுவர் இளம் கோதையார்”[35]**

என்ற அடிகளால் விளக்கும். முல்லைக்கலிப் பாடல்கள் குரவையாடும் மகளிரின் பாடுபொருளாக (திருமால், கானகம், பாண்டிய மன்னன்) (கலி.103:75-79, 106:47-50) முதலியவற்றைக் கொண்டிருக்கும். தம்மை விரும்பும் ஆயர்குல இளைஞர் ஏறுதழுவி விரைவில் மணமுடிக்க முன்வரவேண்டும் என்ற கருத்தும் (கலி.103:63-73) அமையும்.

**கற்பில் பிரிவின் வகைகள்:**

திருமணம் மூலம் இல்வாழ்க்கை மேற்கொண்ட தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லுதல் கற்பில் பிரியும் பிரிவாகும். இப்பிரிவு ஆறு வகைப்படும். அவை ஓதற்பிரிவு, தூதிற்பிரிவு, காவற்பிரிவு, துணை வயிற்பிரிவு, பொருள்வயிற்பிரிவு, பரத்தையிற்பிரிவு என்பனவாகும். இதனை,

> **"ஓதல் பகையே தூதுஇவை பிரிவே"**
>
> **(தொல்.பொருள்.அகத்.27)**
>
> **"பொருள்வயிற் பிரிதலும் அவர்வயின் உரித்தே"**
>
> **(தொல்.பொருள்.அகத்.35)**
>
> **"மன்னர் பாங்கின் பின்னோர் ஆகுப"**
>
> **(தொல்.பொருள்.அகத்.32)**

என்ற தொல்காப்பிய நூற்பாக்கள் விளக்கும். கற்பில் நிகழும் பிரிவுகளை நம்பியகப்பொருளும்,

> **"இல்வாழ்க்கையே; பரத்தையின் பிரிவே;**
> **ஓதல் பிரிவே; காவல் பிரிவே;**
> **தூதின் பிரிவே; துணைவயின் பிரிவே;**
> **பொருள்வயின் பிரிவு; எனப் பொருந்திய ஏழும்**
> **வளமலி கற்பின் கிளவித் தொகையே"**[36]

என்ற சூத்திரத்தால் விளக்கும்.

**ஓதற்பிரிவு:**

கல்வி கற்பதற்காகப் பிரியும் பிரிவு ஓதற்பிரிவாகும். வேதம் ஓதல் தொடர்பாகவும், வேதமல்லாக் கல்வி கற்றல் தொடர்பாகவும், படைக்கலம் பயிறல் தொடர்பாகவும் கற்பு காலத்தில் தலைவன் தலைவியைப் பிரியும் இப்பிரிவிற்குரிய காலம் மூன்று ஆண்டுகளாகும்.

**தூதிற்பிரிவு:**

தூதுசெல்வதற்காகப் பிரியும் இப்பிரிவிற்குரிய காலம் ஓராண்டாகும். இருபெரும் வேந்தர்கள் தம்முள் பகைகொண்டு போரிடத் துணிவர். அவ்விருவரின் பகையைத் தணிவித்துப் போரைக் கைவிடச் செய்வதற்குச் செல்வதும் தூதாகும். தூதாகச் செல்பவரைத் **'தூதர்'** என்பர். **'கோவூர்கிழார்', 'ஔவையார்'** போன்ற புலவர்கள்

அரசருக்காகத் தூது சென்ற நிகழ்வுகள் வரலாற்றுச் சுவடுகளாகவே இன்றும் திகழ்கின்றன. ஓதற்பிரிவும் தூதிற்பிரிவும் உயர்ந்தோர்க்கு உரியவை என்கின்றார் தொல்காப்பியர். இதனை,

**"ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன" (தொல்.பொருள்.அகத்.28)**

என்ற நூற்பா விளக்கும்.

**பகையிற்பிரிவு:**

அரசன் பகை காரணமாகப் பிரியுமிடத்து அரசன் மட்டும் செல்வதும் உண்டு; படையுடன் செல்வதும் உண்டு; அரசன் தானே தலைமையேற்றுச் செல்வது **'பகை தணிவினைப்பிரிவு'** எனவும், பிறர் தலைமையின்கீழ் செல்வது **'வேந்தர்க்குற்றுழிப்பிரிவு'** எனவும் பெயர்பெறும். இதனை,

**"தானே சேறலும் தன்னொடு சிவணி**
**ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே" (தொல்.பொருள்.அகத்.29)**

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்தும்.

**துணைவயிற்பிரிவு:**

அரசர்க்குத் துணையாகத் தலைவன் பிரியும் வேந்தர்க்குற்றுழிப் பிரியும் பிரிவு துணைவயிற்பிரிவில் அடங்கும். அந்தணர் ஒழிந்த மூவர்க்கும் உரிய இப்பிரிவிற்குரிய காலம் ஓராண்டாகும்.

**காவற்பிரிவு:**

மன்னர் செய்தற்குரிய காவல் தொழிலை (அறக்காவல், நாடுகாவல்) தலைவனும் உறுதுணையாக நின்று தன் நாட்டை பிற நாட்டினரிடம் இருந்து காக்கும் பொருட்டு பிரிவது காவற்பிரிவு ஆகும். உள்நாட்டில் ஏற்படும் கலகங்களை அடக்குதல், விழாவில் ஏற்படும் மக்கள் கூட்டத்தைக் கட்டுப்படுத்துதல், எதிர்பாராத இயற்கைச் சீற்றங்களால் மக்களுக்கு ஏற்படும் துயரைப் போக்குதல், பகைவர்களால் நாட்டிற்கு ஏற்படும் தீமைகளைத் தடுத்தல் முதலானவை இப்பிரிவினுள் அடங்கும். நாட்டினைக் காக்கும் பொருட்டு தலைவன் தலைவியைப் பிரியும் காவற்பிரிவிற்கு காலவரையறை இல்லை.

**பொருள்வயிற்பிரிவு:**

இல்வாழ்க்கைக்குத் தேவையான பொருளைப் பெறுவதற்காகத் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்வது பொருள்வயிற்பிரிவு எனப்படும். இப்பிரிவிற்குரிய காலம் ஓராண்டாகும்.

**பரத்தையிற்பிரிவு:**

இல்லறம் மேற்கொண்டு இனியவாழ்வில் ஈடுபடும் தலைவன், தலைவியருள், தலைவன் பரத்தையற்மேல் காதல் கொண்டு தலைவியைப் பிரிந்து அவ்வூரின் புறத்தே உள்ள சேரிக்குச் செல்லும் பிரிவுக்காலம் பரத்தையிற் பிரிவு எனப்படும். கற்புநெறி, பாராட்டிப் பேசப்பெறும் முல்லைநிலத்து மக்களிடம் களவு ஒழுக்கமும், பரத்தையின்பாற் பிரிந்த தலைவனிடம் ஊடல் கொள்ளும் தலைவியின் வருத்தமும் காணப்பட்டதை முல்லைக்கலிப்பாடல்கள் விளக்குகின்றன.

**ஆயர்களின் வாழ்வியலில் கற்புப்பிரிவு:**

முல்லைநிலத்துத் தலைவன் வினைமேற்கொண்டு தலைவியைப் பிரிந்து செல்வது காவற்பிரிவில் அடங்கும். முல்லைத்திணைப் பாடல்கள் தலைவன் வினைமேற்சென்று மீளும் நிலையைக் குறிப்பிடுகின்றன. முல்லைப்பாட்டு, தலைவன் நாட்டினைக் காக்கும் பொருட்டு, பிறநாட்டினைக் கைப்பற்றும் பொருட்டும் போரின் காரணமாகத் தலைவியைப் பிரியும் பிரிவு நாடுகாவல் என்பதைச்சுட்டும். காவற்பிரிவு இரண்டாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை, 1.அறப்புறங்காவல், 2.நாடுகாவல் என்பதாம். இதனை நம்பியகப்பொருள்,

> **“அறப்புறங்காவல்; நாடுகாவல்; எனச்**
> **சிறப்புறு காவல் திறம்இரு வகைத்தே”**[37]

என்ற சூத்திரத்தால் விளக்கும். அறப்புறங்காவல் என்பது நாட்டை நன்முறையில் பாதுகாக்கும் அரசர்க்கு மட்டுமே உரிய சிறப்புத் தொழிலாகும். இதனை,

> **“அவற்றுள்**
> **அறப்புறங் காவல் அனைவர்க்கும் உரித்தே**
> **மற்றைக் காவல் கொற்றவர்க்கு உரித்தே”**[38]

என்று நாற்கவிராசநம்பி விளக்குகின்றார்.

**நாடுகாவலில் ஈடுபடும் மன்னனின் மனநிலை:**

முல்லைப்பாட்டு குறிப்பிடும் நாடுகாக்கும் மன்னன் மனித உயிரையும், பிற உயிரினங்களையும் மதிக்கும் கருணையுள்ளம் கொண்டவனாய் விளங்குகின்றான். அரசன் போர்ப்பாசறையில் இரவு முழுவதும் உறக்கம் கொள்ளாது ஒரு கையை படுக்கை மேலே வைத்து, மற்றொரு கையால் தலையைத் தாங்கி திருமால் பாம்புப்படுக்கையில் படுத்திருப்பது போன்ற தோரணையுடன் போர்க்களத்தில் சிறந்த வீரர்களையும், புண்பட்ட யானைகளையும், குதிரைகளையும் நினைத்து வருந்தினான். இதனை,

**“பிடிக்கணம் மறந்த வேழம் வேழத்துப்**
**பாம்பு பதைப்பன்ன பரூஉக்கை துமிய**
**தேம்பாய் கண்ணி நல்வலம் திருத்தி**
**சோறுவாய்த்து ஒழிந்தோர் உள்ளியும், தோல் துமிபு**
**வைந்துனைப் பகழி மூழ்கலின் செவிசாய்த்து**
**உண்ணாது உயங்கும் மாசிந் தித்தும்;**
**ஒருகை பள்ளி ஒற்றி ஒரு கை**
**முடியொடு கடகம் சேர்த்தி நெடிது நினைந்து”**

**(முல்லைப்பா.68-76)**

என்ற அடிகள் புலப்படுத்தும். முதல்நாள் இரவு கண் உறங்காமல் விழித்திருந்து மறுநாள் போரில் பகைவரைவென்று தாம் சூடிய வஞ்சி மாலைக்கு வெற்றியைத் தேடித்தந்து, பாசறையில் முழங்கிய முரசின் ஒலியைக் கேட்டபின்பே மன்னன் துயில் கொண்டுள்ளான். மெய்வருத்தம் பாராது கருமமே கண்ணாகும் மன்னனின் நாடுகாவல் சிறப்பை முல்லைப்பாட்டின் வழி அறியமுடிகின்றது. இதனை,

**“பகைவர்ச் சுட்டிய படைகொள் நோன்விரல்**
**நகைதாழ் கண்ணி நல்வலம் திருத்தி**
**அரசு இருந்து பனிக்கும் முரசுமுழங்கு பாசறை”**

**(முல்லைப்பா.77-79)**

என்ற அடிகள் விளக்கும்.

**சங்ககால இல்லற வாழ்வியல்:**

சங்ககாலத்து மக்கள் அன்புநிறைந்த குடும்ப வாழ்க்கையை மேற்கொண்டனர். “குடும்பம் சமுதாயத்தை வளர்க்கின்ற செந்நெறியாகும். எனவே குடும்பத்தைச்

சமூகத்தின் வளர்ப்புப் பண்ணை என்றும் நாற்றங்கால் என்றும் கூறுவராயினர் என்கின்றார் கிஸ்பர்ட்."[39] குடும்பத்தில் இணையும் காதலர்களுக்கு பிறப்பு, ஒழுக்கம், ஆண்மை, ஆண்டு (வயது), அழகு, அன்பு, நிறை, அருள், அறிவு, செல்வம் முதலான பண்புகளில் ஒப்புமை இருத்தல் அவசியம் என்கின்றார் தொல்காப்பியர். இதனை,

**"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு**
**உருவு நிறுத்த காம வாயில்**
**நிறையே அருளே உணர்வொடு திருவென**
**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"**

**(தொல்.பொருள்.மெய்ப்.25)**

என்ற நூற்பா விளக்கும். தலைமக்களுக்கு குடும்ப உறவு சிறக்க வேண்டிய பண்புகளை வகுத்துரைத்ததைப் போலவே இல்லறத்தார்க்கு அறவே வேண்டாத பண்புகளையும் தொகுத்துள்ளார் தொல்காப்பியர். இதனை,

**"நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி**
**வன்சொல் பொச்சாப்பு மடிமையொடு குடிமை**
**இன்புறல் ஏழைமை மறப்போ டொப்புமை**
**என்றிவை இன்மை என்மனார் புலவர்"**

**(தொல்.பொருள்.மெய்ப்.26)**

என்ற நூற்பா உணர்த்தும். அன்புடை கணவன் மனைவி அழுக்காறு, சூழ்ச்சி, தம்மைப் பெரியராக நினைத்தல், புறங்கூறுதல், கடுஞ்சொல், முயற்சியின்மை, குலச்சிறப்பை மதித்து இன்புறல், பேதைமை, மறதி, தான் காதலிக்கப்பட்டவரைப் பிறரோடு ஒப்பிடல், உள்ளிட்ட குணங்கள் குடும்ப உறவை சிதைக்கும் என்பதை உணர்ந்து அன்பினை மட்டுமே உறுதுணையாய்க் கொண்டு வாழ்ந்தனர். சங்ககாலத் தமிழர் வாழ்வதற்குத் தேவையான பண்புகளையும் நெறிமுறைகளையும் நொடிப்பொழுதும் தவறாது கடைபிடித்து செம்மையான வாழ்வை மேற்கொண்டதாலே **'சங்ககாலம் பொற்காலம்'** எனப்பட்டது. பழந்தமிழர் துறவறத்தைக் காட்டிலும் இல்லறத்தையே பெரிதும் பாராட்டினர்.

**அற்றைநாட் காதலில் கணவன் மனைவி உறவுநிலை:**

சங்க காலத்தில் அகவாழ்க்கைக்கு அன்பு அடிப்படையாக அமைந்தது. மனைக்கு உரியவளுக்கு 'மனைவி' என முக்கியத்துவம் தரப்பட்டது. 'மனைக்கு

விளக்கமாகிய வாணுதல்' என மனைவி போற்றப்பட்டாள். மனைவியின் நல்லொழுக்கத்தை வைத்து இவளது கணவன் இவன் என பலரும் கூறவேண்டும் என்று ஆண்மகன் நினைத்துள்ளான். இதனை,

**"நல்லோள் கணவன் இவன் எனப்**
**பல்லோர் கூற"** **(குறுந்.14:5-6)**

என்ற அடிகளால் உணரமுடிகின்றது. சங்க இலக்கியங்கள் அன்பின் ஐந்திணையின் காதலுணர்வை வெளிப்படுத்துபவை. அவற்றுள் குறுந்தொகை தலைவன் தலைவியின் அன்பை மிகைப்படுத்திக் கூறுகின்றது. தொழில் மேற்கொண்டு பொருள் ஈட்டுதல் ஆண் மகனுக்கு உயிர்; மனையறம் புரியும் பெண்களுக்கு ஆடவரே உயிர் என்னும் சமுதாய நோக்கானது பழந்தமிழரின் வாழ்வியலில் காணப்பட்டது. இதனை,

**"வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"** **(குறுந்.135:1-2)**

என்ற அடிகள் விளக்கும். பெண்ணுக்கு ஆடவரே, உயிர் என்பது அக்காலக்கட்டத்தில் நிர்ணயிக்கப்பட்ட சூழல் எனினும் அக்கால மகளிர் தம் கணவனை உண்மையாய் நேசித்தனர். இப்பிறவியில் மட்டுமின்றி எத்தனை பிறவி எடுத்தாலும் தம் கணவனே தனக்குக் கணவனாக வரவேண்டும் என வேண்டிய பெண்கள், கணவனின் நெஞ்சுக்கினிய அன்பினவளாய்த்தாமே இருக்க வேண்டும் எனவும் விரும்பினர். இதனை,

**"இம்மை மாறி மறுமை ஆயினும்**
**நீ ஆகியர் என் கணவனை**
**யான் ஆகியர்நின் நெஞ்சுநேர் பவளே"** **(குறுந்.49:3-5)**

என்ற அடிகள் உணர்த்தும். இல்லறப்பண்பால் சிறந்து விளங்கும் பெண்களால் பெருமை எய்தும் கணவன் உயர்பண்புகளைப் பெற்றிருத்தல் அவசியமாகின்றது. உயர்பண்புடைய ஆண்களை சங்க இலக்கியம் பல நிலைகளில் அடையாளப்படுத்துகின்றது. பதிற்றுப்பத்து கணவனைப் போற்றும் வகையில் பல இடங்களில் அடைமொழியுடன் எடுத்தியம்புகின்றது. இதனை,

**"பாவை யன்ன நல்லோள் கணவன்"** **(பதிற்று.61:4)**
**"சேணாறு நறுநுதல் சேயிழை கணவ"** **(பதிற்.65:10)**

**"ஆன்றோள் கணவ சான்றோர் புரவல"** **(பதிற்று.55:1)**
**"ஒடுங்கீர் ஓதிக் கொடுங்குழை கணவ"** **(பதிற்று.14:14)**
**"திருந்திய இயன்மொழித் திருந்திழை கணவ"** **(பதிற்று.24:11)**
**"வாணுதல் கணவ மள்ளர் ஏறே"** **(பதிற்று.38:10)**

என்ற அடிகள் விளக்கும். ஆண்களின் நெஞ்சம் பரத்தையர்பால் சென்றாலும், அவர்களையே கணவனாகக் கருதும் பெண்கள், தங்களை அவர்களின் மனைவியாகப் பிறக்க வேண்டுமெனக் குறிப்பிடாது என்றுமே கணவனின் அன்பிற்கினியவளாய் இருத்தல் வேண்டும் என்பதிலிருந்து கணவன் மீது மனைவி கொண்டிருந்த அன்பின் தூய்மையையும் செறிவையும் உணரமுடிகின்றது.

முல்லைநிலப் பெண்டிர் திருமணத்திற்குப் பிறகும் தலைவனை காதலன் என்றே அழைத்தனர். தலைவி தன்னைப் பிரிந்து சென்ற தலைவனின் வழியெங்கும் இனிமையானதாய் விளங்கும் காட்டின் வளத்தை உரைக்கும் ஐங்குறுநூற்றின் புறவணிப்பத்துப் பாடல்களிலும் காதலர் என்றே அன்புத் தலைவனைச் சுட்டுகின்றாள். இதனை,

**"நன்றே, காதலர் சென்ற ஆறே!**
**பைம்புதற் பல்பூ மலர**
**இன்புறத் தகுந பண்புமார் உடைத்தே"** **(ஐங்.438:1-3)**

என்ற அடிகள் நிறுவும்.

**ஆயர்களின் இல்லறவாழ்வில் தலைவனின் கற்புநெறி:**

திணைச் சமுதாயத்தில் தலைவன் தலைவியின் கற்பு வாழ்வை 'இல்இன்பம்' எனக் குறிப்பிடாது 'இல்லறம்' என்றே சிறப்பித்தனர். தலைவன் முயன்று ஈட்டிய பொருளை இன்பம் துய்ப்பதோடன்றி அறச்செயல்களிலும் ஈடுபடுத்த வேண்டும் என்பதற்காகவே இல்லறம் என்றுரைத்துள்ளனர். மனித இனத்தின் தொடக்க காலக்கட்டங்களில் ஆணும் பெண்ணும் விரும்பிய வழி பலருடன் இணைந்து வாழ்வது நடைமுறை வழக்கமாக இருந்துள்ளது. அந்நிலை வளர்ந்து வந்த உடைமைச் சமுதாயச்சூழலில் ஆண் மகனின் தான் ஈட்டிய உற்பத்தி தனக்குப் பிறந்த குழந்தைகளுக்கே போய்ச்சேரவேண்டும் எனும் சுயஉடைமை எண்ணம் கற்புநெறியைப்

பெண்ணுக்கு மட்டுமே உரித்தாக்கி ‘ஒருத்திக்கு ஒருவன்’ என்ற கோட்பாட்டினை ஏற்படுத்தியது. இன்றளவும் ‘கற்பு’ பெண்ணின் ஒழுக்கத்துடன் மட்டுமே தொடர்புடையதாக பொருள் கொள்ளப்படுகின்றது. “ஆணின் கற்புப் பிறழ்வைச் சரிசெய்து இல்லறத்தைச் சமன்நிலைக்குக் கொண்டு வருவதற்குப் பெண்ணின் கற்பு அதீதமாக வலியுறுத்தப்பட்டது. அது தலைமுறை தலைமுறையாக வலியுறுத்தப்பட்டு அகவாழ்வில் பெண் கற்பு என்பது தமிழர் தம் வாழ்நெறியானது என்கின்றார் மணிமேகலை.”[40]

கற்பு என்ற சொல்லின் தோற்றப்பொருள் கற்பித்தபடி ஒழுகுதல் என்பதே ஆகும். சங்கப் புலவர்கள் கையாண்ட ‘இகலடு கற்பு’, ‘வெளிறில் கற்பு’ எனும் தொடர்கள் கற்பு என்பது கற்பித்தவை எனும் பொருளில் அமைந்ததை தெரிவிக்கின்றன. கற்புநெறிக்கு அடிப்படையானது கணவன் மனைவி இருவரிடத்தே உள்ள நம்பிக்கையே ஆகும். முல்லைநில மக்களின் இல்லறத்தில் ‘கற்பு’ சிறப்பாகப் பேசப்படுகின்றது. மாற்றாரை வென்று மன்னுயிர்க்கு நல்வாழ்வு தரும் பொருட்டுப் போர் மேற்சென்ற ஆயர்குலத்தலைவன் தான் வரும்வரையும் ஆற்றியிருக்க வேண்டும் என அன்புடன் தலைவிக்கு கூறியதை எண்ணி தலைவி ஆற்றியிருப்பதும், மேற்கொண்ட வினையை முடித்த தலைவன் தலைவிக்குக் கூறிச்சென்ற கார்காலம் வந்ததைக் கண்டு விரைந்து வருதலும் ஆயர்களின் இல்லறநெறியை வெளிப்படுத்தும். “பெண்ணின் நிறையைக் ‘கற்பு’ எனும் சொல்லால் குறித்த தமிழுலகம், ஆணின் கற்பைச் சான்றாண்மை, பேராண்மை என்ற சொற்களால் குறித்தது என்கின்றார் மணிமேகலை.”[41] ஆயர்குலத் தலைவிக்கு ‘ஆற்றியிருத்தல்’ எனும் அகவொழுக்கமும், தலைவனுக்கு வினைமுடித்த பின் குறித்த காலத்தில் வந்து தலைவியைக் கண்டு இன்புறும் ‘சொல்வன்மையும்’ கற்பு நெறியாகி இல்லறத்தைச் சிறப்பித்ததை உணரமுடிகின்றது.

**ஆயர்குலத் தலைவனின் கற்புநெறி:**

‘கற்பு’ அடையாளமாகச் சுட்டப்பெறும் முல்லை நிலத்தில் தலைவிக்கு நிகராகத் தலைவனும் கற்புநெறி புரிந்து இல்லறத்தைச் சிறப்பித்தான்.

தலைவன் போர்ப்பாசறையில் வெற்றிவாகைச் சூடுவதற்கு முன்னர் கார்காலம் தொடங்கியதால், போரினை எண்ணி கண் உறங்காது இருக்கும் வேளையில் தன் தலைவி இந்நேரம் எவ்வளவு துயரம் அடைவாள் என்று வருந்தினான். மழைக்காலத்து மாலைநேரத்து ஒலிகள் தலைவியை வருத்துவதை அவள் எங்ஙனம் தாங்குவாளோ? என்று கவலை கொண்டான். இதனை,

**“அகல்இரு விசும்புஅகம் புதையப் பாஅய்ப்**
**பகல்உடன் கரந்த பல்கதிர் வானம்**
**இருங்களிற்று இனநிரை குளிர்ப்ப வீசிப்**
**பெரும்பெயல் அழிதுளி பொழிதல் ஆனாது;**
**… … … … … … … … …**
**மாரி மாலையும் தமியள் கேட்டே? (அகம்.214:1-15)**

என்ற அடிகள் விளக்கும். வினைமுடித்து மீண்டுவரும் தலைவன், தலைவியிடம் கொண்ட காதலால் தேரினை விரைந்து செலுத்துவான். தலைவன் தேர்ப்பாகனிடம், கார்காலம் வந்ததை உணர்ந்த தலைவி தன் வரவை எதிர்நோக்கி வாசலில் காத்திருப்பாள். எனவே தலைவியைக் கண்டு கூடிமகிழும் இன்பமிகுதியால் தேரினை விரைந்து செலுத்துக என்றான். “இவ்வாறு தேரினை விரைந்து செலுத்தும் தலைவனின் மனநிலையை சங்க இலக்கியப் பாடல்கள் பல இடங்களில் பதிவு செய்துள்ளன.”[42] தலைவன் தேர்ப்பாகனிடம் என் தலைவி என் பிரிவுக்காக வெறுப்புறாமல் அமைதியாக இல்லத்தில் ஆற்றியிருப்பாள்; மாடமாளிகையின் படுக்கையில் தனித்திருக்கும் தலைவி இனிமை காணவும், தமக்குப் பாசறையில் தங்கிய துன்பம் நீங்கவும் தேரினை விரைந்து செலுத்துக என்றான். இதனை,

**“இன்றே புகுதல் வாய்வது நன்றே;**
**மாட மாண்நகர்ப் பாடுஅமை சேக்கைத்**
**துனிதீர் கொள்கைநம் காதலி இனிதுறப்**
**பாசறை வருத்தம் வீட, நீயும்**
**மின்னுநிமிர்ந் தன்ன பொன்இயல் புனைபடைக்**
**கொய்சுவல் புரவி” (அகம்.124:5-10)**

என்ற அடிகள் விளக்கும். தலைவன் போரில் வெற்றி பெறுதலை கடமையாகக் கொண்டு வெற்றி எய்திய அன்றே தலைவியைக் காணவிரைவது, தலைவன், தலைவி

மீது கொண்ட காதலை உணர்த்துகின்றது. தலைவன் கூறிச்சென்ற கார்காலம் வந்ததைக் கருத்தில் கொண்டு நின்ற சொல்லனாய் தன் கற்புநெறியை வழுவாது காத்துள்ளான். கற்பு என்பது உடல் சார்ந்தது மட்டும் அன்று; சொன்னசொல் மாறாமல் நடக்கும் ஒழுக்கம் சார்ந்தது என்கின்றார் ஔவையார். இதனை,

**“கற்புஎனப் படுவது சொல்திறம் பாமை”**[43]

என்ற அடி தெளிவுபடுத்தும்.

சொல்வன்மை கொண்டு தலைவிக்குக் கொடுத்த வாக்குப்படி வெற்றிவாகை சூடி பகையினை வென்று மீண்டு வந்த தலைவனது தேர் வருகையை புறப்பொருள் வெண்பாமாலை **‘தேர்முல்லை’** எனும் துறையாகக் குறிப்பிட்டுள்ளது. இதனை,

**“உருத்தெழு மன்னர் ஒன்னார் தந்நிலை**
**திருத்திய காதலர் தேர்வர வுரைத்தன்று”**[44]

என்ற அடிகள் விளக்கும். தலைவியைக் கண்டு இன்பம் காண விரும்பும் தலைவன், தேர்ப்பாகனை நோக்கித் தேரினை விரைந்து செலுத்தச் சொல்லும் அதே சமயத்தில், சோலையில் பூத்த பூக்களில் ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்து தேன் உண்ணும் வண்டுகள் தன் தேரில் கட்டப்பட்ட மணிகளின் ஒலியால் பிரிந்துவிடுமோ என அஞ்சி மணிகளின் நாக்குகளை இழுத்துக்கட்டி ஓசை எழுப்பாமல் செல்க எனப் பணித்தான். இதனை,

**“பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த**
**தாதுஉண் பறவை பேதுஉறல் அஞ்சி**
**மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்” (அகம்.4:10-13)**

என்ற அடிகள் நிறுவும். வண்டுகளின் பிரிவையே விரும்பாதவன் தலைவியைப் பிரிய நினைக்கமாட்டான் என்பதை அறியமுடிகின்றது. தம்மால் பிறர்க்குத் துன்பம் ஏற்படுவதை தவிர்ப்பதையும், உயிரினங்களின் உணர்வுகளுக்கு மதிப்பு அளிப்பதையும் ஆயர்குலத் தலைவனின் கற்புநெறியாகவே கருதமுடிகின்றது.

முல்லைநிலத்துத் தலைவியைப் போன்றே தலைவனும் கார்கால மழையை வாழ்த்தினான். பாசறையில் தங்கியிருக்கும் காலத்து பெய்த மழையை நோக்கி வருந்தும் தலைவன் வினைமுடிந்து மீண்டு தன் தலைவியுடன் இன்புற்றிருக்கையில் பெய்யும் மழையை! நீ உலகத்துக்கு ஆதாரமாகப் பலரும் தொழும்படி மலைச்சிகரங்களில் நின்று உலாவுவாயாக என வாழ்த்தினான். தன் கடமையை

நிறைவேற்றிய தலைவன் இல்லத்திற்கு வந்தடைந்து தலைவியோடு இன்புற்றிருக்கையில் பெய்யும் மழையை பெரிதும் விரும்பினான். இதனை,

**"உலகிற்கு ஆணியாகப் பலர்தொழப்**
**பலவயின் நிலைஇய குன்றின் கோடுதோறு**
**ஏயினை உரைஇயரோ! பெருங்கலி எழிலி!**
**படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்பு**
**எழீஇ யன்ன உறையினை முழவின்**
**மண்ஆர் கண்ணின் இம்மென இமிரும்**
**வணர்ந்துஒலி கூந்தல் மாஅ யோளோடு**
**புணர்ந்தினிது நுகர்ந்த சாரல் நல்ஊர்**
**விரவுமலர் உதிர வீசி**
**இரவுப்பெயல் பொழிந்த உதவி யோயே!"** **(நற்.139:1-10)**

என்ற அடிகள் உணர்த்தும். தலைவன் தலைவியுடன் இணைந்திருக்கும் காலத்துப் பொழியும் மழையை வாழ்த்தியதை "நச்சினார்க்கினியர் பிரிந்தவிடத்துத் தான்பெற்ற பெருக்கம் எய்திய சிறப்பின்கண் தலைவன் மனமகிழ்ந்து கூறியது"[45] எனவும், "இளம்பூரணர் பிரிந்து வந்து புகுந்த தலைவன் கூற்று"[46] எனவும் பொருள் உரைப்பர். உழவுத்தொழில் மூலம் உலகம் இயங்க மழையை வேண்டுவது தமிழர்களின் இயற்கை வழிபாடு.

**ஆயர்களின் இல்லறவாழ்வில் தலைவியின் கற்புநெறி:**

தலைவனும் தலைவியும் கூடிவாழும் இல்லற வாழ்வில் தலைவனது பிரிவில் தான் தலைவியின் அன்பானது கற்பாக வெளிப்படுகின்றது. தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி இல்லில் இருந்து நல்லறம் புரிதலையே தமிழ்ப் பண்பாடாகக் கருதினாள். பெண்களுக்கு உயிரைவிடச் சிறந்தது நாணம்; நாணத்தைவிடச் சிறந்தது குற்றந்தீர்ந்த காட்சியினையுடைய கற்பு என்பர் முன்னோர். உயிரைவிட மேலானது கற்பு என்பதை தொல்காப்பியர்,

**"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்"**

**(தொல்.பொருள்.களவு.23:1-2)**

என்ற நூற்பாவால் விளக்குகின்றார்.

உயரிய பொருண்மை கொண்ட கற்பு எனும் அக ஒழுக்கத்தினை சங்க இலக்கியம் **‘முல்லை சான்ற கற்பு’** எனக் குறிப்பிட்டு முல்லை நிலத்தின் வாழ்க்கையோடு தொடர்புபடுத்துகின்றது. இனக்குழு சமுதாயம் மறையத் தொடங்கி நிலவுடைமைச் சமுதாயத்தின் ஆரம்ப நிலையில் இருந்த முல்லைநிலத் தலைவிக்கு **‘ஆற்றியிருத்தல்’** எனும் கற்புநெறி உரித்தாக்கப்பட்டது.

‘ஆணின் பரத்தமையில் ஆற்றியிருத்தல்’, ‘கைம்மை நிலையில் ஆற்றியிருத்தல்’, ‘விருந்துக்கு ஆற்றியிருத்தல்’, ‘விருந்தில் இடர்ப்பாடுகளை ஆற்றியிருத்தல்’ ஆகியன முடிவெடுக்கும் உரிமை பெண்ணுக்கு இல்லை என்பதை உணர்த்துகின்றன. பெண்ணின் உயர்பண்பாகப் போற்றப்படும் பொறுத்திருத்தல் என்ற பொருள் தரும் ஆற்றியிருத்தல் பண்பு சங்ககாலப் பெண்கள் தம் தாய்வழிப் பெற்ற பயிற்சியே ஆகும். ஆற்றியிருத்தல் என்ற உரிப்பொருளுக்கு ஆழ்ந்த பொருளுண்டு. காமங்களைவிட்டு ஆற்றியிருத்தல், கணவனைப் பிரிந்திருக்கும் காலத்தில் பெண் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு இருத்தல், பிற ஆடவர் பால் நாட்டம் செலுத்தாது இருத்தல், இல்வரை இகலாது இருத்தல் எனவும் ‘இல்லிருத்தல்’ முல்லைநில மகளிரின் கற்புநெறியை சிறப்பிக்கின்றது. “பெண்டிர் ஆடவரைப் பிரியுங்காலத்தில் எய்தும் பெருந்துயர், அப்பெண்டிர்க்குப் பெருமையளிக்கும் கலையாகத் திகழ்கின்றது என்கின்றார் புலவர் செந்துறைமுத்து.”[47]

குடும்பத்திற்கு விளக்காக விளங்கும் பெண்களுக்கு அச்சம், மடம், நாணம் என்பவை சிறப்பான பண்புகளாகக் குறிப்பிடப்பட்டன. தமிழருக்கெனத் தனித்த பண்பாட்டினை உலகிற்கு எடுத்துரைக்கும் தொல்காப்பியம் இதனை,

> **“அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்**
> **நிச்சமும் பெண்பாற் குரிய என்ப’ (தொல்.பொருள்.களவு.8)**

என்ற நூற்பாவால் விளக்கும்.

**ஆயர்குலத் தலைவியின் ஆற்றியிருத்தல்:**

முல்லை நிலத்தில் இல்லற வாழ்வை மேற்கொண்ட தலைவன் நாடுகாவற் பொருட்டு பிரியும் வேளையில் தலைவியை கார்காலத்தில் திரும்பி வருவேன்!

அதுவரையிலும் இல்லத்தில் ஆற்றியிருக்கப் பணித்தான். தலைவன் வருவதைக் கூறிச்சென்ற கார்காலத்து மாலையில் மலர்கள் மலர்ந்து காட்டினை அழகுபடுத்தின. தலைவனை எதிர்பார்க்கும் தலைவியிடம் தோழி கார்காலம் வந்தும் தலைவன் வரவில்லையே என்றாள். அதற்குத் தலைவி, தோழியிடம் இது கார்காலம் அன்று. கார்காலம் தொடங்கும் நாளிலேயே வந்தருள்வான் என்றுரைத்தாள். இயற்கை பொய்த்தாலும் தன் தலைவன் பொய்க்கமாட்டான் என்று தலைவனின் மீது கொண்ட காதலை தலைவி புலப்படுத்தினாள். இதனை,

**“வண்டுபடத் ததைந்த கொடியினை ரிடையிடுபு**
**பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்**
**கதுப்பிற் தோன்றும் புதுப்பூங் கொன்றைக்**
**கானங் காரெனக் கூறினும்**
**யானோ தேறேனவர் பொய்வழங் கலரே”  (குறுந்.21:1-5)**

என்ற அடிகள் விளக்கும். மேலும் தலைவி இந்நிலமானது தனது இருப்பினின்று மாறினாலும், என் தலைவன் சொல்லிய சொல்லிலிருந்து வழுவிச் செல்பவர் இல்லை என்றாள். மேகம் பொய்க்கலாம்; மலர்கள் பருவம் தவறி மலரலாம்; ஆனால் தன் தலைவன் தவறாமல் கார்காலத்தில் வந்தருள்வான் என்றாள். “முல்லைநிலத் தலைவி பருவம் கண்டு இயற்கைப் பொய்த்தது என்று கூறி ஆற்றியிருத்தலை சங்க இலக்கியங்கள் பல இடங்களில் பதிவு செய்துள்ளன.”[48] தலைவி தன்னைத் தானே தேற்றிக் கொண்டு, தலைவன் கூறிய நெறிப்படி நிற்றலே இல்லுறை மகளிர்க்குப் பெருமையெனப் போற்றப்படுகின்றது.

**தலைவியின் தனிமை:**

உலகத்தினரால் பேரின்பம் எனக் கருதப்பெறும் சிற்றின்ப வாழ்க்கையானது தலைவனைப் பிரிந்த தலைவியை வருத்தும் நோயாக அமைகின்றது. கார்கால மாலைப்பொழுதானது தலைவியின் தனிமைத் துயரை மிகுதிப்படுத்தும். அந்திநேரத்தில் கோவலர்கள் ஊதும் குழலோசை தலைவியின் துன்பத்தை அதிகரிக்கும். இதனை,

**“புன்கண் மாலையொடு பொருந்திக் கொடுங்கோல்**
**கல்லாக் கோவலர் ஊதும்**
**வல்வாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே”  (அகம்.74:15-17)**

என்ற அடிகள் விளக்கும். கார்கால மாலைநேரத்து மங்கல ஒலிகள் என்னை வருத்தும் என்றெண்ணி இந்த நேரத்தில் தலைவன் வரவில்லை எனின் நான் எங்ஙனம் தாங்குவேன்? என்றாள். இதனை,

**“பையுள் நல்யாழ் செவ்வழி பிறப்ப**
**இந்நிலை வாராராயின் தம்நிலை**
**எவன்கொல்? பாண உரைத்திசின் சிறிதுஎன**
**கடவுட் கற்பின் மடவோள் கூற”  (அகம்.314:12-15)**

என்ற அடிகள் விளக்கும். தலைவியின் மாலைநேரத்துயரைப் போக்குவதற்காக தோழியும் இயற்கையைப் பழித்துள்ளாள். முல்லை மலர்கள் மலரும் நேரத்தில் தலைவன் வந்துவிடுவேன் என்றான். ஆனால் மேகம் பருவம் தவறி மழை பொழிந்ததால் முல்லை மொட்டுகள் மலர்ந்தன. ஆகையால் இது கார்காலமன்று எனத் தோழி தலைவியின் நிலையைத் தேற்றினாள். இதனை,

**“மலரின் மௌவல் நலம் வரக் காட்டி**
**கயல்ஏர் உண்கண் கனங்குழை! இவைநின்**
**எயிறுஏர் பொழுதின் ஏய்தருவேம் என**
**… … … … … … … … … …**
**… … … … … … … … … …**
**தளி தரு தண்கார் தலைஇ**
**விளி இசைத்தன்றால் வியல் இடத்தானே”  (நற்.316:2-10)**

என்ற அடிகள் விளக்கும். “தோழி தலைவியைத் தேற்றுவதற்காக கார்ப்பருவத்தை பொய்த்துக் கூறுவதை சங்க இலக்கியப் பாடல்கள் பதிவு செய்துள்ளன.”[49]

இல்லத்திலிருந்து கடமையைச் செய்யும் ஆயர்குலப் பெண் உலக நடப்பு அறியாத குழந்தைத் தன்மை கொண்டவள். சுற்றத்தாரால் அணிவிக்கப்பட்ட மலர்மாலையைத் தாங்கும் வலிமை இல்லாதவள். தானாக மலரினை அணிந்துகொள்ள இயலாத மடந்தைப் பெண்ணாக இருந்தாள். இதனை,

**“பண்ணித் தமர்தந்து ஒருபுறம் தைஇய**
**கண்ணி எடுக்கல்லாக் கோடுஏந்து அகல்அல்குல்**
**புண்ணில்லார் புண்ணாக நோக்கும் முழுமெய்யும்**
**கண்ணளோ ஆய மகள்”  (கலி.109:9-12)**

என்ற அடிகள் விளக்கும். மடமை குணம் நிறைந்த முல்லை நிலத்துப் பெண்கள் தலைவனைப் பிரிந்த காலத்து அணிகலன்களைத் தவிர்த்தனர். உடல் மெலிந்தனர்.

கற்புடைமைக்கு அறிகுறியாக விளங்கும் முல்லை மலரைக்கூட சூடாது புனையா ஓவியமாய்க் காட்சியளித்தனர். புதல்வனைப் பெற்ற பெண்கள் தலைவனோடு உடனிருக்கும் காலத்தில் முல்லை மலர் சூடினர். இதனை,

**"பாணர் முல்லை பாடச் சுடரிழை**
**வாணுத லரிவை முல்லை மலைய**
**இனிதிருத் தனனே நெடுந்தகை**
**துனிதீர் கொள்கைத்தன் புதல்வனொடு பொலிந்தே"**

**(ஐங்.408:1-4)**

என்ற அடிகள் உணர்த்தும். குலமகளிர் தம் கற்புடைமைக்கு அறிகுறியாகத் தூய வெண்ணிறமும் சிறந்த மணமும் ஒருங்கமைந்த முல்லை மலரைச் சூடுதல் மரபாகும். இதனை புறப்பொருள் வெண்பாமாலை **'கற்பு முல்லை'** எனச் சிறப்பிக்கும். கற்பு முல்லை மூன்று வகைப்படும். முல்லைநில மகளிர் மணந்த கணவனையே சிறப்பாகக் கருதுதல் கற்பு முல்லை எனப்படும். இதனை,

**"பொன்திகழ் சுணங்கிற் பூங்கண் அரிவை**
**நன்றறி கொழுநனை நலமிகுத்தன்று"[50]**

என்ற அடிகள் விளக்கும். இத்துறை தலைவி தலைவனின் சிறப்பைக் கூறுவது ஆகும். தலைவன் பிரிந்த நிலையில் தலைவியின் கற்பே காதலாகும் என நிறைகாவற் சிறப்பைக் கூறுவது,

**"மேவரும் கணவன் தனப்பத் தன்வயின்**
**காவல் கூறினும் அத்துறை யாகும்"[51]**

என்ற துறை ஆகும். உலகத்தினருக்கு விருந்தோம்பும் பெருஞ்செல்வம் கொண்ட தலைவனின் வளத்தைப் பாராட்டுவதும் கற்பு முல்லையில் அடங்கும். இதனை,

**"திருவளர் நல்நகர் அடைத்த கொழுநன்**
**பெருவளம் ஏத்தினும் அத்துறை யாகும்"[52]**

என்ற அடிகள் விளக்கும்.

**தலைவன் மீது தலைவி கொண்ட அன்பு - பிரிவாற்றாமை:**

தலைவனின் வரவை எதிர்பார்க்கும் தலைவிக்கு கார்கால மாலைப்பொழுதானது ஏக்கத்தை உண்டாக்கும். மாலை நேரங்களில் மேய்ச்சலுக்குச் சென்ற பசுக்களின் வரவை எதிர்நோக்கும் இளங்கன்றுகளின் தலைதூக்கிப் பார்க்கும் பார்வை

காண்போரையும் நெகிழவைக்கும். அதைப்போன்றே தானும் தலைவனின் வரவை எண்ணி வருந்துகின்றேன் என்னும் தலைவியின் சொற்கள் அவள் தலைவனின் அன்பினிலிருந்து தாய்ப்பாசத்தை காண்கின்றாள் என்பதை உணர்த்துகின்றது. இதனை,

**"பல்ஆ நெடுநெறிக்கு அகன்று வந்தெனப்**
**புன்தலை மன்றம் நோக்கி மாலை**
**மடக்கண் குழவி அலம்வந் தன்ன**
**நோயேம் ஆகுதல் அறிந்தும்"** **(குறுந்.64:1-4)**

என்ற அடிகள் விளக்கும். தலைவிக்கு வருத்தம் விளைவிக்கும் மாலைப்பொழுது தலைவன் வினைமேற்சென்ற நாட்டில் வருத்தம் தரும் தன்மையது போலும் என்று தலைவியின் பிரிவாற்றாமை விளக்கப்படுகின்றது. இதனை,

**"ஐது வந்து இசைக்கும் அருள் இல் மாலை**
**ஆள்வினைக்கு அகன்றோர் சென்ற நாட்டும்**
**இனையவாகித் தோன்றின்**
**வினை வலித்து அமைதல் ஆற்றலர்மன்னே**
**துனைதரு போழ்தின் நீத்தலோ அரிதே!"** **(நற்.69:9-12)**

என்ற அடிகள் தெளிவுபடுத்தும். தலைவியைப் பிரிந்த தலைவன் பாசறையில் வெற்றி ஒன்றனையேக் குறிக்கோளாய்க் கொண்டிருக்கும் வேளையில் மாலைப்பொழுதானது தலைவியைக் கொல்வதையே தொழிலாகக் கொண்டதால் தலைவியால் பிரிவாற்றல் இயலாது என்றான். இதனை,

**"கார்தொடங் கின்றே காலை; காதலர்**
**வெஞ்சின வேந்தன் வியன்பெரும் பாசறை**
**வென்றி வேட்கையொடு நம்மும் உள்ளார்**
**யாதுசெய் வாம்கொல்? தோழி நோதகக்**
**கொலைகுறித் தன்ன மாலை**
**துனைதரு போழ்தின் நீத்தலோ அரிதே"** **(அகம்.364:9-14)**

என்ற அடிகள் விளக்கும். தலைவன் கூறிச்சென்ற கார்காலம் தொடங்கிய நிலையில் தலைவன் வராமையால் வருந்துகின்ற தலைவிக்கு இயற்கை நிகழ்வுகள் வெறுப்பைத் தூண்டின. குயிலின் கூவலும், குருக்கத்தி, செண்பக மலர்களைக் கூவி விற்கும் பெண்களின் குரலும், நீர்வளத்தைப் பெற்ற ஆறுகளின் ஒலியும் நீண்ட காலத்திற்கு முன்பு ஏற்பட்ட அகன்ற புண்ணின் ஆறாத வாய்த்தசையில் வேல் கொண்டு தாக்குவதைப் போல கொடியதாய் உள்ளது என்றாள் தலைவி. இதனை,

**"அழுந்துபடு விழுப்புண் வழும்புவாய் புலரா**
**எவ்வ நெஞ்சத்து எ.்.கு எறித்தாங்குப்**
**பிரிவில புலம்பி நுவலும் குயிலினும்**
**தேறுநீர் கெழீஇய யாறு நனி கொடிதே!**
**அதனினும் கொடியள் தானே, மதனின்**
**துய்த்தலை இதழ பைங்குருக் கத்தியொடு**
**பித்திகை விரவுமலர் கொள்ளீரோ?" (நற்.97:1-7)**

என்ற அடிகள் உணர்த்தும். துன்பங்கள் பெருகிக் கொண்டே செல்வதை பட்ட காலிலே படும்; வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுதல் என்று கிராமத்துப் பழமொழி குறிப்பிடும்.

**நன்னிமித்தம் காணல்:**

தலைவனின் வரவை எதிர்நோக்கும் தலைவியின் மனம் இயற்கையைப் பழிப்பதைப் போலவே புகழவும் செய்கின்றது. கார்கால மாலையில் ஒலிக்கும் தவளை, தேரைகளின் ஒலியையும், சுவற்றில் உள்ள பல்லியின் ஒலியையும், தாய் வளர்க்கும் கிளிகளின் மொழிகளையும் தலைவனின் வரவை உணர்த்தும் நன்னிமித்தமாய்க் கண்டு முல்லைநிலப் பெண்டிர் ஆற்றியிருந்தனர்.

முல்லைநிலப் பெண்கள் தங்கள் இல்லங்களில் வளர்க்கும் கிளியிடம் தலைவனின் வரவைக் கூறும்படி பழக்குவர். கிளியின் மொழியைப் பலமுறை கூறக்கேட்டு ஆற்றியிருப்பர். இதனை,

**"செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி**
**இன்றுவரல் உரைமோ, சென்றிசினோர் திறத்துஎன,**
**இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லென**
**மழலை இன்சொல் பயிற்றும்**
**நாணுடை அரிவை மாண்நலம் பெறவே" (அகம்.34:14-18)**

என்ற அடிகள் நிறுவும். கார்காலம் தொடங்கியவுடன் முல்லை நிலத்தின் தேரைகளும், தவளைகளும் குரல் எழுப்புவது இயல்பு. அக்குரல் ஒலிகளைக் கேட்கும் தலைவி வினைமேற்சென்ற தலைவன் தேர்மணி ஒலிக்க வினைமுடித்து மீண்டுவருவதற்கான நன்னிமித்தமாய்க் கருதினாள். இதனை,

**"வரிநுணல் கறங்கத், தேரை தெவிட்டக்**
**கார்தொடங் கின்றே காலை; யினிநின்**
**நேரிறைப் பணைத்தோட் கார்விருந் தாக**
**வடிமணி நெடுந்தேர் கடைஇ,**
**வருவ ரின்று நங் காத லோரே"** **(ஐங்.468:1-5)**

என்ற அடிகள் விளக்கும்.

இல்லத்தில் தனித்திருக்கும் பெண்கள் சுவற்றின்கண் திரியும் பல்லியின் ஒலியை அது இருக்கும் திசையை வைத்தும் நிமித்தம் காணும் வழக்கம் பழந்தமிழ் மக்களின் நம்பிக்கைகளில் ஒன்று. தலைவன், தலைவி தன் இல்லத்தில் இருக்கும் பல்லியின் ஒலியை நிமித்தமாய்க் கருதி போற்றியபடி இருப்பாள் என்றான். தலைவியின் மனநிலையைக் கருதி தலைவன் விரைந்தான். இதனை பாலைத்திணைப்பாடல்,

**"எம்மினும், விரைந்துவல் எய்திப் பல்மாண்**
**ஓங்கிய நல்இல் ஒருசிறை நிலைஇ**
**பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்"** **(அகம்.9:17-19)**

என்ற அடிகளால் விளக்கும். முல்லைநிலத் தலைவன் தலைவியிடம் தான் வரும் வரையிலும் ஆற்றியிரு எனக் கூறி வினைமேற்செல்வான். தலைவி எப்பொழுது வருவீர்? எனக் கேட்டதற்குத் தலைவன் தான் மேற்செல்லும் வினைமுடிந்ததும் கார்காலத் தொடக்கத்தில் வருவேன் என்று கூறியதை வினைமுடிந்த நிலையில் பாசறைக்கண் நினைத்துப் பார்ப்பான். மேலும் வினைமுடிந்த நிலையில் தன் வரவை வீட்டில் உள்ள பல்லி தலைவிக்கு அறிவித்திருக்கும் என எண்ணினான். இதனை,

**"முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்!**
**வருவம் என்னும் பருவரல் தீரப்**
**படும்கொல், வாழி, நெடுஞ் சுவர்ப் பல்லி!**
**பரற் தலை போகிய சிரற் தலைக் கள்ளி"** **(நற்.169:1-4)**

என்ற அடிகள் உணர்த்தும்.

முல்லைநிலத் தலைவியின் பிரிவாற்றாமையைக் காணும் முதுமக்கள் தெய்வத்தை வழிபட்டு புறநகரில் சென்று நற்சொல் கேட்டு நிற்பர். அந்த வழியாகச் செல்லும் இடையர்குலப் பெண் தாய்ப்பசுவை எதிர்பார்த்து கதறும் இளங்கன்றுகளை நோக்கி கோவலர் பின்தொடர உங்கள் தாயார் விரைந்து வருகுவர் என்பாள்.

அந்நற்சொல்லைக் கேட்ட முதுமகளிர் தலைவன் விரைந்து வருவதற்கான நன்னிமித்தமாய்க் கொண்டு தலைவியின் துன்பத்தைக் களையத் துணிந்தனர். இதனை,

**“கொடுங்கோற் கோவலர் பின்நின்று உய்த்தர**
**இன்னே வருகுவர் தாயர் என்போள்**
**நன்னர் நன்மொழி கேட்டனம்; அதனால்**
**நல்ல நல்லோர் வாய்ப்புள்; தெவ்வர்**
**முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து**
**வருதல் தலைவர்”** **(முல்லைப்பா.15-20)**

என்ற அடிகள் புலப்படுத்தும். தலைவனின் பிரிவால் தலைவி பெற்ற துயரம் பிறரால் ஆற்றுவிக்க இயலாதது. இருப்பினும் தலைவன் ‘ஆற்றியிரு’ எனக் கற்பித்த சொல்லைக் கடப்பது கற்பிற்கு இழுக்கு எனக் கருதி தன்னைத் தானே தேற்றிக் கொண்டு நெகிழும் அணிகலன்களைத் திருத்தியவாறு மழைநீர் வீட்டுமுற்றத்தில் அருவிபோல் விழுவதைக் கண்டு ஆற்றியிருப்பவளின் காதுகள் இன்புறும்படி தலைவன் வரும் ஆரவார ஓசை எழுந்தது. இதனை,

**“இன்துயில் வதியுநற் காணாள் துயர்உழந்து**
**நெஞ்சுஆற்றுப் படுத்த நிறைதபு புலம்பலொடு**
**நீடுநினைந்து தேற்றியும் ஓடுவளை திருத்தியும்**
**முடங்குஇறைச் சொரிதரும் மாத்திரள் அருவி**
**இன்பல் இமிழ்இசை ஓர்ப்பனள் கிடந்தோள்**
**அஞ்செவி நிறைய ஆலின”** **(முல்லைப்பா.80-88)**

என்ற அடிகள் விளக்கும். கார்காலத் தொடக்கத்தில் திரும்பி வருவேன் எனக் கூறியபடியே தலைவன் திரும்பி வந்ததும் தலைவியின் துயரம் களைந்தது.

**வினைமுடித்து மீண்டு வந்த தலைவனுடன் தலைவி காணும் இல்லறம்:**

குறித்த பருவத்தில் வந்த தலைவனைக் காணும் தோழி, தலைவனிடம் இயற்கைக்குப் பொறுப்புள்ள தேவதைகளையும், ஏவல் கொள்ளும் தெய்வக்கற்புத்தன்மை வாய்ந்த தலைவி குடிக்கு விளக்கமாகிய மகனைப் பெற்றெடுத்துப் புகழ்பெற்ற நற்பண்புகள் நிறைந்தவள். அத்தகைய தலைவிக்கு மட்டுமல்லாது தனக்கும் தலைவனின் வருகை இன்பம் நல்கின்றது என்றாள். இதனை,

**“கடவுள் கற்பொடு குடிக்குவிளக்கு ஆகிய**
**புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்**

**நன்ன ராட்டிக்கு அன்றியும், எனக்கும்**
**இனியஆ கின்றால்; சிறக்கநின் ஆயுள்;**
**அருந்தொழில் முடித்த செம்மல் உள்ளமொடு**
**சுரும்புஇமிர் மலர கானம் பிறப்பட" (அகம்.184:1-6)**

என்ற அடிகள் தெளிவுபடுத்தும். வாய்மை தவறாத தலைவனைப் பல்லாண்டு வாழ்க! எனத் தோழி வாழ்த்தினாள். தலைவனின் பிரிவால் தலைவி துன்புறுதல் இயல்பு. தலைவியின் துயரைத் தன் துயர்போல எண்ணி வருந்தும் தோழியின் அன்புள்ளம் புலப்படுகின்றது.

தலைவனின் வருகையை தேரின் மணியோசை அறிவித்ததும் தலைவி தன் துயரம் களைந்து விருந்து சமைக்க விருப்பம் கொள்வாள். இதனை,

**"நெடுநா ஒண்மணி பாடுசிறந்து இசைப்ப**
**மாலை மான்ற மணம் மலிவியல் நகர்த்**
**தந்தன நெடுந்தகை தேரே; என்றும்**
**அரும் படர் அகல நீக்கி**
**விருந்துஅயர் விருப்பினள் திருந்து இழையோளே" (நற்.361:5-9)**

என்ற அடிகள் விளக்கும். பிரிந்துறையும் கணவர் மீண்டும் வந்துழிக் கற்புடை மகளிர் மகிழ்ச்சி மிகுதியான் மனைக்கண் விருந்து சமைத்தல் மரபு. இதனை,

**"தேரோன் மலைமறையத் தீங்குழல் வெய்தாக**
**வாரான் விடுவானோ வாட்கண்ணாய் - காரார்**
**குருந்தோடு முல்லை குலைத்தனகாண் நாமும்**
**விருந்தோடு நிற்றல் விதி"[53]**

என்ற அடிகள் விளக்கும். தலைவனைப் பிரிந்த தலைவி துயரத்தை ஆற்றியிருக்கும் நேரத்தில் தலைவனின் வருகையை அறிந்ததும் தன் அழுத கண்களைத் துடைத்துக் கொண்டு இன்சுவை விருந்தைச் சமைத்து களைப்படைந்த முகத்தில் புன்முறுவலை வரவழைத்துக் கொண்டு விருந்தளித்தாள் எனத் தலைவனும் அறிந்துள்ளான். கணவன் மனைவி உறவில் ஒருவரையொருவர் புரிந்து வைத்துக் கொள்ளுதல் என்பது இல்லறத்தின் இன்பநிலையை மிகுதிப்படுத்தும். இதனை,

**"... ... ... பூண் தாழ்**
**ஆக வன முலைக் கரைவலம் தெறிப்ப**
**அழுதனள் உறையும் அம் மாஅரிவை**

**விருந்துஅயர் விருப்பொடு வருந்தினள் அசைஇய**

**முறுவல் இன் நகை காண்கம்''** **(நற்.81:6-9)**

என்ற அடிகள் விளக்கும். முல்லைநிலத்தில் தலைவனும் தலைவியும் இணைந்திருக்கும் காலத்தில் தலைவி தலைவனுக்காக விருந்தாக்கும் அழகை குறுந்தொகைப் பாடல் எடுத்துக்காட்டும். தலைவி புளிக்குழம்பிற்காக முற்றப் புளித்தயிரை தன் காந்தள் போன்ற விரல்களால் நன்கு பிசைகின்றாள். பிசைந்த கையினை தான் உடுத்தியிருந்த ஆடையிலேயே துடைத்துக் கொண்டு வேறு ஆடை மாற்றாது சமைத்தாள். விறகு அடுப்பில் சமைத்ததால் ஏற்பட்ட புகை நிறைந்த கண்களுடன் தலைவனுக்கு உணவு பரிமாறுகின்றாள். சமையல் அறை பக்கமே செல்லாத விளையாட்டுப் பெண் தனக்காகச் சமைத்த புளிப்பாகரை 'இனிது' எனப் புகழ்ந்தவாறே தலைவன் உண்ணுவதைக் காணும் தலைவியின் முகம் மகிழ்ச்சியால் திளைத்தது. இந்நிகழ்வு தலைவன் தலைவியின் அன்பினைப் புலப்படுத்துகின்றது. தலைவனுக்கு விருந்தளிப்பதையே நோக்கமாகக் கொள்ளும் தலைவியும், தலைவியின் விருந்தைப் புகழ்ந்து தலைவியை மகிழ்வூட்டுதலையே நோக்கமாகக் கொண்ட தலைவனும் முல்லைநிலத்தவரின் இல்லறத்தைச் சிறப்பிக்கின்றனர். இதனை,

**''முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்**
**குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்**
**தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்**
**'இனிது' எனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே''** **(குறுந்.167:1-6)**

என்ற அடிகள் உணர்த்தும். துன்பத்தில் தோன்றும் இன்பம் இன்பத்தில் தோன்றும் இன்பத்திலும் இனிமைமிக்கது என்று ஆங்கிலப்புலவர் செல்லி 'கவிதைக்காப்பு' என்னும் நூலில் இன்பநுகர்வின் மனப்பான்மையை "The pleasure that is sorrow is sweeter than pleasure of pleasure it self என விளக்கியுள்ளார்."[54] முல்லைநிலத் தலைவி ஆற்றியிருத்தலில் பெறும் துன்பம் தலைவனின் வரவிற்குப்பின் இரட்டிப்பான இன்பத்தை நல்கின்றது. தலைவியைப் பிரிந்து வினைமேற்சென்ற தலைவன் மீளுங்காலத்து தலைவியை எண்ணி நெஞ்சாற்றுப்படுத்துவான். மேலும் தலைவியைக்

கண்டதும் உன் அழகை மீண்டும் கொணர்ந்து இன்புறவே நாம் விரைந்து வந்தோம் என்றான். இதனை,

**“காரெதிர் காலையா மோவின்று நலிய**

**நொந்துநொந் துயவு முள்ளமொடு**

**வந்தென மடந்தைநின் னேர்தர விரைந்தே”** **(ஐங்.491:1-3)**

என்ற அடிகள் உணர்த்தும். தலைவன் தலைவியின் மேல் கொண்ட காதலால் விரைந்து வருதலை ஐங்குறுநூற்றின் வரவுச் சிறப்புரைத்த பத்துப்பாடல்கள் எடுத்தியம்புகின்றன. தலைவியிடம் ‘ஆற்றியிரு’ எனப் பணித்த தலைவன், தலைவியின் மீது கொண்ட காதலையும், நம்பிக்கையையும் வெளிப்படுத்துவதாய் மொழிவது தலைவனின் நாகரிகத்தைப் புலப்படுத்துகின்றது.

**கற்புடைப் பெண்டிரின் பண்புகள்:**

கணவனை கடவுளாய்க் கண்டவர்கள் சங்ககாலப் பெண்டிர். கணவனுடன் இல்லறம் புரியும் பெண்களுக்கு சிறந்த பண்புகளே அணிகலன்களாயின. விருந்தோம்புவதும், சுற்றத்தினரைக் காப்பதும் பெண்களின் கடமையாகும். விருந்தோம்பல், சுற்றம் காத்தல் உள்ளிட்ட உயர்பண்புகளை பெற்றிருப்பது கற்புடைப் பெண்டிருக்கு அவசியமானது. இதனை தொல்காப்பியரும்,

**“விருந்துபுறத் தருதலும் சுற்றம் ஓம்பலும்**

**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்”** **(தொல்.பொருள்.கற்பு.11)**

என்ற நூற்பாவால் விளக்குகின்றார். இல்லறத்தில் இணையும் பெண்களுக்கு கணவரின் சொல்படி நடத்தல், விருந்தோம்பல், இரந்தவர்க்கு ஈதல், சுற்றத்தினரைக் காத்தல் ஆகியன தலையாயப் பண்புகள் ஆகும். இதனை,

**“கழுமிய காதற் கணவனைப் பழிச்சி**

**இழுமென் சீர்த்தி இல்மலி புரைத்தன்று”**[55]

என்று புறப்பொருள் வெண்பாமாலை ‘இல்லாள் முல்லை’ துறையில் விளக்கும். இல்லத்தை ஆள்பவள் இல்லாள் எனப்பட்டாள். நற்குணங்களை ஒருங்கிணைத்து குடும்பத்தை நிர்வகிக்கும் பெண்களால் தமிழ்ப்பண்பாடு உலகளவில் பேசப்பட்டது. தமிழ்நாட்டின் உணவும், விருந்தினரை உபசரிக்கும் பண்பும் பிறநாட்டவரால் போற்றப்பட்ட ஒன்று. சங்க காலத்தின் திணைச் சமுதாயத்தினர் தங்கள் நிலங்களில்

விளைந்த உணவுப் பொருட்களையும், பண்டமாற்றின் மூலம் பெற்ற உணவு வகைகளையும் கொண்டு விருந்தோம்பினர்.

**விருந்தோம்பல் பண்பாடு:**

தமிழர் பண்பாட்டின் அடிப்படைக் கொள்கை ஒழுக்கம். இல்லறத்தாரின் ஒழுக்கநெறியே வாழ்வியலுக்கு அழகையும் மனநிறைவையும் நல்கின்றது. அத்தகைய இல்லறப் பண்பாட்டின் தலையாயக் கடமையாக விளங்குவது விருந்தோம்பல் பண்பாகும். சங்ககாலத்தவரின் விருந்தோம்பும் தன்மையை சங்க இலக்கியம் சிறப்பாக விளக்குகின்றது. முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர்களும் விருந்தோம்பல் பண்பாட்டைக் காத்தனர். திருமணத்திற்குப் பின்னர் குடும்ப உறவில் இணையும் தலைமக்களை தனிக்குடித்தனம் வைத்தனர். தனிக்குடித்தனம் மேற்கொள்ளும் கணவன்-மனைவிக்கு, விருந்தோம்பல், அறவோர்க்கு அளித்தல் முதலான செயல்களை ஏற்று நல்லறம் புரிய முதுமக்களால் ஆலோசனை வழங்கப்பட்டது. இதனை,

> **“மறப்பரும் கேண்மையோடு அறப்பரிசாரமும்**
> **விருந்து புறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கையும்”**[56]

என்று சிலப்பதிகாரம் தெளிவுபடுத்தும். இல்லறத்தில் தான் மேற்கொள்ள வேண்டிய கடமைகளை ஒழுக்கம் தவறாது கடைபிடிக்கும் கற்புடை பெண்ணொருத்தி நடுகல் வழிபாட்டில் போர்மேற்சென்ற தலைவன் வெற்றியுடன் விரைந்து வரவேண்டும் எனவும், தன் இல்லம் நோக்கி விருந்தினர் வந்து கொண்டே இருத்தல் வேண்டும் எனவும் வேண்டுகின்றாள். இதனை,

> **“நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது**
> **விருந்தெதிர் பெறுகதில் யானே என்ஐயும்**
> **ஒ … … … வேந்தனொடு**
> **நாடுதரு விழுப்பகை எய்துக எனவே”** (புறம்.306:4-7)

என்ற அடிகள் விளக்கும். இறைவனிடம் விருந்தினர்களின் வருகையை கேட்கும் பழந்தமிழ்ப் பெண்டிரின் குணம் போற்றத்தக்கது. ஆயர்குல மகளிர் இல்லங்களை நாடிவரும் விருந்தினர்களை எதிர்பார்த்து வரவேற்பதற்காக விருப்பத்துடன் காத்திருந்தனர். இதனை,

**"விருந்து விருப்புறூஉம் பெருந்தோட் குறுமகள்"  (நற்.221:8)**

என்ற அடி உணர்த்தும். விருந்தினரை எதிர்நோக்கும் மகளிர் காகம் கரைந்தால் விருந்தினர் வருவர் என நம்பினர். விருந்தினரின் வருகையை உணர்த்தும் காக்கைக்கு தெய்வத்திற்குப் படைத்த பலிச்சோற்றை வைத்தனர். இதனை,

**"விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே"  (குறுந்.210:6)**

என்ற அடி விளக்கும். "வழிபாடு செய்தபின் காக்கையை முன்னோராகக் கொண்டு அப்படைப்புச் சோற்றை வீட்டுக் கூரைமேற் போடுகின்றனர். அதனால் இது கூரைமேற்சோறு போடுதல் எனவும் வழங்கப்படும். காக்கைகள் கூரைமேற் போட்ட அச்சோற்றைத் தின்னாவிட்டால் ஏதோ குறைபாடு உள்ளதாகக் கருதப்படுகின்றது"[57] என்கின்றார் புலவர் குழந்தை. வளம் நிறைந்த மனைகளில் விருந்தினர் வந்து கொண்டே இருந்ததினால் காக்கைகளுக்கும் தொடர்ந்து பலிச்சோறு படைத்தனர். இதனை,

**"செஞ்சோற்ற பலி மாந்திய**
**கருங்காக்கை கவவு முனையின்"  (பொருநர்.183-184)**

என்ற அடிகள் தெளிவுபடுத்தும். தெய்வத்திற்குப் படைக்கும் சோற்றினை காக்கைக்கு வைத்து வழிபடுவது தமிழரின் வழிபாட்டு மரபு. அம்மரபினை அடியொற்றி, உணவுப் பொருட்கள் மிகுந்த மனைகளில் வாழ்ந்த ஆயர்குல மகளிர் கருணைக்கிழங்கின் பொரியலோடு செந்நெல்லின் வெண்மையான சோற்றுப்பலியை தெய்வத்திற்குப் படைத்தபின் காக்கைகளுக்கு இட்டனர். அப்பலிச்சோற்றை காக்கைகள் உண்ட பின்னரே மகளிர் தம் சுற்றத்தினருடன் உணவருந்தினர். இதனை,

**"கருங்கண் கருனைச் செந்நெல் வெண் சோறு**
**சூழுடைப் பலியொடு கவரிய குறுங்கால்**
**கூழுடை நல்மனைக் குழுவின இருக்கும்"  (நற்.367:3-5)**

என்ற அடிகள் விளக்கும்.

**உணவுப் பொருள்கள் நிறைந்த ஆயர்களின் இல்லங்கள்:**

காடும் காடு சார்ந்த பகுதியுமான முல்லைநிலம் காட்டாற்றின் நீர்வளத்தினாலும், குறுஞ்சுனைகளாலும் சூழப்பெற்று எளியமுறை விவசாயம் நடைபெற

ஏற்ற இடமானது. நிலவளமும் நீர்வளமும் உணவு வளத்தை தீர்மானிக்கும் காரணிகளாகும். இதனை,

**"உணவெனப் படுவது நிலத்தொடு நீரே" (புறம்.18:21)**

என்ற அடி உணர்த்தும். முல்லைநில மக்களின் வாழ்வியலானது கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டதால் ஆயர்கள், பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலானவற்றையும், மோர், நெய்யினை விற்று அதற்குப் பண்டமாற்றாகப் பெற்ற பிற நிலத்தவரின் நெல் வகைகளையும் விருந்தோம்பலில் உணவாக்கினர். ஆயர்கள் முல்லை நிலத்தின் நிறைந்த நீர் வளத்தைக் கொண்டு உழவுத் தொழிலை மேற்கொண்டனர். ஆகையால் உழவினால் தானியங்களைப் பயிர் செய்து நிறைவான உணவு உற்பத்தியை ஏற்படுத்தினர்.

ஆயர்களின் இல்லங்கள் கால்நடை வளர்ப்பினாலும் உழவுத் தொழிலாலும் விருந்தோம்புவதற்கு ஏற்ற உணவுப் பொருள்கள் நிறைந்து காணப்பட்டன. இம்மக்களின் வீடுகளின் முன்னே நெற்கூடுகள் யானைக் கூட்டம் போலவும் வரகினைத் திரிக்கும் திரிக்கைகள் யானையின் கால்களைப் போலவும் நின்றிருந்தன. இதனை,

**"பிடிக்கணத்து அன்ன குதிருடை முன்றில்**
**களிற்றுத் தாள்புரையும் திரிமரப் பந்தர்" (பெரும்பாண்.186-187)**

என்ற அடிகள் விளக்கும். ஆயர்களின் இல்லங்களில் பண்டமாற்றின் மூலம் பெற்ற பல நெல்வகைகள் பரவிக் காணப்பட்டன; அவர்களின் தொழுவங்களில் கிடாய்களோடு செம்மறியாடுகளும், வெள்ளாடுகளும் நிறைந்து காணப்பட்டன. இதனை,

**"பகர்விரவு நெல்லின் பல அரி அன்ன**
**தகர்விரவு துருவை வெள்ளையொடு விரைஇக்**
**கல்லென கடத்திடைக் கடலின் இரைக்கும்"**
**(மலைபடு.413-415)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**வறுமை நிலையிலும் விருந்தோம்பல்:**

விருந்தோம்பலை பெரிதும் விரும்பும் ஆயர்மகளிர் வறுமையான சூழலிலும் விருந்துபுறந்தருதலை மேற்கொண்டனர். விருந்தினர் வந்த நேரத்தில் தன் இல்லத்தில் உணவாக்க எந்தவொரு உணவுப் பொருளும் இல்லாததை உணரும் கற்புடை

பெண்டிர் விதைக்காகச் சேமித்து வைத்திருக்கும் சிறிதளவு தினை நெல்லையும் உரலில் குற்றி தினையரிசியை உணவாக்கி விருந்தினருக்கு அளித்தனர். இதனை,

**"வரகும் தினையும் உள்ளவை எல்லாம்**
**இரவல் மாக்கள் உணக்கொளத் தீர்ந்தெனக்**
**குறித்துமாறு எதிர்ப்பை பெறாஅ மையின்**
**குரல்உணங்கு விதைத்தினை உரல்வாய்ப் பெய்து**
**சிறிது புறப்பட்டன் றோவிலள்" (புறம்.333:9-13)**

என்ற அடிகள் விளக்கும். மேலும் விதைநெல் என்பது ஆயர்களின் ஒரு வருடத்திற்கான உணவைத் தரவல்லது. இருப்பினும் தங்களின் பொருளாதாரத்தை கணக்கில் கொள்ளாது பசியோடு வந்தவரின் ஒருவேளை உணவிற்காகச் சமைப்பது, இவர்களின் விருந்தோம்பும் சிறப்பினை புலப்படுத்துகின்றது. வறுமைநிலை வாட்டினாலும், வீட்டிற்கு எத்தனை பேர் வரினும், உணவு குறைவாக இருப்பினும் மனம் கோணாது நெடிய பந்தலிலே அமரச் செய்து உணவினைப் பரிமாறினர். இதனை,

**"இல்லது படைக்கவும் வல்லன் உள்ளது**
**தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்**
**நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்" (புறம்.331:6-8)**

என்ற அடிகள் விளக்கும். தன்னை நோக்கி வந்த விருந்தினரை நாள்தோறும் பாதுகாப்பவனது இல்வாழ்க்கை, வறுமையால் வருந்திக்கெடுவது இல்லை; முகம் இனியவனாய்த் தக்க விருந்தினரை வரவேற்றுப் பேணுபவனது வீட்டில் திருமகள் மனமகிழ்ந்து தங்கி வாழ்வாள் என விருந்தோம்பலைச் சிறப்பித்துள்ளார் வள்ளுவர். இதனை,

**"வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை**
**பருவந்து பாழ்படுதல் இன்று"[58]**
**"அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து**
**நல்விருந்து ஓம்புவான் இல்"[59]**

என்ற குறட்பாக்கள் விளக்கும். விருந்தினரை வழியனுப்பும் பொழுது காலால் ஏழடி தூரம் பின்சென்று விடைதருவர். சோழன் கரிகாலன் தன்னைநாடிவந்த புலவர்களுக்குப் பொருள் தந்து விருந்தோம்பி ஏழடி பின்சென்று வழியனுப்பினான். இதனை,

**“பால்புரை புரவி நால்குஉடன் பூட்டிக்**
**காலின் ஏழ்அடிப் பின்சென்று கோலின்”       (பொருநர்.165-166)**

என்ற அடிகள் விளக்கும்.

மாலை நேரத்தில் தலைவனின் வரவை எண்ணி வருந்தும் தலைவி, இரவு நேரத்தில் கதவினைச் சாத்துவதற்கு முன்பு இல்லத்திற்கு வெளியே யாரேனும் உள்ளீரா? என வினவிய பின்னரே கதவடைக்கின்றாள். விருந்தினராக தலைவனையோ, வழிப்போக்கரையோ எதிர்பார்த்துள்ளனர் என்பதை உணரமுடிகின்றது. இதனை,

**“பலர்புகு வாயில் அடைக்கக் கடவுநர்**
**வருவீர் உளீரோ எனவும்**
**வாரார் தோழிநங் காதலோரே”      (குறுந்.118:3-5)**

என்ற அடிகள் விளக்கும். விருந்தினர் பலரும் வருகை புரியும் இல்லங்களைக் கொண்டவர்கள் பழந்தமிழர் என்பது புலனாகின்றது. தலைவன் சில சமயங்களில் விருந்தினரோடு தானும் ஒரு விருந்தினன் போலத் தலைவியின் மாளிகையில் புகுந்து தங்குவர் என்கின்றார் தொல்காப்பியர். இதனை,

**“புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்**
**பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்**
**வேளாண் எதிரும் விருப்பின் கண்ணும்”**

**(தொல்.பொருள்.களவு.17:6-9)**

என்ற நூற்பா விளக்கும்.

**விருந்தோம்பலில் இன்முகம்:**

விருந்தோம்பல் பண்பாட்டினை உலகிற்கு எடுத்துக்காட்டியவர்கள் சங்ககாலத் தமிழர்கள். விருந்துக்கு உணவின் இன்சுவையைவிட இன்முக உபசரிப்பே முதன்மையானது என்பதை நன்குணர்ந்திருந்தனர். ஆயர்குலப் பெண்டிர் இரவு நேரத்தில் விருந்தினர் வரினும், அவர்களிடம் முகம் சுளிக்காது இன்முகத்துடன் விருந்தளித்தனர். இதனை,

**“அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்**
**முல்லை சான்ற கற்பின்**
**மெல்இயற் குறுமகள் உறைவின் ஊரே”   (நற்.142:9-11)**

என்ற அடிகள் உணர்த்தும். விருந்தினரை எதிர்கொள்வதில் திருவள்ளுவர், மிக மென்மையான அனிச்சம் மலரானது முகர்ந்து பார்த்தாலே வாடுந்தன்மை கொண்டது. ஆனால் விருந்தினரோ, முகம் வேறுபட்டு பார்த்தாலே மனதளவில் வாடிவிடுவர் என்று இன்முக உபசரிப்பை எடுத்துரைத்துள்ளார். இதனை,

**"மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து"[60]**

என்ற குறட்பா உணர்த்தும். இரவு நேரங்களில் வழிப்போக்கர்களாக வருவோரும் ஆயர்களால் விருந்தினராக ஏற்றுக் கொள்ளப்பட்டனர். இரவு நேரத்தில் விருந்தினராகும் வழிப்போக்கர்களுக்கு, ஆயர்கள் தமக்கென்று சமைத்த பாலையும், பால்சோற்றையும் தந்தருளினர். மேலும் ஆடுகளின் தோலிலாலான படுக்கையை விரித்தும், கொடிய விலங்குகளிடமிருந்து பாதுகாப்பதற்காக தீயினைக் கொளுத்திவைத்தும் உபசரித்தனர். இதனை,

**"பல்யாட்டு இனிநிரை எல்லினிர் புகினே**
**பாலும் மிதவையும் பண்ணாது பெறுகுவிர்**
**துய்ம் மயிர் அடக்கிய சேக்கை அன்ன**
**மெய்உரித்து இயற்றிய மிதிஅதட் பள்ளி**
**தீத் துணையாகச் சேந்தனிர் கழிமின்" (மலைபடு.416-420)**

என்ற அடிகள் விளக்கும். உண்டியும் உறைவிடமும் தந்து வந்தோரை வாழவைக்கும் பழந்தமிழ்ப் பண்பாட்டினை ஆயர்களும் காத்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

**இரப்போருக்கும் விருந்து:**

முல்லைநிலத்துப் பெண்டிர் கார்கால வாடை வருத்தும் வேளையில், இல்லை என்று பசித்துவரும் பிச்சைக்காரர்களையும் மதித்தனர். அவர்களுக்கு செந்நெல்லாலான சோற்றினை வெண்ணையுடன் தந்தனர். குளிருக்கு இதமாக வெந்நீரைத் தந்தும் உபசரித்துள்ளனர். இதனை,

**"ஓரிற் பிச்சை ஆர மாந்தி**
**அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்**
**சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே**
**மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை" (குறுந்.277:3-6)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**ஆயர்களின் விருந்தில் இடம்பெறும் உணவுகள்:**

கால்நடை பராமரிப்புடன் உணவு உற்பத்தி செய்யும் முறையையும் கற்றுக் கொண்ட ஆயர்கள் இன்சுவை மிக்க உணவுகளைப் படைத்து விருந்தாக்கினர். ஆயர்களின் விருந்தாக்கலில் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலிய கால்நடைகளிடமிருந்து பெற்ற பொருட்களும், வரகு, சாமை, முதிரை, நெல்வகைகள் போன்றவைகளும் இடம்பெற்றன. இவர்களின் விருந்தோம்பலில் மூரல், மிதவை, புளிங்கறியிட்ட சோறு முதலியன குறிப்பிடத்தக்க இன்சுவை அடிசில்களாகும்.

**மூரல்:**

அவரைப் பருப்புடன் தினை, வரகு முதலியவற்றின் சோற்றினைச் சேர்த்துச் சமைப்பது 'மூரல்' எனப்பட்டது. நெடுங்கொத்துக்களை உடைய பூளைப்பூ போன்ற வரகரிசிச் சோற்றை, வேங்கைப்பூவைப் போன்ற அவரை விதையின் பருப்புடன் துழாவி இனிய மூரல் படைத்தனர். (பெரும்பாண்.192-196)

தினையரிசியினைச் சோறாக்கி, அவரைப் பருப்புடன் கலந்து 'மூரல்' சமைத்தனர். தினையரிசியினாலான மூரல் நண்டுக்குஞ்சுகளைப் போன்று காணப்பட்டது. இதனை,

> **"இருங்கிளை நெண்டின் சிறுபார்ப்பு அன்ன**
> **பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்"**
>
> **(பெரும்பாண்.167-168)**

என்ற அடிகள் விளக்கும். "மூரல் என்பதற்கு 'கும்மாயம்' (பருப்புச்சோறு) எனப் பொருள்கொள்கின்றார் நச்சினார்க்கினியர்."[61]

**புளிங்கறியிட்டசோறு:**

ஆயர்களின் விருந்தில் புளியஞ்சோறு எனும் உணவு குறிப்பிடப்படுகின்றது. செம்மறியாட்டின் புளித்த தன்மையுடைய தயிரை உலையாக ஏற்றி அதில் ஈசலையும், வரகரிசியையும் இட்டு விருப்பம் தரும் புளியஞ் சோற்றினைச் சமைத்தனர். வெப்பமான அச்சோற்றில் பசுவின் வெண்ணெயை தடவி விருந்தாக்கினர். இதனை,

> **"சிறுதலைத் துருவின் பழுப்புஉறு விளைதயிர்**
> **இதைப்புன வரகின் அவைப்புமாண் அரிசியொடு**

**கார்வாய்த்து ஒழிந்த ஈர்வாய்ப் புற்றத்து**
**ஈயல்பெய்து அட்ட இன்புளி வெஞ்சோறு**
**சேதான் வெண்ணெய் வெம்புறத்து உருக" (அகம்.394:2-6)**

என்ற அடிகள் விளக்கும்.

**மிதவை:**

புளித்த வெண்மையான தயிரில் வரகரிசிச் சோற்றையும் வேளையினது வெண்ணிற பூக்களையும் சேர்த்துச் சமைக்கும் புளித்த கூழ் மிதவை எனப்பட்டது. அவரை கொய்பவர்களுக்கு இவ்வகை உணவு விருந்தாக்கப்பட்டது. இதனை,

**"கவைக்கதிர் வரகின் அவைப்புறு வாக்கல்**
**தாதெரு மறுகில் போதொடு பொதுளிய**
**வேளை வெண்பூ வெண்தயிர்க் கொளீஇ**
**ஆய்மகள் அட்ட அம்புளி மிதவை" (புறம்.215:1-4)**

என்ற அடிகள் உணர்த்தும். பால், மோர், தயிர், வெண்ணெய், நெல் முதலியன ஆயர்களின் விருந்தில் முதன்மை பெறுதலுடன் சுவை சேர்ப்பதாய் உள்ளது. ஆயர்கள் மூரல், மிதவை உள்ளிட்ட உணவுகளைப் பிறருக்கு விருந்தாக்கும் போது பாலையும் சேர்த்தே அளித்தனர். இதனை,

**"பாலு மிதவையும் பண்ணாது பெறுகுவீர்" (மலைபடு.417)**
**"மதர்வை நல்லான் பாலொடு பகுக்கும்" (அகம்.393:17)**
**"வளையான் தீம்பால் மிளைசூழ் கோவலர்**
**வளையோ ருவப்பத் தருவனர் சொரிதலிற்"**
**(மலைபடு.409-410)**

என்ற அடிகள் புலப்படுத்தும். தயிரை உலையாக ஏற்றியும், புளிக்குழம்பாக்கியும் விருந்தாக்கியதுடன் தயிரைக்கடைந்து வெண்ணையை எடுத்த பின் மோராக்கி உண்டனர். இதனை,

**"செம்புற்று ஈயலின் இன்அளைப் புளித்து**
**மென்றினை யாணர்த்து நந்துங் கொல்லோ" (புறம்.119:3-4)**

என்ற அடிகள் உணர்த்தும். வெண்ணையை சுடுசோற்றில் இட்டு சுவை கூட்டி உணவு படைப்பதைப் போல வெண்ணையை உருக்கி அதிலிருந்து கிடைத்த நெய்யைச் சோற்றில் சேர்த்து விருந்தாக்கினர். இதனை,

"நறுநெய்க் கடலை விசைப்பச் சோறுஅட்டுப்" (புறம்.120:14)

"நறுநெய்ய சோறு" (புறம்.396:18)

என்ற அடிகள் விளக்கும்.

**ஆயர்குல ஆடவரின் விருந்தோம்பும் பண்பு:**

விருதோம்பும் உயர்குணத்தை பெண்டிருக்கு உரியதாக்கும் சமுதாயத்தில் ஆயர்குல ஆண்களும் விருந்தோம்பும் பண்பை அறிந்திருந்தனர். இல்லறக் கடமையான விருந்தோம்பலை தலைவி இனிதே நிறைவேற்றுவதற்கு தலைவன் பொருள் ஈட்டுவதை உயிராய்க் கொண்டான். பொருளீட்டும் வகையில் கால்நடை மேய்ச்சலுக்குச் செல்லும் ஆயர்கள் இனிய புளிச்சோற்றை மூங்கில் குழாய்க்குள் அடைத்து எருதுகளின் கழுத்தில் கட்டிவைத்தனர். பசியுடன் காட்டுவழியைக் கடக்கும் புதியவரைக்கண்டால் தனக்கென உள்ள அவ்வுணவையும் தேக்கிலையில் வைத்து விருந்தளித்தனர். இல்லம் தேடிவரும் புதியவர்களுக்கு உணவளிப்பதை விருந்து என்பர். ஆயர்களோ வழிப்போக்கர்களுக்கும் தம் உணவையே விருந்துணவாக்கி பண்பாடு காத்தனர். இதனை,

"மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி
செவிஅடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்" (அகம்.311:10-11)

என்ற அடிகள் நிறுவும்.

இந்திரனின் அமிழ்தமே கிடைத்தாலும் தனக்கு மட்டுமன்று பிறருக்கும் பகிர்ந்தளிக்கும் பழந்தமிழ்ப் பண்பாட்டினை தமிழர்கள் மேற்கொண்டனர். இதனை,

"உண்டால் அம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதுஎனத்
தமியர் உண்டலும் இலரே" (புறம்.182:1-3)

என்ற அடிகள் உணர்த்தும். அவ்வகையில் ஆயர்கள் கட்டுச்சோற்றையும் பகிர்ந்துண்டு பண்பாடு போற்றியதை அறியமுடிகின்றது.

**ஆயர்குல மக்களின் விருந்தோம்பலும் உபசரிப்பும்:**

ஆயர்கள் வளமிகுந்த மனைகளில் இருப்பினும், வறுமையான சூழலிலும் விருந்தோம்புதலை மதித்தனர். இன்முகத்துடனும் இனிய சுவை கொண்ட உணவுகளுடனும் விருந்தோம்பினர். ஆயர்களின் விருந்தோம்பலும் உபசரிப்பும்,

தமக்கென வாழாது பிறர்க்கென வாழும் குடியினர் தோட்டத்தில் விளையும் நெல்லிக்கனியைத் தின்று நீர் குடித்தவர் பெற்ற சுவையைப் போல விருந்தினர் உள்ளத்தில் நிலைத்த தன்மை கொண்டு விளங்கியது. இதனை,

**"தனக்கென வாழாப் பிறர்க்கு உரியாளன்**
**பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்இலைப்**
**புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்**
**நீர்குடி சுவையில் தீவிய மிழற்றி"  (அகம்.54:13-16)**

என்ற அடிகள் விளக்கும். ஆயர்களின் விருந்தோம்பலைப் பெற்றவர்கள் நினைத்து நினைத்துப் பெருமகிழ்வு பெறும் வகையில் ஆயர்கள் விருந்தோம்பியதை உணரமுடிகின்றது.

**ஆயர்குலப் பெண்களின் சுற்றம் காக்கும் பண்பு:**

இல்லுறை கற்புடை பெண்டிர் விருந்தோம்பலுடன் சுற்றத்தினரைக் காக்கும் உயர் பண்பினையும் பெற்றிருந்தனர். இயல்பாகவே பெண்கள் குடும்பத்தின் கட்டமைப்பிற்கு அடித்தளமாவர். தன் குடும்பத்தினரை மட்டுமின்றி தம்மை நாடிவரும் சுற்றத்தினரையும் காப்பது கடமை என எண்ணினர். ஆயர்குலப் பெண்கள் தலைவன் ஈட்டிவரும் பொருளை மட்டுமின்றி தாங்கள் மோர் விற்றுப் பெற்ற நெல் முதலான உணவுப் பொருட்களையும் தம் சுற்றத்தாரின் நலனுக்காகவே செலவிட்டனர். இதனை,

**"நாள்மோர் மாறும் நல்மா மேனிச்**
**சிறுகுழை துயல்வரும் காதில் பணைத்தோள்**
**குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்**
**அளைவிலை உணவின் கிளைஉடன் அருத்தி"**

**(பெரும்பாண்.160-163)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**தொகுப்புரை:**

❖ நாணயத்தின் இரண்டு பக்கங்களைப்போல் அகத்தையும் புறத்தையும் வாழ்வியல் கூறுகளாய் கண்டவர்கள் அற்றைநாள் ஆயர்கள் என்பதை அறியமுடிகின்றது.

❖ அற்றைநாள் ஆயர் என்போர் கால்நடை வளர்ப்பினை அடிப்படையாக வைத்தே வகைப்படுத்தப்படுகின்றனர் என்பதை உணரமுடிகின்றது.

- ❖ ஆயர்கள், மாட்டினத்து, ஆயர், ஆட்டினத்து ஆயர், எருதினத்து ஆயர் என்று மூன்று வகையினராய்ப் பிரிந்துள்ளதை அறியமுடிகின்றது.

- ❖ ஆயரின் ஆற்றியிருத்தல் ஒழுக்கத்திற்குரிய அகவாழ்வியலானது களவு, கற்பு எனும் இரு ஒழுக்கங்களை உள்ளடக்கி இருப்பதைக் காணமுடிகின்றது.

- ❖ திருமணத்திற்கு முன்பான காதல் ஒழுக்கம் களவு எனப்படுகின்றது. இக்களவும் 'மறைந்த ஒழுக்கம்' அருமறை என்றே போற்றப்படுவதை அறியமுடிகின்றது.

- ❖ களவு ஒழுக்கமானது காந்தருவ மணத்துடன் ஒப்புநோக்கத்தக்கது. மேலும் இவ் ஒழுக்கமானது இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியற்கூட்டம் எனும் நான்கு வகைப்படுவதையும் காணமுடிகின்றது.

- ❖ தலைவனும் தலைவியும் உலகறிய திருமணம் செய்து கொண்டு வாழும் திருமண வாழ்க்கைக்கு கற்பு என்று பெயர். மேலும் இக்கற்பு ஒழுக்கமானது களவின் வழி வந்த கற்பு, களவின் வழி வராத கற்பு எனும் இருநிலைகளைக் கொண்டுள்ளதை அறியமுடிகின்றது.

- ❖ ஆயர்களின் திருமணமானது ஏறுதழுவுதல் எனும் வீரவிளையாட்டை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றது. ஆயமகளிரும் காதல் கொண்ட தலைவனாகவே இருப்பினும் காளையை அடக்கும் வீரம் இருந்தால் மட்டுமே திருமணம் செய்து கொள்கின்றனர். இதன்வழி ஆயமகளிரின் மாண்பை அறியமுடிகின்றது.

- ❖ ஆயர்களின் திருமண வாழ்வில் நாட்டைக் காப்பதற்காகத் தலைவன் தலைவியைப் பிரிந்த நிலையில் தலைவி ஆற்றியிருப்பது கற்பின் சிறப்பாகப் போற்றப்படுகின்றது.

- ❖ விருந்தோம்பலின் இலக்கணத்தை நன்கு உணர்ந்தவளாக ஆயர்குலத் தலைவி விளங்குகின்றாள்.

- ❖ நிலமும் நீரும் செறிந்து காணப்பட்ட முல்லை நிலத்தில் விளைந்த உணவுப் பொருட்களும் கால்நடைகளிடமிருந்து பெறப்பட்ட பால், பால் சார்ந்த பொருட்களும் விருந்தாக்கப்பட்டதை அறியமுடிகின்றது.

- ❖ விருந்தினைவிட விருந்தோம்புவரின் இன்முகமே விருந்திற்கு ஏற்றது என்பதை உணர்ந்த தலைவி முகம்மலர்ந்து விருந்து எதிர்கொள்வதைக் காணமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. கோவலர்: (அகம்.54:10, 124:14, 214:12, 354:5), குறுந். 358:6, பதிற்று.21:20, நற்.364:9, 266:1, 69:8, ஐங்.439:2, 476:3, புறம்.224:15, மலைபடு.409, கலி.106:4, முல்லைப்பாட்டு-15, நெடுநல்.3.

   இடையர்: அகம்.94:4, 274:8, 394:13, நற்.142:4, 169:7, நற்.266:3, குறுந்.221:4, திணைமாலை.113, பெரும்பாண்.175.

   ஆயர்மகளிர்: கலி.101:38, 103:64, 103:71, 109:12, 110:9.

   கோதைமகளிர்: நற்.238:2.
2. மு.அருணாச்சலம் பிள்ளை (உ.ஆ.), தொல்காப்பியம், அகத்திணையியல், உரைவளம், ப.240.
3. வீரமாமுனிவர், சதுரகராதி, ப.19. முனைவர் சூ.இன்னாசி (ப.ஆ.)
4. சி.ஈ.இராமச்சந்திரன், சங்ககால வரலாறு, ப.166.
5. கா.வெள்ளைவாரணனார். சங்கத் தமிழ் மக்கள், ப.51.
6. நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி, ப.193.
7. எட்கர் தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் (தொகுதி இரண்டு), ப.456.
8. பக்தவத்சல பாரதி (ப.ஆ.), தமிழகத்தில் நாடோடிகள் (சங்ககாலம் முதல் சமகாலம் வரை), ப.283.
9. வீரமாமுனிவர், சதுரகராதி, ப.19. முனைவர் சூ.இன்னாசி (ப.ஆ.)
10. இலக்கியமும் அறிவியல் வேளாண்மையும், ப.25.
11. சு.கு.பன்னீர்செல்வம், காலக்கண்ணாடியில் இலக்கியத்தின் பார்வை, ப.151.
12. வை.சச்சிதானந்தன், இலக்கியமும் உளப்பகுப்பாய்வும், ப.7.
13. நம்பியகப்பொருள், சூ:26.
14. இறையனார் அகப்பொருளுரை, சூ:1.
15. நம்பியகப்பொருள், சூ.27.
16. மேலது., சூ.32.
17. மேலது., சூ.33.

18. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.49.

19. நம்பியகப்பொருள், சூ.38.

20. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.55-56.

21. நம்பியகப்பொருள், சூ.39.

22. மேலது., 40.

23. மேலது., சூ.41.

24. புலவர் செந்துறைமுத்து, தொல்காப்பியர் காலமும் கலையும், ப.45.

25. நம்பியகப்பொருள், சூ.200.

26. இறையனார் அகப்பொருள், சூ.15.

27. நம்பியகப்பொருள், சூ.171.

28. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.113.

29. வெ.மன்னார், காலந்தோறும் திருமணம், ப.10.

30. நச்சினார்க்கினியம், தொல்.பொருள்.களவு. ப.53.

31. நம்பியகப்பொருள், சூ.244.

32. புறப்பொருள் வெண்பாமாலை, பெருந்திணைப்படலம், நூ.42, ஏறுகொள்வென்றி.

33. மேற்கோள்: கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.23.

34. சு.சிவகாமசுந்தரி, சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், ப.45.

35. சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை, 5:1-3.

36. நம்பியகப்பொருள், சூ.201.

37. மேலது., 72.

38. மேலது., 73, 74.

39. மேற்கோள்: பேராசிரியர் டாக்டர் இராமகுருநாதன், குறிஞ்சி காட்டும் சமுதாயம், ப.119.

40. பேரா.இரா.மணிமேகலை, சங்கத் தமிழ்க்காதல், ப.29.

41. மேலது., ப.336.

42. ஐங்.425, நற்.42, 81, 121, 142, 242, 321, 371, 374, 384, அகம்.34, 44, 54, 64, 94, 134, 154, 164, 224, 244, 254, 284, 334.

43. ஔவையார், கொன்றைவேந்தன், அடி.14.

44. புறப்பொருள் வெண்பாமாலை, தேர்முல்லை.

45. நச்சினார்க்கினியம், தொல்.பொருள்.கற்பு.5.

46. இளம்பூரணம், தொல்.பொருள்.கற்பு.5.

47. புலவர் செந்துறைமுத்து, தொல்காப்பியர் காலமும், கலையும், ப.219.

48. நற்.289, குறுந்.66, 126.

49. நற்.248, நற்.99, குறுந்.66.

50. புறப்பொருள் வெண்பாமாலை, பொதுவியற்படலம், நூ.43. கற்புமுல்லை.

51. மேலது., நூ.44.

52. மேலது., நூ.45.

53. திணைமாலை நூற்றைம்பது, பா.112.

54. Shelly. A. Defence of Poetry, P.45.

55. புறப்பொருள் வெண்பாமாலை, பொதுவியற்படலம், நூ.40. இல்லாள்முல்லை.

56. சிலப்பதிகாரம், மனையறம்படுத்தகாதை, 85-86.

57. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.77.

58. திருக்குறள் 83.

59. மேலது., 84.

60. மேலது., 90.

61. நச்சினார்க்கினியர், பத்துப்பாட்டு உரை, பெரும்பாண்.192-196.

# இயல்-3

## அற்றைநாள் ஆயர்களின் புறவாழ்வியல்

இயற்கையோடு இயைந்து பேரின்பப் பெருவாழ்வு கண்ட பழந்தமிழரின் வாழ்வியல் அகம், புறம் எனும் இருபெரும் கூறுகளைத் தன்னுட் கொண்டதாய்க் காணப்பட்டது. சங்க காலத்தவரின் வாழ்வியல் இன்றளவும் போற்றப்படுதற்குக் காரணம் அவர்களின் ஒழுக்கமுறையான வாழ்க்கையே ஆகும். அகத்தில் காதலையும் புறத்தில் வீரத்தையும் தம் உயிராய்க் கருதிய தமிழ் மக்களுள், முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர்களின் வாழ்வியலில் அகமும் புறமும் இணைந்து செறிந்து காணப்பட்டது. அகத்தில் பெண்ணைக் காத்து இல்லறம் புரிந்த ஆயர்கள் புறத்தில் நாட்டைக் காத்து நல்லறம் புரிந்தனர். தலைவியின் மீது பேரன்பு கொண்ட தலைவன் நாட்டிற்காகத் தலைவியைப் பிரிந்து செல்லும் கடமை உணர்வு மிக்கவனாகக் காணப்பட்டான். ஆயர்களின் புறவாழ்வியலானது இறைவழிபாடு, பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், பொழுதுபோக்கு நிகழ்வுகள், தொழில்கள் உள்ளிட்ட கூறுகளை உள்ளடக்கியதாகக் காணப்பட்டது. இத்தகைய பொருண்மைகளைக் கருத்தில் கொண்டு அற்றைநாள் ஆயர்களின் புறவாழ்வியல் கூறுகளை ஆராய்ந்து விளக்குவதாய் இவ்இயல் அமைகின்றது.

### ஆயர் வாழ்வியலில் போர்

களவையும் கற்பையும் செறிவாய்க் கொண்ட ஆயர்களின் அகவாழ்வியல் சிறந்து விளங்கியதைப் போன்றே அவர்களின் போர்க்கள நிகழ்வுகளோடு கூடிய புறவாழ்வியலும் சிறந்து காணப்படுகின்றது. மாயோன்மேய காடுறையுலகமும் கார்காலமும் முல்லைக்கு முதற்பொருளாகும். பகைவயிற் சேறலாகிய வஞ்சிக்கு நிழலும் நீருமுள்ள காலம் வேண்டப்படும். அடர்ந்த காடாகிய மலைசார்ந்த குறிஞ்சி இடம் பகைமேல் செல்லுதற்குப் பொருந்தாதாகையால் காடும் காடுசார்ந்த இடமும் ஆகிய முல்லையே பொருந்தும். எனவே முல்லைத்திணையானது வஞ்சி என்னும் போர் சார்ந்த செயலுக்கு புறச்சூழலாய் அமைகின்றது. முல்லை நிலத்து மக்களின் இனிமையான வாழ்க்கையில், தலைவன் தலைவியை விட்டுப்பிரியும் நிகழ்வே போர்

மேற்கொண்டு செல்வதால்தான் என்பதைக் காணமுடிகின்றது. தொல்காப்பியமும் முல்லை எனும் அகத்திணைக்கு, மண்ணாசை மிகுந்த அரசனுடன் மற்றோர் அரசன், பிறர் அஞ்சும்படி போர்புரியும் வஞ்சித்திணையை புறத்திணையாகக் குறிப்பிடுகின்றது. இதனை,

**“வஞ்சி தானே முல்லையது புறனே**
**எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்**
**அஞ்சு தகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே” (தொல்.பொருள்.புறத்.6)**

என்ற நூற்பா புலப்படுத்தும். முல்லைத் திணையின் அகவொழுக்கம் ஆண் மகன் போர் மேற்செல்வது, அகத்தில் பெண்ணையும் புறத்தில் ஆணையும் பெருமைப்படுத்தும் அவ்விரு ஒழுக்க நிலையையும் ஒருங்கே இணைத்து ஆயர்களின் வாழ்வியலை விளக்கும் ஒப்பற்ற நூலாக முல்லைப்பாட்டு விளங்குகின்றது.

**போர்ப்பாசறை அமைப்பு:**

போர் மேற்கொள்ளும் அரசனும் படைகளும் தங்குவதற்குப் பாசறை அமைக்கப்பட்டது. காட்டாறுகள் சூழ்ந்த காட்டில் நீண்டதூரம் மணம் வீசும் மலர்களைக் கொண்ட பிடவஞ்செடிகளையும், முட்புதர்களையும் வேடர்களின் குடிசைகளையும் அழித்து கடல் போன்ற அகன்ற பரப்பளவில் போர்ப்பாசறை அமைக்கப்பட்டது. இதனை,

**“கான்யாறு தழீஇய அகல்நெடும் புறவில்**
**சேண்நாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி**
**வேட்டுப்புழை அருப்பம் மாட்டி காட்ட**
**இடுமுட் புரிசை ஏமுற வளைஇப்**
**படுநீர்ப் புணரியின் பரந்த பாடி” (முல்லைப்பா.24-28)**

என்ற அடிகள் புலப்படுத்தும். போர்ப்பாசறையானது ‘பாடி வீடு’ எனவும் அழைக்கப்பட்டது. பாசறையின் வீடுகள் தழையால் வேயப்பட்டு இருந்தன. பாசறையில் யானை, குதிரைகள் தங்குவதற்குத் தனி இடங்கள் ஒதுக்கப்பட்டு இருந்தன. போர்க்களத்தில் புண்பட்ட வீரர்களுக்குப் படுக்கை வசதியும், மருத்துவ வசதியும் பாசறையில் அளிக்கப்பட்டிருந்தன. பாசறை என்பது படைகளின் அரணாகும். பண்டைய காலத்தில் அரசர்கள் அரண்மனைகளுக்கு, நீர் அரண், நில அரண், மலை அரண், காட்டரண் என நான்கு வகை அரண்களை அமைத்துள்ளனர். இதனை,

**“மணிநீரும் மண்ணு மலையும் அணிநிழற்**

**காடும் உடையது அரண்”**[1]

என்ற குறட்பா உணர்த்தும்.

**வீரர்கள் தங்கும் படை வீடுகள்:**

போர் மேற்கொள்ளும் வேளையில் தற்காலிகமாகத் தங்குவதற்காக அமைக்கப்பட்ட போர்ப்பாசறையானது பல்வேறு அமைப்புகளைக் கொண்டு நிறுவப்பட்டது. அரசனுக்கு, படைவீரர்களுக்கு எனத் தனித்தனியான கட்டமைப்பைக் கொண்ட போர்ப்பாசறை அமைப்பை முல்லைப்பாட்டு காட்டுகின்றது.

படைவீரர்கள், அந்தணர்கள் முக்கோல்களை ஊன்றி அதன்மேல் தம் காவி ஆடைகளைத் தொங்கவிடுவது போல வலிமையான வில்லினைச் சேர ஊன்றி அவற்றின் மேல் துணிகளைத் தொங்கவிட்டனர். கூடாரமாகக் கால்களை நட்டு கயிற்றால் இறுக்கிக்கட்டிய இருக்கைகளில் பூ வேலைப்பாடுகளமைந்த எறிகோல்களை நட்டனர்.அவற்றின்மேல் கிடுகுப் பட்டைகளை வரிசைகளாக அமைத்து படைவீரர்கள் தங்கினர். இதனை,

**“கல்தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான்**
**முக்கோல் அசைநிலை கடுப்ப நல்போர்**
**ஓடா வல்வில் தூணி நாற்றி**
**கூடம் குத்திக் கயிறுவாங்கு இருக்கை**
**பூந்தலைக் குந்தம் குத்தி கிடுகுநிரைத்து**
**வாங்குவில் அரணம் அரணம் ஆக”** **(முல்லைப்பா.37-42)**

என்ற அடிகள் விளக்கும். துறவியர்கள் மூன்று கோல்கள் சேர இளைத்ததொரு முக்கோலைக் கையில் கொண்டிருந்தனர். இம்முக்கோல் அந்தணர்க்கு உரியதாய் இருந்தமையை,

**“நூலே கரகம் முக்கோல் மணையே**
**ஆயுங் காலை அந்தணர்க் குரிய”** **(தொல்.பொருள்.மரபு.71)**

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்தும். காவிக்கல்லில் ஆடையினைத் தோய்த்துத் துறவிகள் காவியாடை (துவராடை) உடுத்தும் வழக்கம் அக்காலத்தில் நிலவியதை அறியமுடிகின்றது.

**அரசனுக்கு அமைந்த பாசறை:**

படைவீரர்களின் பாசறை இருக்கைகளுக்கு நடுவே அரசனுக்கு ஒரு தனி இடத்தில் அரண் அமைக்கப்பட்டது. அரசனுக்கான இருக்கையானது நெடிய குத்துக்கோலையுடைய மதில் திரையை வளைத்துக்கட்டி அதன் மையத்தில் அமைக்கப்பட்டது. இதனை,

> **"வேறுபல் பெரும்படை நாப்பண், வேறுஓர்**
> **நெடுங்காழ்க் கண்டம் கோலி அகம்நேர்பு"**
>
> **(முல்லைப்பா.43-44)**

என்ற அடிகள் விளக்கும். மதில் திரையானது (கண்டத்திரை) குத்துக்கோல்களுடன் அமைக்கப்பட்டதாதலின் 'நெடுங்காழ்க் கண்டம்' எனப்பட்டது. இதனை சிலப்பதிகாரமும்,

> **"நெடுங்காழ்க் கண்டம் நிரல்பட நிரைத்த**
> **கொடும்பட நெடுமதிற் கொடித்தேர் வீதியுள்"[2]**

என்றடிகளால் உணர்த்துகின்றது. இதன்வழி அரசனுக்கு அமைக்கப்பட்ட பாசறை இருக்கை ஓங்கி உயர்ந்த கூடாரத்தின் நடுவே இறைவனுக்கு அமைக்கப்பெறும் பீடம் போன்று இருந்தமையை உணரமுடிகின்றது. "நெடுங்காழ்க் கண்டம் என்பதற்கு நெடிய கழிகளுடன் சேர்த்தியற்றிய என்று பொருள் கூறினார் ந.மு.வேங்கடசாமி நாட்டார்."[3]

**போர்க்கள நிகழ்வில் பெண்கள்:**

சங்ககாலத்தில் பெண்களின் வாழ்வியலில் இல்லறமே பெரிதும் போற்றப்பட்டது. போர்க்களத்திலும் பெண்கள் ஈடுபட்டமையை முல்லைப்பாட்டு எடுத்துக்காட்டுகின்றது. அரசனின் பாசறையில் பாவை விளக்கில் நெய்வார்த்து தீபமேற்றி, அத்தீபத்தை கையில் ஏந்தியபடி அழகு நிறைந்த பெண்கள் பணிபுரிந்துள்ளனர். மேலும் அவர்களின் உடையில் வாளினைச் சேர்த்து அணிந்திருந்தனர். இதனை,

> **"குறுந்தொடி முன்கைக் கூந்தல் அம்சிறுபுறத்து**
> **இரவுபகல் செய்யும் திண்பிடி ஒள்வாள்**
> **விரவுவரிக் கச்சின் பூண்ட மங்கையர்**
> **நெய்உமிழ் கரையர் நெடுந்திரிக் கொளீஇ**
> **கைஅமை விளக்கம் நந்துதொறும் மாட்ட"**
>
> **(முல்லைப்பா.45-49)**

என்ற அடிகள் விளக்கும். வாளைச் சேர்த்துக் கட்டிய கச்சினை விளக்கேந்தும் பெண்கள் அணிந்திருந்தமையால் அவர்களின் வாட்போர் புரியும் தன்மை புலப்படுகின்றது. “கச்சு என்பதற்கு இடைக்கட்டு, பிணிக்கை, முலைக்கட்டு எனவும் பொருள் பகர்கின்றது தமிழ்மொழி அகராதி”[4] இதன்வழி சங்ககாலப் பெண்டிர் போர்புரியும் திறன் பெற்றிருந்தமையையும் அறியமுடிகின்றது.

**மெய்க்காப்பாளர் செயல்:**

நாட்டினையும் நாட்டுமக்களையும் காக்கும் மன்னனின் போர்ப்பாசறையில் மெய்க்காப்பாளர்கள் இடம்பெற்றிருந்தனர். மன்னனுக்கு மெய்க்காப்பாளராக இருப்பவர்கள் நம்பிக்கைக்கு உரியவராயும் நல்லொழுக்கம் நிறைந்தவராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். ஆகையால் மன்னரிடம் நீண்ட நாட்களாகப் பணிபுரியும் அனுபவமிக்க வயது முதிர்ந்தவர்களே மன்னனைச் சுற்றி மெய்க்காப்பாளராக நின்றிருந்தனர். இதனை,

**“சிதர்வால் அசைவளிக்கு அசைவந் தாங்கு**
**துகில்முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்குநடைப்**
**பெருமூ தாளர் ஏமம் சூழ”   (முல்லைப்பா.52-54)**

என்ற அடிகள் புலப்படுத்தும். வயதுமுதிர்ந்த மெய்க்காப்பாளர்கள் பெருமூதாளர்கள் என்றழைக்கப்பட்டனர். மேலும் இவர்கள் தலையை வெண்துகிலால் போர்த்திக்கட்டி மெய்ப்பை எனப்படும் சட்டையை அணிந்திருந்தனர். சங்ககால மக்கள் தலையைச் சுற்றி வெண்துகில் போர்த்திய செய்தியை,

**“மீப்பால் வெண்டுகில் போர்க்குநர் பூட்டல்**
**வெண்டுகில் சூழ்ப்பக் குழன் முறுக்குநர்”   (பரி.10-11)**

என்ற அடிகள் உணர்த்தும். இன்றளவும் தலையில் வெண்ணிற ஆடையை இழுத்துக் கட்டும் வழக்கம் ஆண்களிடையே உள்ளது. இதற்கு தலைப்பாகை என்று பெயர்.

**ஊமை மிலேச்சர்கள்:**

போர்ப்பாசறையில் அரசனின் பாதுகாப்பில் மெய்க்காப்பாளர்களுடன் ஊமை மிலேச்சர்களும் இடம்பெற்றுள்ளனர். புலிச்சங்கிலியால் ஒப்பனை செய்யப்பட்ட அரசனின் பாசறையில் அரசன் பள்ளி அறையில் இருக்கும்போது அவனுடன்

வாய்பேச முடியாத ஊமை மிலேச்சர்கள் பாதுகாவலுக்காக நின்றிருந்தனர். அவர்கள் நெருக்கிக்கட்டின ஆடையும் சட்டையும் அணிந்திருந்தனர். இடை ஆடைமேல் குதிரைச் சவுக்கு வளைந்து கிடந்தது. வலிமை மிகுந்த பிறரை அச்சுறுத்தும்படியான தோற்றம் கொண்ட ஊமை மிலேச்சர்கள் பாசறையின் மணிவிளக்கை எரிய வைத்துக் கொண்டிருந்தனர். இதனை,

**“மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து**
**வலிபுணர் யாக்கை, வன்கண் யவனர்**
**புலித்தொடர் விட்ட புனைமாண் நல்இல்**
**திருமணி விளக்கம் காட்டி திண்ஞாண்**
**எழினி வாங்கிய ஈர்அறைப் பள்ளியுள்**
**உடம்பின் உரைக்கும் உரையா நாவின்**
**படம்புகு மிலேச்சர் உழையர் ஆக” (முல்லைப்பா.60-66)**

என்ற அடிகள் உணர்த்தும். அரசனின் போர்ப்பாசறையில் அறையில் நிகழும் செய்திகள் ரகசியமாக இருத்தல் வேண்டி வாய்பேச இயலாதவர்களை காப்பாளர்களாக நியமித்திருந்தனர் என்பதை உணரமுடிகின்றது.

**நாழிகைக்கணக்கர்:**

போர்ப்பாசறையில் அரசனுடன் உடனிருப்பவர்களில் ‘நாழிகைக் கணக்கர்’ மிகவும் குறிப்பிடத்தக்கவராவார். சங்ககாலத்தினர் பொழுதை அறிந்து கொள்ளவும், காலம் அறிந்து செயல்படவும் ‘நாழிகை வட்டிலைப் பயன்படுத்தியுள்ளனர். வட்டிலில் நீரிட்டு ஒரு சிறு துளை வழியாக அந்நீரைச் சிறிது சிறிதாகக் கசியவிட்டு, அந்நீரினை அளந்து பொழுதைக் கணக்கிடும் கருவி ‘நாழிகை வட்டில்’ எனப்பட்டது. ஒருநாளில் அமையும் பொழுதைக் கணக்கிட்டுக் கூறுபவர் ‘நாழிகைக் கணக்கர்’ எனப்பட்டனர். இவர்கள் இருள் நிறைந்த இரவிலும் நேரத்தைச் சரியாகக் கணித்து பொய்த்தலின்றிக் கூறியமையால் ‘நாழிகைக் கணக்கர்’, ‘பொய்யாமாக்கள்’ எனப்பட்டனர். இதனை,

**“பொழுது அளந்து அறியும் பொய்யா மாக்கள்**
**தொழுதுகாண் கையர் தோன்ற வாழ்த்தி” (முல்லைப்பா.55-56)**

என்ற அடிகள் புலப்படுத்தும். போர்க்களத்தில் நாழிகைக் கணக்கர்களின் காலம் அறிந்து போர்த்தொடுத்தமையால் அரசன் போரில் வெற்றி பெற்றமையை,

**“எறிநீர் வையகம் வெரீஇய செல்வோய்; நின்**

**குறுநீர்க் கன்னல் இணைத்து என்று இசைப்ப” (முல்லைப்பா.57-58)**

என்ற அடிகள் விளக்கும். இயற்கையோடு இயைந்து எளிமையான வாழ்வினை மேற்கொண்ட ஆயர்களின் வாழ்வியலில் போர்க்குணமும் போர்த்திறனும் மிகுந்து காணப்பட்டதை உணரமுடிகின்றது.

**பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்:**

பல்வேறு சாதிக்கட்டமைப்புகளைக் கொண்ட தமிழ் பேசும் மக்களிடையே தனித்தன்மை கொண்ட பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் காலங்காலமாகவே நிறைந்து காணப்படுகின்றன. அதன்வழி ஆயர்குல மக்களின் வாழ்வியலிலும் அவர்களுக்கென்ற தனித்தன்மை வாய்ந்த பழக்க வழக்கங்களும், அசைக்க முடியாத நம்பிக்கைகளும் இடம்பெறுகின்றன.

**பழக்கம்:**

ஒவ்வொரு தனிமனிதனிடமும் இயற்கையாக அமையும் நடத்தை பழக்கம் எனப்படும். “பழக்கம் என்பதற்கு அறிமுகம், சாதுத்துவம், பயிற்சி, பரிசனை, வழக்கம் எனப் பொருள் தருகின்றது தமிழ்மொழி அகராதி.”[5] விருந்தோம்பல் தமிழரின் பாரம்பரியமான பழக்கமாகும். “பழக்கம் என்ற சொல்லில் ‘பழகு’ என்பது வேர்ச்சொல். பழக்கம் எனும் சொல், பயிற்சி, வழக்கம், ஒழுக்கம், அப்பியாசம் என்ற பொருள்களில் கையாளப்படுகின்றது என்கின்றார் சீ.வசந்தா.”[6] மனிதகுலத்தின் மேம்பட்ட வளர்ச்சிக்கு பழக்கம் இன்றியமையாதது ஆகும். பழக்கம் என்பது ஒரு கற்கும் செயலாகும். இது தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைக் குறிப்பதாகும். பழக்கம் வளர்ச்சிக்கு இன்றியமையாத கூறாகக் கருதப்படுகின்றது. நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக்கூடியதாக ஆகிவிடும் செயலையே பழக்கம் என்கின்றனர்.

**வழக்கம்**

பழக்கத்தின் தொடர்ந்த நிலையே வழக்கமாகும். வழக்கம் சமூகம் சார்ந்த ஒன்றாகும். ஒரு இனத்தின் ஒரு சிறு பகுதியைச் சார்ந்தோர் அல்லது குறிப்பிட்ட

வகுப்பினரோ, நாட்டினரோ தம் தலைமுறைகளுக்கு வழங்கிச் செல்லும் நடத்தைகள் வழக்கம் எனப்படுகின்றன. "வழக்கம் என்பதற்கு ஈகை, நடைபடி, வழங்குதல் எனப் பொருள் தருகின்றது தமிழ்மொழி அகராதி."[7] இதன்வழி குறிப்பிட்ட சமூகத்தினரிடம் காணலாகும் தனித்தன்மை வாய்ந்த ஒழுங்கான செயல்முறைகளே வழக்கம் எனப் பெயர் பெற்றுள்ளன என்பதை அறியமுடிகின்றது. ஒழுக்கத்தாலும் செயல்களாலும் உருவாகும் வழக்கம் இயற்கையும் செயற்கையும் இணையும் கூட்டுறவால் நிலைபெறுகின்றது. "வழக்கம் என்ற சொல் வழங்கு என்பதிலிருந்து உருவாகியிருக்கின்றது. வழக்கு என்ற சொல்லுக்கு நிலவுதல், இருத்தல், ஆட்சியில் இருத்தல் முதலான பொருள்கள் உண்டு"[8] என்கின்றார் பொற்கோ.

**பழக்க வழக்கம்:**

தனிமனிதனாலும், சமுதாயத்தாலும் உருவாக்கப்பட்ட அமைப்பே பழக்க வழக்கமாகும். பழக்கத்தின் தொடர்நிலை வழக்கமாகும். மக்களின் தேவைகளின் அடிப்படையிலே பழக்கங்கள் தோன்றுகின்றன. அவை சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்படுகின்ற நிலையில் வழக்கங்களாக மேம்பாடு அடைகின்றன. தனிமனிதனிடம் இயல்பாக அமையும் நடத்தையைப் பழக்கம் எனவும், இனக்குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி, உணர்ச்சி ஆகியவற்றுடன் இயைந்து நிற்பது வழக்கம் என்பதை உணரமுடிகின்றது. "மேலும் தனிமனிதன் ஒருவன் பழகிப்போன முறையில் திரும்பத் திரும்பச் செய்துவரும் ஒரு குறிப்பிட்ட செயலை பல மனிதர் ஒன்றாகச் சேர்ந்து செய்கின்ற பொழுது அது வழக்கம் எனப் போற்றப்படுகின்றது. மேற்கூறிய தன்மைகளைக் கருத்தில் கொண்டு சிந்திக்கும் பொழுது பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்த தொடக்கநிலை எனவும், வழக்கம் என்பது சமுதாயம் சார்ந்த தொடர்நிலை எனவும் அறியப்படுகின்றது என்கின்றார் பாஸ்கல் கிஸ்பர்ட்."[9]

**இறைநம்பிக்கை: வழிபாடு:**

தமிழ் மக்களின் வாழ்வியலில் சங்ககாலம் தொடங்கி இன்றளவும் நம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும் நிறைந்தும் தனித்தன்மை பெற்றும் விளங்குகின்றன. பண்டைத் தமிழரின் நம்பிக்கைகளுள் ஒன்று வழிபாடு. இயற்கையின்

சீற்றத்திற்கு அஞ்சிய மக்கள் இயற்கையை வணங்க ஆரம்பித்தனர். நிலம், நீர், காற்று, ஆகாயம், நெருப்பு எனும் ஐம்பூதங்களையும் வழிபட்ட மக்கள் பின்பு உருவ வழிபாட்டையும் மேற்கொண்டனர். "வழிபாடு என்பதற்கு அப்பியாசம், ஆராதனை, தாழ்மை, வணக்கம். வழிபடல் எனப் பொருள் தருகின்றது தமிழ்மொழி அகராதி."[10] அவ்வழியில் வழிபாடு என்ற சொல் வழிப்படுத்துதல், நெறிப்படுத்துதல், ஆற்றுப்படுத்துதல் என்னும் பொருள்களில் இலக்கியங்களால் கையாளப்படுகின்றது. ஞாயிறு, திங்கள், தீச்சுடர் ஆகிய இயற்கையின் கூறுகளை வழிபட்டமையை தொல்காப்பியரும்,

**"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலான மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"**

**(தொல்.பொருள்.புறத்.27)**

என்ற அடிகளால் உணர்த்துகின்றார். இயற்கை வழிபாடு என்பது ஆதிகாலம் தொடங்கி இன்றுவரையிலும் தமிழ் மக்களிடையே நிலவுகின்றது. நம்பிக்கைகள் நிறைந்த தமிழ்ச் சமூகத்தில் இணைந்து வாழ்ந்த ஆயர்களின் வாழ்வியலில் நம்பிக்கைகளும், வழிபாடுகளும் நிறைந்து காணப்பட்டன.

**ஆயர்வாழ்வியலில் வழிபாடு:**

நிலப்பாகுபாடுகள் கொண்ட பழந்தமிழர் தெய்வநம்பிக்கை மிக்கவர்களாய்க் காணப்பட்டனர். "அவ்வந் நிலத்திற்குரிய கருப்பொருள் வகுத்த போது முதற்கண் தெய்வத்தையே சுட்டினர்."[11] மனிதரின் அறிவுக்கு அப்பாற்ப்பட்டவராய் அனைத்தும் கடந்தவராய்த் திகழும் இறைவனை ஒவ்வொரு நிலத்தவரும் அவரவர் விருப்பத்திற்கு ஏற்ப வணங்கி மகிழ்ந்தனர்.

தமிழ் மக்களிடம் இறைவழிபாடும், தெய்வ நம்பிக்கையும் எந்தக் காலக்கட்டத்தில் ஏற்பட்டது என்பதை யாராலும் குறிப்பிட இயலாது. இதனை சாமி.சிதம்பரனார் "தமிழில் எப்பொழுது இலக்கியம் பிறந்ததோ அப்பொழுதே தமிழர்கள் கடவுள் நம்பிக்கையுள்ளவர்கள்; பல தெய்வங்களை வணங்கியவர்கள் என்ற உண்மை காணப்படுகிறது. தமிழர்கள் எப்பொழுது தனித்தனிக் குடும்பங்களாக

வாழத் தொடங்கினார்களோ அப்பொழுதே அவர்களிடம் தெய்வ நம்பிக்கை ஏற்பட்டது. இதன் காலத்தைக் குறிப்பிடமுடியாது"[12] எனக் குறிப்பிட்டுள்ளார். தெய்வம் என்னும் சொல் தொல்காப்பியர் காலம் முதல் பெயர்ச்சொல்லாகவும், உயர்திணைச் சொல்லாகவும் விளங்கி வருகின்றது. இதனை,

**"தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்"**

**(தொல்.சொல்.கிளவி.4:3)**

**"பால்வரை தெய்வம் வினையே பூதம்**
**ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்**
**ஆயி ரைந்தொடு பிறவு மன்ன**
**ஆவயின் வரூஉங் கிளவி யெல்லாம்"**

**(தொல்.சொல்.கிளவி.58:2-5)**

என்று தொல்காப்பியம் சுட்டுகின்றது. மக்களின் வாழ்வியலில் இன்பமோ, துன்பமோ எந்தவொரு மனநிலையிலும் தெய்வவழிபாடு நடைபெற்றது.

'மனிதனுக்குப் பிரச்சனை இல்லையேல் தெய்வத்துக்கு அர்ச்சனை இல்லை" என்பதற்கிணங்க சங்ககாலம் தொடங்கி இன்று வரையிலும் மனிதன் தனக்கு ஏற்படும் தீமைகளிலிருந்து விடுபடுவதற்கும், நன்மைகளுக்கு நன்றி செலுத்துவதற்கும் தெய்வவழிபாட்டினை மேற்கொண்டனர். முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர்கள் திருமாலை வழிபட்டனர். திருமால் 'மாயோன்' எனும் பெயரால் பெரும்பான்மையாய்ச் சுட்டப் பெறுகின்றார்.

பிற்காலத்தில் மாயோனை 'விட்ணு' எனவும் அடை சேர்த்து 'மகாவிட்ணு' எனவும் குறிப்பிட்டனர். "மால் என்னும் சொல்லுக்குரிய பொருள்களுள் கருமை என்பதும் ஒன்றாகும்."[13] "மாயோன் என்னும் சொல்லுக்கு கருநிறமுடையவன் என்பது பொருள்."[14] ஆகையால் முல்லைநில மக்களாகிய ஆயர் செழிப்புமிக்க மரஞ்செடி கொடிகள் நிறைந்த காட்டின் செறிவான கருமையை மாயோனின் உருவமாக எண்ணி வழிபட்டிருப்பர் என்றும் உணரமுடிகின்றது.

**திருமால் வழிபாடு:**

நிலப்பகுப்பினைக் குறிப்பிடும் தொல்காப்பியர் 'மாயோன் மேய காடுறை உலகம்' என்று திருமால் காவல்புரியும் காட்டுப் பகுதியே முல்லைநிலம் என்பதைச் சுட்டிக் காட்டியுள்ளார். தங்களின் கால்நடைகளைக் காவல் புரியும் நீலநிறத்தினையுடைய

திருமால் மாவலி என்ற மன்னனின் ஆணவத்தை அடக்க வாமன அவதாரம் கொண்டு உலகளந்தமையால் ‘உலகளந்த மாயோன்’ என்றும் போற்றப்படுகின்றார். ஆயர்குலத்தினர் திருமால் வழிபாட்டினை மேற்கொண்டனர் என்பதை அறியமுடிகின்றது. இதனை,

> **“நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு**
> **வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
> **நீர்செல நிமிர்ந்த மாஅல்போல”** **(முல்லைப்பா.1-3)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**இல்லுறை வழிபாடு:**

தமிழர் தம் பண்பாட்டுக் கூறுகளுள் ஒன்று மாலை நேரங்களில் இல்லங்களில் விளக்கேற்றி வழிபடுதல், திருமால் வழிபாட்டின் பொழுதும், இல்லுறை வழிபாட்டின் பொழுதும் ஆயர்கள் நெல்லையும் மலரையும் தூவி வழிபட்டனர். ஆயர் மகளிர் மாலை நேரங்களில் அணிகலன்களால் தங்களை அழகுபடுத்திக் கொண்டு இரும்பினாலான விளக்கில் நெய்வார்த்து விளக்கேற்றி நெல்லும் மலரும் தூவி இல்லுறை தெய்வத்தை வழிபட்டனர். இதனை,

> **“இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ**
> **நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது**
> **மல்லல் ஆவணம் மாலை அயர”** **(நெடுநல்.42-44)**

என்ற அடிகள் விளக்கும். விளக்கேற்றும் நேரமான மாலைப்பொழுதில் நெல்லும் மலரும் தூவி வழிபடும் ஆயர் மகளிரின் மரபைச் சிலப்பதிகாரம்,

> **“அகநக ரெல்லாம் அரும்பவிழ் முல்லை**
> **நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப் பகல்மாய்ந்த**
> **மாலை மணிவிளக்கங் காட்டி இரவிற்கோர்”**[15]

என்ற அடிகளால் விளக்கும்.

**ஆயர் வழிபாட்டில் நெல்லும் மலரும்:**

ஆயர்களின் இறைவழிபாட்டுப் பொருள்களுள் நெல்லும் மலரும் முக்கியத்துவம் பெறுகின்றது. ஆயர்களின் வாழ்வியலை மிகக் குறைந்த அடிகளில் தெளிவாக உணர்த்தும் முல்லைப்பாட்டு அந்திநேர வழிபாட்டில் நெல்லும், முல்லை மலரும் இடம்பெறுதலைச் சுட்டிக்காட்டுகின்றது. இதனை,

**"பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை**
**அருங்கடி மூதூர் மருங்கிற் போகி**
**யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு**
**நாழி கொண்ட நறுவீ முல்லை**
**அரும்பவிழ் அலரி தூஉய்க்கை தொழுது"** **(முல்லைப்பா.6-10)**

என்ற அடிகள் புலப்படுத்தும்.

மாலை நேரங்களில் விளக்கேற்றி வழிபடும் தமிழர் பண்பாட்டில் "ஆயர்கள் நெல்லும் மலரும் தூவி வழிபட்டதை சங்க இலக்கியங்கள் பல இடங்களில் அடையாளப்படுத்துகின்றது."[16]

**மரவழிபாடு:**

இயற்கையைத் தெய்வமாக எண்ணிய தமிழ் மக்கள் இயற்கையின் ஒவ்வொரு பொருள்களையும் வணங்கினர். மரங்களில் இறைவன் உறைவதாய் நம்பினர். வேப்பமரத்தினை அம்மனாக வழிபடும் மரபு இன்றளவும் மக்களிடம் நிலவுகின்றது. ஆயர்களின் திருமணத்தில் ஏறுதழுவும் நிகழ்வு முதன்மையானது. ஏறுதழுவுவதற்கு முன்னர் போட்டியில் கலந்து கொள்ளும் ஆயர்குல வீரர்கள் நீர்த்துறை, ஆலமரநிழல், மராமரநிழல் ஆகியவற்றில் உள்ள தெய்வங்களை வணங்கினர். இதனை,

**"துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்**
**முறையுளி பராஅய்ப் பாய்ந்தனர் தொழூஉ"** **(கலி.101:13-14)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**காமன் வழிபாடு:**

ஆயர்கள் காமன் வழிபாட்டிலும் ஈடுபட்டுள்ளனர். சங்ககாலத்தில் மன்மதனுக்கு கோவில் இருந்துள்ளது. மோர்விற்கச் செல்லும் ஆயர்மகளிர் காமன் கோவிலுக்குச் சென்று வழிபட்டுள்ளனர். அம்மகளிர் மாலை வேளையில் வீடு திரும்புகையில் தலையில் சும்மாடு வைத்த மோர்ப் பானையையும், ஒரு கையில் நெல் வட்டிலையும் கொண்ட தோற்றத்துடன், தூய்மையான பாலினைப் படைத்துக் காமனை வழிபட்டனர். இதனை,

**"படையிடுவான் மன்கண்டீர் காமன் மடையடும்**
**பாலொடு கோட்டம் புகின்"** **(கலி.109:19-20)**

என்ற அடிகள் விளக்கும்.

**எருமைக்கொம்பு வழிபாடு:**

ஆயர்கள் தங்களின் வாழ்வாதாரத்தைப் பெருக்கும் கால்நடைகளை தெய்வமாகக் கருதினர். ஆயர்களின் திருமண ஏற்பாட்டில் எருமைக்கொம்பு வழிபாடு நிகழ்ந்துள்ளது. ஆயர்களின் ஏறுதழுவலில் வெற்றிபெற்ற ஆண்களுக்கு தங்கள் பெண்களை மணமுடிக்க நினைக்கும் ஆயர்கள் திருமண ஏற்பாடுகளைச் செய்வர். தங்கள் இல்லத்தின் சுவர்களை எல்லாம் செம்மண்ணால் பூசி அழகுபடுத்துவர். இல்லத்தினை தூய்மை செய்து, முற்றத்தில் புதுமணல் பரப்பி பெண் எருமையின் கொம்பை நட்டு வழிபட்டனர். இதனை,

> **"தருமணல் தாழப்பெய்து இல்பூவல் ஊட்டி**
> **எருமைப் பெடையோடு எமர்ஈங்கு அயரும்**
> **பெருமணம் எல்லாம் தனித்தே ஒழிய"     (கலி.114:12-14)**

என்ற அடிகள் உணர்த்தும். இதன்வழி பெண் எருமைக்கொம்பினை தெய்வமாகவே நினைத்து வழிபட்ட ஆயர்களின் மரபை உணரமுடிகின்றது. மேலும் இதன்வழி நம் முன்னோர்கள் விழாக்காலங்களில் பழைய மணலை அகற்றி அங்குப் புதுமணலைப் பரப்பும் வழக்கத்தினைக் கொண்டிருந்தனர் என்பதையும் உணரமுடிகின்றது. பழைய மணல் மாற்றி புதுமணல் பரப்பும் பழந்தமிழரின் சுற்றுப்புறத் தூய்மை மேம்பாட்டை மணிமேகலையும்,

> **"விழவுமலி மூதூர் வீதியும் மன்றமும்**
> **பழமணல் மாற்றுமின்; புதுமணல் பரப்புமின்"[17]**

என்ற அடிகளால் விளக்கும். ஆயர்களிடம் திருமால் வழிபாடு முதன்மை வழிபாடாக காணப்பட்டதுடன் பலதெய்வ வழிபாடும் நிகழ்ந்துள்ளது. அம்மன் தெய்வத்திற்கு பால் படைத்து வழிபடும் முறை இன்றளவும் தமிழ் மக்களிடம் காணப்படுகின்றது. ஆயர்குலப் பெண் மாதரி என்பவள் இயக்கி எனும் பெண் தெய்வத்துக்குப் பாற்சோறு படைத்து வழிபட்டதை சிலப்பதிகாரம்,

> **"புறஞ்சிறை மூதூர்ப் பூங்கண் இயக்கிக்குப்**
> **பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோள்**
> **ஆயர் முதுமகள் மாதரி என்போள்"[18]**

என்ற அடிகளால் புலப்படுத்தும்.

**ஆயர்களின் தெய்வநம்பிக்கை:**

ஆயர்களின் நிலப்பாகுபாட்டுக்குரிய தெய்வம் திருமால். இருப்பினும் ஆயர்கள் திருமாலை வழிபட்டதுடன் பலதெய்வ வழிபாட்டையும் மேற்கொண்டனர். இறைவன் பெயராலும் வடிவாலும் வேறுபட்டு விளங்கிய போதிலும் கருணை, அன்பு எனும் தன்மையால் ஒருவனே என்பதை நன்கு உணர்ந்தவர்களாய் ஆயர்கள் காணப்பட்டனர். சங்ககாலத்தில் அரும்பிய ஒன்றே குலம் ஒருவனே தேவன் எனும் மகத்தான உண்மை இன்றளவும் ஆயர் சமுதாயத்தில் மலர்ந்து மணம் பரப்பிக் கொண்டிருக்கின்றது.

**நம்பிக்கைகள்: நிமித்தங்கள்:**

பழந்தமிழ் மக்களிடையே நிலவிய நம்பிக்கைகளுள் பெரும்பான்மையானவை இன்றளவும் காணப்படுகின்றன. "நம்பிக்கைகள் காரணக்காரியத் தொடர்புகளுக்கு உட்பட்டவையாகும். காரண, காரியத் தொடர்பின் வாயிலாகவோ விளக்க முடியாதனவற்றை மூடநம்பிக்கை என்றும் சான்றுகளின் அடிப்படையிலோ அல்லது காரணகாரியத் தொடர்பின் வாயிலாகவோ விளக்க முடியாதனவற்றை மூடநம்பிக்கை என்றும் வகைப்படுத்துவர் என்கின்றார் சு.சக்திவேல்."[19] நற்றிணையில் 'நம்பு' என்ற வினைச்சொல் நம்பிக்கை என்ற பொருளில் ஆளப்படுகின்றது. இதனை,

> **"சேரியம் பெண்டிர் சிறுசொல் நம்பிச்**
> **சுடுவான் போல நோக்கும்"** **(நற்.175:7-8)**

என்ற அடிகள் விளக்கும். ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் பண்பாட்டு மரபினை அறிவிக்கும் நடவடிக்கையே 'நம்பிக்கை' எனப்படுகின்றது. "நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தால் பின்பற்றப்படுகின்றன. சமூகத்தேவைகள் மற்றும் குறிக்கோள்களின் அடிப்படையில் தோன்றும் நம்பிக்கைகள் பெரும்பாலும் மனிதனின் அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவையாகவே காட்சி தருகின்றன என்கின்றார் க.காந்தி."[20] நம்பிக்கைகள் காலங்காலமாக ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவி வருகின்றன. மனிதரின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான நம்பிக்கைகளுள் நிமித்தம் (சகுனம்) பார்த்தல் முதன்மையானது. "நம்பிக்கைகள், எண்ணங்கள், சகுனங்கள் முதலியன அறிவியல் வகையின்கண் அடங்குமென்கின்றார் சு.சக்திவேல்."[21]

சகுனம் பார்க்கும் நம்பிக்கையை பண்டைத் தமிழர் புள், நிமித்தம் ஆகிய சொற்களால் குறிப்பிட்டுள்ளனர். "நிமித்தம் என்பது வாழ்வில் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக உணர்த்துவதாகும்."[22] நற்செயலையும், நற்பயனையும் அறிவிக்கும் குறியினை நன்னிமித்தம் என்றும், தீச்செயலையும், தீமையையும் அறிவிக்கும் குறியினைத் தீ நிமித்தம் என்றும் வகைப்படுத்தியுள்ளனர்.

'ஆந்தை அலறினாலும் காக்கை எச்சமிட்டாலும் தீது என்பர்', 'நீர்நிறைந்து வரினும் திருநீறு அணிந்துவரினும் நல்லது என்பர்' என்ற அடிகள் மக்களிடம் நிலவும் நல்ல சகுனம். கெட்ட சகுனம் குறித்த நம்பிக்கைகளை உணர்த்துகின்றன. சகுனங்களைச் சிந்தனை நிலை, சொல் நிலை, செயல்நிலை என்ற மூன்று நிலைகளில் காண்கின்றனர். சிந்தனை நிலையாவது ஏதாவது ஒரு செயல் பற்றியோ அல்லது பொருள் பற்றியோ சிந்தித்துக் கொண்டிருக்கையில் காணப்படும் சகுனங்கள்; சொல் நிலையாவது ஏதாவது ஒரு செயலைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும் போது ஏற்படும் சகுனங்கள்.

செயல்நிலையாவது ஏதாவது ஒரு செயலைத் தொடங்குவதற்காகப் புறப்படும் போது காணப்படும் சகுனங்கள். "நிமித்தம் என்பது நம் வாழ்க்கையில் பின்னர் நிகழவிருக்கும் நன்மை, தீமைகளை ஒருசில குறியீடுகளின் மூலம் முன்னரே உணரும்படிச் செய்வதாகும். நிமித்தத்தை இன்று நாம் 'சகுனம்' எனக் குறிப்பிடுகின்றோம் என்கின்றார் அ.முத்துச்சாமி."[23]

**கண் துடித்தல் நிமித்தம்:**

ஆண்களைக் காட்டிலும் பெண்களிடம் சகுனம் சார்ந்த நம்பிக்கைகள் நிறைந்து காணப்பட்டன. பெண்களுக்கு இடக்கண்ணும் ஆண்களுக்கு வலக்கண்ணும் துடித்தல் நல்ல நிமித்தம் என்பர். ஆயர் மகளிர் தம் இடக்கண் துடித்ததை நன்மைக்கான அறிகுறியாய்க் கொண்டனர். இதனை,

> **"கேளாளன் ஆகாமை இல்லை; அவற்கண்டு**
> **வேளாண்மை செய்தன கண்"** **(கலி.101:45-46)**

என்ற அடிகள் விளக்கும்.

கலித்தொகை குறிப்பிடும் கண்துடிக்கும் நிமித்தத்தைச் சிலப்பதிகாரமும் குறிப்பிட்டுள்ளது. கோவலன் மீண்டும் கண்ணகியைச் சேரும் நேரம் கண்ணகிக்கு இடக்கண்ணும், மாதவியைப் பிரியும் நேரமென்பதால் மாதவிக்கு வலக்கண்ணும் துடித்ததை இளங்கோவடிகள் சுட்டிக் காட்டுகின்றார். இதனை,

**"கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்**
**உள்நிறை கரந்து அகத்து ஒளித்து நீர்உகுத்தன!**
**எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும் துடித்தன"[24]**

என்ற அடிகள் உணர்த்தும்.

**காக்கை கரைதல் நிமித்தம்:**

காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்பது பழந்தமிழ் மக்கள் தொடங்கி இன்றளவும் நிலவும் நம்பிக்கை ஆகும். ஆயர்மகளிர் காக்கை கரைந்தால் பிரிந்து சென்ற தலைவன் வருவதற்கான நன்னிமித்தமாகக் கொண்டனர். தலைவன் உடனிருந்தால் மட்டுமே விருந்துணவு சமைக்கும் குணம் கொண்ட ஆயர்மகளிருக்கு காக்கை கரையும் ஒலி இன்னிசையாய்க் கேட்டது.

தெய்வத்திற்குப் படைத்த உணவை தலைவனின் வருகையை உணர்த்திய காக்கைக்கும் விருந்தாக்கினர். இதனை,

**"பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு**
**விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே" (குறுந்.210:5-6)**

என்ற அடிகள் விளக்கும். தலைவனின் வருகையை உணர்த்தும் பறவையினங்களுக்கு ஆயர்மகளிர் விருந்து படைத்ததை நற்றிணையும்,

**"தோள்வலி யாப்ப ஈண்டுநம் வரவினைப்**
**புள்அறி வுறீஇயின கொல்லோ தெள்ளிதின்" (நற்.161:8-9)**

என்ற அடிகளால் புலப்படுத்துகின்றன. காக்கை கரைவதால் அங்கு பல காக்கைகளும் புதிய விருந்தினர்களாக இடம்பெற்றிருக்கும் என்பதை அறியமுடிகின்றது.

**பல்லியொலி நிமித்தம்:**

பழந்தமிழ் மக்களால் பார்க்கப்படும் நிமித்தங்களில் மிக முக்கியமானது பல்லி நிமித்தம் ஆகும். பல்லியின் ஒலியையும் பல்லி விழுதலையும் நிமித்தங்களாகக் கொண்டனர். அதன் முக்கியத்துவத்தை உணர்ந்தே நமது முன்னோர்கள்

‘கௌரி சாஸ்திரம்’ என்ற நூலையே இயற்றியுள்ளனர். பல்லி சகுனத்தையும், ‘சொல் பலன்’, ‘விழும் பலன்’ என இருவகைப்படுத்தியுள்ளனர். பல்லி சொல்லும் எண்ணிக்கையையும், திசையையும் கிழமையையும் கருத்தில் கொண்டு பலன் கூறுவர். பல்லி விழும் பலனையும் நமது முன்னோர்கள் வரையறுத்துள்ளனர். பல்லி உடம்பில் விழும் இடத்திற்கு இடம் வேறுபட்ட பலனை உணர்த்துகின்றது. உடல் உறுப்புகளில் பல்லி விழுவதால் ஏற்படும் பலனை, சிரசில் (தலை) - மரணம், மூக்கில் - நோய், வயிற்றில் - குழந்தை, குறியில் - கேடு, முழங்காலில் - கலகம், பாதத்தில் - பிணி, இடக்கையில் - மரணம், வலக்கையில் - பெரியசாவு, உடம்பில் - தீர்க்காயுள் என நம் முன்னோர் வகைப்படுத்துவர்.

தலைவனை விட்டுப் பிரிந்திருந்த ஆயர்மகளிர் பல்லி ஒலியை, தலைவன் விரைந்து வருவதற்கான அறிகுறியாய்க் கொண்டனர். வினை மேற்கொள்ளும் பொருட்டு பிரிந்து சென்ற தலைவனின் வருகையை நினைத்துத் துன்புற்ற ஆயர்மகளிர் பல்லி எழுப்பிய ஒலியை நன்னிமித்தமாகக் கொண்டு தலைவனின் வரவை எதிர்நோக்கினர். இதனை,

**“எம்மினும் விரைந்துவல் எய்திப் பல்மாண்**
**ஓங்கிய நல்இல் ஒருசிறை நிலைஇ**
**பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவி”** **(அகம்.9:17-19)**

என்ற அடிகள் புலப்படுத்தும். தலைவனின் வரவை எண்ணி ஏங்கிய தலைவிக்கு பல்லியின் ஒலி நன்னிமித்தமாய் அமைந்ததால் ஆயர்குலத் தலைவி பல்லியைப் போற்றினாள். இதனை,

**“முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்!**
**வருவம் என்னும் பருவரல் தீரப்**
**படும்கொல், வாழி, நெடுஞ்சுவர்ப் பல்லி”** **(நற்.169:1-3)**

என்ற அடிகள் உணர்த்தும். தலைவனை மையப்படுத்தியும் தலைமகளை மையப்படுத்தியும் பல்லி பற்றிய நிமித்தங்கள் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன. “ஆயர்கள் பல்லியின் ஒலியை நன்னிமித்தமாகக் கருதியதை சங்க இலக்கியங்கள் பலவிடத்தும் சுட்டிக் காட்டுகின்றன.”[25] தமிழ் மக்களிடம் இயல்பாகவே

காணப்பட்ட மனநிலையான பல்லிஒலி நிமித்தம் ஆயர்குலப் பெண்களிடம் பெரிதும் இடம்பெற்றுள்ளது. பல்லி தன் பசியுணர்வால் இயற்கையாக எழுப்பும் ஒலியைக்கூட ஆயர்குல மகளிர் நிமித்தமாகக் கருதி மகிழ்ந்தும் வருந்தியும் வாழ்ந்திருப்பதை உணரமுடிகின்றது.

**தவளை, தேரைகளின் ஒலி நிமித்தம்:**

வினைமேற்கொண்டு செல்லும் ஆயர்குலத் தலைவன், தலைவியிடம் கார்காலத் தொடக்கத்திலேயே விரைந்து வருவதாய்க் கூறிச்செல்வான். கார்காலம் தொடங்கியதும் தேரைகளும், தவளைகளும். ஒலி எழுப்புவது இயல்பு. தலைவிக்கு, தலைவனின் வருகைக்கான கார்காலத்தை நினைவூட்டிய தவளை, தேரைகளின் ஒலி நன்னிமித்தமாய் தோன்றியது. தவளையும், தேரையும் ஒலி எழுப்பி நன்னிமித்தம் காட்டியதால், தலைவன் உடனே வருவான் என ஆயமகளிர் நம்பினர். இதனை,

> **“வரி நுணல் கறங்கத் தேரை தெவிட்டக்**
> **கார்தொடங் கின்றேகாலை; இனிநின்**
> **நேர்இறைப் பணைத்தோட்டு ஆர்விருந்துஆக**
> **வடிமணி நெடுந்தேர் கடைஇ**
> **வருவர் இன்றுநம் காத லோரே” (ஐங்.468:1-5)**

என்ற அடிகள் புலப்படுத்தும்.

**குழலோசை நிமித்தம்:**

புல்லாங்குழல் இசை ஆயர்களின் வாழ்வில் ஒன்றியது. ஏறுதழுவும் நிகழ்வில் தன்னை விரும்பிய தலைவன் தனக்குரிய காளையை அடக்கி வெற்றி காண்பானா? என்று தலைவி தவித்துக் கொண்டிருப்பாள். அந்நேரம் ஏறுகள், தம்மை அடக்க முற்படும் ஆய இளைஞர்களைத் தம் கூரிய கொம்புகளால் குத்திச் சிதைத்துக் கொண்டிருந்தன. அத்தகு கொடிய செயலைக் கண்ட ஆயமகளிர் எதிர்காலத்தில் ஏறுகளைத் தழுவியடக்கித் தம்மை மணக்கவிருக்கும் ஆய இளைஞர்களுக்கும் இக்கொடிய துன்பம் நேர்ந்து விடுமோ! என எண்ணி அச்சம் கொண்டனர். அவ்வேளையில் எங்கிருந்தோ ஆயர் ஊதும் இனிய குழலோசையாக பண்ணோசை கேட்டது. அக்குழலோசை ஆயமகளிருக்கு மணமாலையைச் சூட்டித்தரும் நன்னிமித்தமாய் அமைகின்றது. இதனை,

**“அணிமாலைக் கேள்வன் தரூஉமார் ஆயர்**
**மணிமாலை ஊதும் குழல்”** **(கலி.101:34-35)**

என்ற அடிகள் உணர்த்தும். ஆயமகளிர் குழலோசையை இன்பம் தரும் நிமித்தமாகக் கருதுவதுடன் தலைவனைப் பிரிந்திருக்கும் காலத்தில் துன்பத்தை மிகுதிப்படுத்துவதாகவும் கொள்கின்றனர். இதனால் ஆயமகளிரின் குழந்தை மனம் புலப்படுகின்றது.

**மாலை விழுதல்:**

ஆயர்குல இளைஞர்கள் கழுத்தில் மாலைகளை அணிந்து ஏறுதழுவினர். ஏறுதழுவும் ஆய இளைஞனின் கழுத்தில் இருந்த முல்லை மாலை காளையின் கொம்பில் மாட்டிக் கொண்டது. காளை துள்ளிக் குதிக்கும் போது அம்மாலை அந்த காளைக்குரிய ஆயமங்கையின் கூந்தலிலே விழுகின்றது. அந்தக் காட்சியினைக்கண்ட அவளது பெற்றோரும் உடன்பிறந்தோரும் தம் குலத் தெய்வமாகிய திருமாலே நேரில் வந்து தன் மகளுக்கு இவன் தான் கணவன் எனக் காட்டியதாக நம்பினர். இதனை,

**“மண்ணிமா சற்றநின் கூழையுள் ஏறுஅவன்**
**கண்ணிதந் திட்டது எனக்கேட்டுத் திண்ணிதாத்**
**தெய்வம்மால் காட்டிற்று இவட்கென, நின்னைஅப்**
**பொய்யில் பொதுவற்கு அடைசூழ்ந்தார் தந்தையோடு**
**ஐயன்மா ரெல்லாம் ஒருங்கு”** **(கலி.107:31-35)**

என்ற அடிகள் விளக்கும்.

**கிளிமொழி நிமித்தம்:**

ஆயமகளிர் வீட்டில் வளர்க்கும் கிளியின் மொழியில் நிமித்தம் கண்டுள்ளனர். வினைமேற்கொண்டு சென்ற தலைவனின் வரவை எதிர்நோக்கும் தலைவி கிளியிடம் தலைவனின் வரவை உணர்த்துமாறு ஏதேனும் சொல் என கேட்டாள். தமது துன்பத்தைப் போக்கும்படி தாம் வளர்க்கும் கிளிகள் ‘தலைவன் வருவான்’ என்னும் நற்சொல்லைக் கூறவேண்டும் என்று விரும்பினர். அவ்வாறே தாம் விரும்பியது போன்றே கிளிகள் கூறுமாயின் அதை நன்னிமித்தமாகக் கொண்டனர். இதனை,

**“செந்தார்ப் பைங்கிளி முன்கை யேந்தி**
**யின்றுவரி னுரைமோ சென்றிசினோர் திறத்தென**

**இல்லவர் அறிதலஞ்சி மெல்லென**
**மழலை யின்சொல் பயிற்றும்**
**நாணுடை அரிவை மாண்நலம் பெறவே" (அகம்.34:14-18)**

என்ற அடிகள் புலப்படுத்தும். இயற்கையாகவே சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளையை ஆயமகளிர் தலைவனின் வருகையைச் சொல்லுமாறு பழக்கி வைத்துள்ளனர்.

**கோடிட்டு எண்ணல்:**

ஆயமகளிர் தலைவனின் வருகையை சுவற்றில் கோடிட்டு என்னும் வழக்கத்தையும் கொண்டிருந்தனர். வினைமேற்கொள்ளும் ஆயர்குல ஆடவர், கார்காலம் தொடங்குவதற்குள் திரும்பி வருவதாய்க் கூறிச் சென்றனர். ஆயமகளிர் தம் தலைவன் கூறிச்சென்ற அந்நாளைச் சுவரில் கோடிட்டுக் கணக்கிடும் இயல்புடையவர்களாக விளங்கினர். இதனை,

**"வீங்கிழை நெகிழ விம்ம லீங்கே**
**எறிகட் பேதுற லாய்கோ டிட்டுச்**
**சுவர்வாய்ப் பற்றுநின் படர்சே ணீங்க" (குறுந்.358:1-3)**

என்ற அடிகள் விளக்கும்.

**விரிச்சி (நற்சொல்) கேட்டல்:**

தலைவனின் வரவை எண்ணி வருந்தும் தலைவியை ஆயர் முதுமக்கள் தேற்றுவதற்காக ஊரின் புறத்தே சென்று இறைவனை வழிபட்டு நற்சொல் கேட்டு நிற்பர். அவ்வேளையில் இடையர்குலப்பெண்ணொருத்தி பசியால் கதறிக்கொண்டிருக்கும் இளங்கன்றுக்குட்டிகளை பார்த்து, உம் தாய்மார்கள் நிறைய இரை மேய்ந்துவிட்டு இப்பொழுதே வந்துவிடுவார்கள் வருத்தம் வேண்டாம் என்று மொழிகின்றாள். அதைக்கேட்ட பெருமுதுப்பெண்டிர் தலைவனும் பெரும்பொருள் ஈட்டிய கையுடன் இன்றே விரைந்து வருவான் எனத் தலைவிக்கு நன்னிமித்தம் காட்டினர். இதனை,

**"இன்னே வருகுவர் தாய ரென்போள்**
**நன்னர் நன்மொழி கேட்டன மதனால்**
**நல்ல நல்லோர் வாய்ப்புள் தெவ்வர்**
**முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து**
**வருதல் தலைவர் வாய்வது நீநின்" (முல்லைப்பா.16-20)**

என்ற அடிகள் உணர்த்தும். ஆயர்குலப் பெண்களின் நிமித்தங்களும் நம்பிக்கைகளும் தம் தலைவனின் வருகையை எதிர்நோக்கியே அமைந்திருந்தன. ஆயர்கள் நிமித்தங்களைக் கண்டு அஞ்சியதும் வாழ்த்தியதும் இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது. சங்க இலக்கியங்கள் உணர்த்தி நிற்கும் இத்தகைய நிகழ்வினைச் சிலப்பதிகாரமும் எடுத்தியம்பும். சிலம்பில் கண்ணகி தங்கியிருந்த ஆயர்சேரியில் பால் உறையாததையும், காளையின் கண்களில் நீர் வடிதலையும், வெண்ணெய் உருக வைக்கும் போது உருகாமல் இருப்பதையும், துள்ளி விளையாடும் ஆட்டுக்குட்டிகள் அசையாமல் இருப்பதையும், பசுக்களின் கழுத்து மணிகள் அறுந்து கீழே விழுவதையும், பசுக்களின் கதறலையும் தீய நிமித்தங்களாகக் கருதினர். ஆதலால் கண்ணகியை அடைக்கலமாய்ப் பெற்ற மாதரி தன் மகள் ஐயையிடம் தீங்கொன்றும் வராமல் இருக்க தெய்வத்தை வணங்கச் சொல்கின்றாள். இதனை,

**“குடப்பால் உறையா குறிஇமில் ஏற்றின்**
**மடக்கணீர் சோரும் வருவதொன் றுண்டு**
**உறிநறு வெண்ணெய் உருகா உருகும்**
**மறிதெறித் தாடா வருவதொன் றுண்டு**
**நான்முலை யாயம் நடுங்குபு நின்றிரங்கும்**
**மான்மணி விழும் வருவதொன்றுண்டு”**[26]

என்ற ஆய்ச்சியர் குரவை அடிகள் உணர்த்தும். நிமித்தம் பார்ப்பது தமிழ் மக்களின் அடிமனதில் பதிந்த ஒரு நிகழ்வு ஆகும். ஆயர்குல மக்களும் தீநிமித்தம் கண்டால் இறைவனை வேண்டியும் நன்னிமித்தம் கண்டால் வாழ்த்தியும் வாழ்ந்துள்ளனர் என்பதையும் உணரமுடிகின்றது.

**சூளுரைத்தல்:**

ஆயர் தாம் கூறும் கருத்தை மற்றவர்கள் நம்ப மறுக்கும் சமயங்களில் தம் கருத்தின் உண்மையை நிருபிப்பதற்காகத் திருமாலின் திருவடிகளைத் தலையால் வணங்கிக் கையால் தொட்டுச் சூளுரைத்தனர். இதனை,

**“மலையொடு மார்புஅமைந்த செல்வன் அடியைத்**
**தலையினால் தொட்டுஉற்றேன் சூள்”     (கலி.108:55-56)**

என்ற அடிகள் எடுத்துரைக்கும். இவ்வாறு இறைவனின் திருவடிகளின்மீது சூளுரைக்கும் நம்பிக்கை இன்றும் காணப்படுகின்றது.

**ஒப்பனை செய்தல்:**

அழகுபடுத்திக் கொள்ளுதல் தமிழரின் தனிச்சிறப்புகளுள் ஒன்றாகும். இயற்கையோடு இணைந்து வாழ்ந்த பழந்தமிழ் மக்கள் இயற்கைப் பொருள்களால் தங்களை அழகுபடுத்திக் கொண்டனர். ஆயர்களில் ஆண், பெண் வேறுபாடின்றி தன்னை அழகுபடுத்திக் கொள்வதில் ஆர்வம் காட்டியுள்ளனர். ஆயர்கள் விலையுயர்ந்த அணிகலன்களையும், காட்டில் கிடைத்த நறுமண மலர்களையும், இயற்கை நறுமணப் பொடிகளையும், அரைத்த சாந்துக்களையும் ஒப்பனை செய்து கொள்வதற்காகப் பயன்படுத்தியுள்ளனர். ஆயர்குல ஆண்கள் முல்லை நிலத்தில் கிடைக்கப்பெற்ற முல்லை, கொன்றை, காயா, பிடவம் முதலிய மலர்களையும், மார்பில் சந்தனக் குழம்பையும் பொன்னால் ஆன ஆரத்தினையும், நறுமணப் பொடிகளைக் கொண்டும் தங்களை ஒப்பனை செய்து கொண்டனர். இதனை,

**“ஆரம் தாழ்ந்த வணிகிளர் மார்பின்” (புறம்.59:1)**
**“பல்பூ மிடைந்த படலைக் கண்ணி**
**ஒன்றுஅமர் உடுக்கை, கூழ்ஆர் இடையன்”**
**(பெரும்பாண்.174-175)**

என்ற அடிகள் விளக்கும். “ஆயர்கள் காட்டில் கிடைக்கும் பல வகையான மலர்களை அணிந்து கொண்டமையை சங்க இலக்கியங்கள் பலவிடத்தும் பதிவு செய்துள்ளன.”[27]

**ஒப்பனையில் இடம்பெற்ற மலர்கள்:**

ஆயர்களின் தலையில் சூடும் மலர்களை கண்ணி எனவும், மார்பில் சூடுவதை ‘மாலை’ எனவும் குறித்தனர். ஆடவர்கள் கஞ்சங்குல்லை, காயா, குருந்தம், கொன்றை, சுரபுன்னை, பாங்கர், பிடவம், முல்லை, வெட்சி முதலிய மலர்களால் தொடுக்கப்பெற்ற மாலைகளைத் தம் கழுத்தில் அணிந்து கொண்டனர். இதனை,

**“ஞெலிபுஉடன் நிரைத்த ஞெகிழ் இதழ்க் கோடலும்**
**மணிபுரை உருவின காயாவும்; பிறவும்” (கலி.101:4-5)**

**“மெல்லிணர்க் கொன்றையும் மென்மலர்க் காயாவும்**
**புல்இலை வெட்சியும் பிடவும் தளவும்**
**குல்லையும் குருந்தும் கோடலும் பாங்கரும்” (கலி.103:1-3)**

**“காயாம்பூங் கண்ணிக் கருந்துவர் ஆடையை” (கலி.108:10)**

**“குருந்தங் கண்ணிக் கோவலர்” (ஐங்.439:2)**

**“கொன்றையொடு மலர்ந்த குருந்துமா ருடைத்தே”(ஐங்.436:3)**

**“வழைப்பூங் கண்ணி வாய்வா ளண்டிரன்” (புறம்.131:2)**

என்ற இலக்கிய அடிகள் உணர்த்துகின்றன.

**ஆயமகளிர் சூடிய மலர்கள்:**

கற்பின் குறியீடான முல்லை மலரைச் சூடியதுடன் காட்டில் கிடைத்த பலவகையான நறுமணமிக்க மலர்களையும் மகளிர் சூடிக்கொண்டனர். முல்லைமலரை அணிந்து கொள்வதில் பெருவிருப்பம் உடையவர்கள் ஆயமகளிர். இதனை,

**“வாணுதல் அரிவை முல்லை மலைய” (ஐங்.408:2)**

**“முல்லை நாறுங் கூந்தல் கமழ்கொள” (ஐங்.446:1)**

**“காட்டுச்சார்க் கொய்த சிறுமுல்லை மற்றிவை**
**முல்லை இவையாயின் முற்றிய கூழையாய்”**
**(கலி.117:11-12)**

என்ற அடிகள் உணர்த்தும். ஆயமகளிர் பலவகை நறுமணமிக்க மலர்களைச் சூடிக்கொண்டதால் அவர்களின் கூந்தல் மணமிகுந்து காணப்பட்டது. மங்கையருக்கு மலர் சூடுதல் என்பது இயல்பாகவே அமைந்த குணம் ஆகும். ஆயமகளிர் குருந்தம், கொன்றை, தாமரை, தோன்றி, பிடவம் முதலிய மலர்களை விரும்பிச் சூடியமையை,

**“தண்நறும் பிடவமும் தவழ்கொடித் தளவமும்**
**வண்ணவன் தோன்றியும் வயங்கிணர்க் கொன்றையும்”**
**(கலி.102:2-3)**

**“… … … … … … … குவளைக்**
**குறுந்தா ளாண்மலர் நாறும்**
**நறுமென் கூந்தன் மெல்லணை யேமே” (குறுந்.270:7-8)**

**“கான முல்லைக் கயவாய் அலரி**
**பார்ப்பன மகளிர் சாரற்புறத் தணியக்”  (நற்.321:3-4)**

என்ற அடிகளால் உணரமுடிகின்றது. “தலைக்கோலம் செய்து கொள்வதில் பழந்தமிழ்ப் பெண்கள் அளவு கடந்த விருப்பத்தைக் காட்டியுள்ளனர். கறுத்து நீண்ட நெளிந்த கூந்தலையே மிகவும் விரும்பி வளர்த்தனர். கொண்டை, குழல், பனிச்சை, சுருள், முடி என ஐந்து வகையாகத் தலைக்கோலம் செய்து கொண்டனர் என்கின்றார் சு.கு.பன்னீர்செல்வம்.”[28]

ஆயமகளிர் தலைவன் உடனிருக்கும் காலங்களில் தங்களை ஒப்பனை செய்து கொண்டும், தலைவனை விட்டுப் பிரிந்திருந்த காலங்களில் புனையா ஓவியமாகவும் காட்சியளித்துள்ளனர்.

**கூந்தல் பேணல்:**

கருமையான நீண்ட கூந்தலைப் பெண்கள் மட்டுமின்றி ஆண்களும் வளர்த்துள்ளனர். ஆயர்குல ஆடவர் தம் கூந்தலைப் பேணுவதில் பசும்பாலைத் தடவினர். இதனை,

**“வெண்ணெய் உரைஇ விரித்த கதுப்போடே”  (கலி.115:7)**

**“நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்”  (புறம்.147:6)**

**“சாந்துஉளர் கூழை முடியா, நிலம் தாழ்ந்த”  (கலி.115:13)**

என்ற அடிகள் புலப்படுத்தும். ஆயமகளிர் தங்களின் ஈரத்தலையை உலரவைப்பதற்கு நறுமணப்புகையூட்டினர். இதனை,

**“ஒலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத்**
**தண்கமழ் கோதை புனைய”  (புறம்.146:9-10)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**கண்களுக்கு மைதீட்டல்:**

பெண்களின் கண்களை உருவகப்படுத்தாத கவிதைகள் இல்லவே இல்லை என்னும், அளவிற்கு அழகுணர்ச்சி மிகுந்த ஒன்று பெண்களின் கண்கள், மகளிர் அழகுமிக்க தம் கண்களை மேலும் அழகுபடுத்த மைதீட்டும் வழக்கத்தைப்

பின்பற்றினர். ஆண்கள் கண்களுக்கு மைதீட்டிக் கொள்ளவில்லை. பெண்களும் சிறுவர்களும் கண்களுக்கு மைதீட்டிக் கொள்வது இன்றளவும் காணப்படுகின்றது. ஆயர்குல மகளிர் கண்களுக்கு மைபூசி அழகுபடுத்திக்கொண்டமையை கலித்தொகை,

**"பல்லும் பணைத்தோளும் பேரமர் உண்கண்ணும்" (கலி.108:16)**
**"கொலைஉண்கண் கூரெயிற்றுக் கொய்தளிர் மேனி" (கலி.108:52)**
**"எல்லா! கடாஅய கண்ணால் கலைஇய நோய் செய்யும்" (கலி.112:5)**
**"ஆயிதழ் உண்கண் பசப்பத் தடமென்தோள்" (கலி.112:24)**
**"அலமரல் அமருண்கண் அந்நல்லாய்! நீஉறீஇ" (கலி.113:2)**

என்ற அடிகளால் புலப்படுத்துகின்றது. மை பூசிய ஆயமகளிரின் கண்களை ஐங்குறுநூறும்,

**"ஆய்மலர் உண்கணும் நீர்நிறைந் தனவே" (ஐங்.423:4)**
**"பல்லிதழ் உண்கண் பனியலைக் கலங்கத்" (ஐங்.471:2)**
**"ஈரிதழ் உண்கண் உகுத்த**
**பூசல் கேட்டும் அருளா தோயே" (ஐங்.480:3-4)**
**"கொன்றைப் பூவின் பசந்த உண்கண்**
**குன்றக நெடுஞ்சுனைக் குவளை போலத்" (ஐங்.500:1-2)**

என்ற அடிகளால் உணர்த்துகின்றது.

ஆயர்குல மகளிர் தம் ஆண் குழந்தைகளுக்கு கண்களில் மைதீட்டினர். இதனை,

**"மாதர் உண்கண் மகன்விளை யாடக்**
**காதலித் தழீஇ இனிதிருந் தனனே" (ஐங்.406:1-2)**

என்ற அடிகள் விளக்கும்.

**ஆயர்களின் ஒப்பனையில் அணிகலன்கள்:**

பெண்ணுக்கு புன்னகையும் பொன்நகையும் அழகு என்பர். ஆயமகளிர் மோர் விற்கும் பொழுதும், ஏறுதழுவலைக் காணச் செல்லும் பொழுதும், மாலைநேர வழிபாட்டின் பொழுதும் விலையுயர்ந்த அணிகலன்களை அணிந்து கொண்டனர். தலைவன் தன்னுடன் இருக்கையில் தம்மை அலங்கரித்துக் கொள்வதும், தலைவன் பிரிந்திருந்த காலங்களில் ஒப்பனை செய்து கொள்ளாது புனையா ஓவியமாய்க் காட்சி அளிப்பதும் ஆயமகளிரின் இயல்பாக இருந்துள்ளது.

ஆயமகளிர் அணிந்த அணிகலன்கள் "திருந்திய அமைப்பினையும், ஒளிவீசும் தன்மையும், ஆராய்ந்து வடிவமைக்கப்பட்ட நுணுக்கத்தையும் கொண்டு விளங்கியுள்ளது."[29] இதனை,

**"தெரியிழை யரிவைக்குப் பெருவிருந் தாக" (ஐங்.482:1)**

என்ற அடி விளக்கும்.

பொன்னும், மணியும், பவளமும் மிகுந்திருந்த சங்க காலத்தில் "ஆயமகளிர் காதுகளில் அணிந்த ஆபரணம் குழை எனப்பட்டது. இதனை, 'மகரக்குழை', 'கனங்குழை', 'சிறுகுழை', பூங்குழை', 'கொடுங்குழை', 'பொலங்குழை', 'அரிக்குழை' எனப் பல பெயர்களால் சங்க இலக்கியம் சுட்டுகின்றது."[30] இதனை,

**"வரிக்கூழ வட்டி தழீஇ அரிக்குழை" (கலி.109:14)**

என்ற அடி விளக்கும்.

கைகளில் 'தொடி' எனப் பெயர் பெற்ற வளையல்களை அணிந்துள்ளனர். இவை "அத்தொடியும் 'பூந்தொடி', 'வளையல்', 'ஒண்பொடி', 'குறுந்தொடி', 'ஆய்தொடி' எனப் பல பெயர்களால் அழைக்கப்பட்டிருக்கின்றன."[31] ஆயர்மகளிர் கைகளில் எப்போதும் வளையல் அணிந்திருப்பர். இதனை,

**"வளையான் தீம்பால் மிளைசூழ் கோவலர்**
**வளையோர் உவப்பத் தருவனர் சொரிதலின்" (மலைபடு.409:10)**

என்ற அடிகள் விளக்கும்.

ஆயமகளிர் விலையுயர்ந்த உலோகங்களினாலான வளையல்களை மட்டுமின்றி ஆம்பல் மலரின் தண்டுகளாலும், பொன்னால் உழிஞைப்பூவின் வடிவிலும் உருவாக்கப்பட்ட வளையல்களை அணிந்து தங்களை அழகுபடுத்திக் கொண்டனர்.

"முல்லைநில மகளிர் நீராடும் போது காதணிகளைக் கழற்றி வைத்துவிட்டு நீராடுகின்றனர். மீன்கொத்திப் பறவை தனக்கு உணவெனத் தூக்கிக்கொண்டு செல்வதாக அமைந்த பாடலால் சங்க காலத்திலேயே மீன் போன்ற வடிவமைப்பில் காதணிகள் இருந்ததை உணரமுடிகின்றது என்கின்றார் ச.வே.சுப்பிரமணியன்."[32]

ஒரு சமுதாயத்தின் நாகரிகத்தையும், வளர்ச்சியையும் காட்டுவது அணிகலன்கள். அவ்வகையில் ஆயர்களின் நாகரிகப் பழக்க வழக்கங்கள் புலனாகின்றன.

**மார்பகங்களில் தொய்யில் வரைதல்:**

மார்பகங்களில் கோலமிட்டு அழகுபடுத்திக் கொள்ளும் வழக்கம் ஆயமகளிரிடையே காணப்பட்டுள்ளது. "தொய்யில் என்பது மகளிரின் மார்பகங்களில் சந்தனக்குழம்பால் எழுதும் கோலம் என்கின்றது தமிழ்ப் பேரகராதி."[33] ஆயமகளிர் தொய்யில் வரைந்து அழகுபடுத்திக் கொண்டமையை,

**"ஐய பிதிர்ந்த சுணங்குஅணி மென்முலைமேல்**
**தொய்யில் எழுதுகோ மற்று?" (கலி.111:16-17)**

என்ற அடிகள் விளக்கும். "தொய்யில் என்பது மகளிரின் மார்பகங்களில் சந்தனக் குழம்பாலும் குங்குமக் குழம்பாலும் எழுதும் ஓவியங்கள் என்கின்றார் பொ.வே.சோமசுந்தரனார்."[34] ஆயமகளிர் எப்பொழுதும் தொய்யில் வரையப்பட்ட மார்பகங்களைக் கொண்டிருந்தனர். இதனை,

**"முதிரா இளமுகை ஒப்ப எதிரிய**
**தொய்யில் பொறித்த வனமுலையாய்!" (கலி.117:3-4)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**தோள்களிலும் மார்புகளிலும் சந்தனம் பூசுதல்:**

ஆயமகளிரைப் போன்றே ஆயர்குல ஆடவரும் மார்பகங்களை அழகுபடுத்தினர். ஆயர்கள் தம் பருத்த தோள்களில் குளிர்ச்சி மிக்க சந்தனத்தைப் பூசிக்கொண்டனர். இதனை,

**"சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்" (சிறுபாண்.98)**

என்ற அடி புலப்படுத்தும். அகன்ற மார்புகளில் சந்தனம் பூசிக்கொண்டதனை,

**"தேம்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்" (அகம்.36:18)**

என்ற அடி உணர்த்தும்.

**பொழுதுபோக்கு நிகழ்வுகள்:**

ஆயர்களின் வாழ்வியலில் கலைகளும் விளையாட்டுகளும் முக்கியமானப் பொழுதுபோக்கு நிகழ்வுகளாக உள்ளன. இயல், இசை, நாடகம் எனும் மூன்று

பகுப்புகளைக் கொண்ட தமிழ்மொழியில் இயல், நாடகம் என்பதைவிட இசைத்தமிழின் ஆதிக்கம் அதிகமாகவே இருக்கின்றது. அவ்வழியில் ஆயர்களின் வாழ்வியலில் இசைக்கலையும் நாடகம் எனும் கூத்துக்கலையும் சிறப்புற்றுத் திகழ்ந்துள்ளது. திணைச்சமுதாயத்தில் வாழ்ந்த மக்கள் பறை, யாழ், பண் என தத்தம் நிலத்திற்கேற்ப இசைக்கருவிகளை இசைத்து மகிழ்ந்தனர். ஆயர் வாழ்வியலில் ஏறுகோட்பறையும், யாழிசையும், சாதாரிப்பண்ணும், ஆம்பல் பண்ணிசையும், புல்லாங்குழலோசையும் இடம்பெற்றது.

**ஏறுகோட்பறை:**

ஆயர்களின் வாழ்வியலில் பறையொலி திருமணத்திற்கு அடிப்படை நிகழ்வான ஏறுதழுவலில் இடம்பெற்றது. ஏறுதழுவி வெற்றி பெற்றால் தான் திருமணம் எனும் கட்டமைப்பில் காளையை அடக்க நினைக்கும் ஆயர்கள் பறையொலிக்காக காத்துக்கொண்டிருந்தனர். இதனை (கலி.104:29-31) முல்லைக்கலி உணர்த்தும்.

**யாழிசை:**

சங்ககாலத்து இசைக்கருவிகளில் யாழ் சிறப்பிடம் பெற்றது. சீறியாழ், பேரியாழ், வில்யாழ் என்பன யாழின் வகைகள் ஆகும். யாழின் வகைகளைப் போன்றே அதனை மீட்டுவோரும் பேரியாழ்ப்பாணர், சீறியாழ்ப்பாணர் என வகைப்படுத்தப்பட்டனர். பத்தல், தோல், ஆணி, மருப்பு, திவவு, நரம்பு என்பன யாழின் உறுப்புகள் ஆகும். ஆயர்கள் யாழிசையின் இன்பத்தை அறிந்திருந்தனர். ஆயர்கள் மாலைக் காலத்தில் யாழ் மீட்டி இன்பம் கண்டதை,

**“பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப**
**ஆருயிர் அணங்கும் தெள்இசை” (அகம்.214:13-14)**
**“ஈர்ம்புறவு இயங்குவழி அறுப்பத் தீந்தொடைப்**
**பையுள் நல்யாழ் செவ்வழி பிறப்ப” (அகம்.314:11-12)**

என்ற அடிகள் உணர்த்தும். முல்லை நிலத்தில் வளர்ந்த குமிழங்கோட்டை வளைத்துக்கட்டி மரல் கயிற்றை நரம்பாகக் கொண்டு யாழினை உருவாக்கி அவ்யாழில் விரல்களால் குறிஞ்சிப் பண்ணை மீட்டினர். அவ்யாழினின்று தோன்றும் ஒலி வண்டுகளின் ரீங்கார ஒலியைப் போன்றிருந்தது.

**“… … … … … … … குமிழின்**
**புழற்கோட்டுத் தொடுத்த மரல்புரி நரம்பின்**
**வில்யாழ் இசைக்கும் விரல் எறி குறிஞ்சி”     (பெரும்பாண்.180-183)**

என்ற அடிகள் உணர்த்தும். “பசுக்கூட்டங்களுடன் செல்லும் ஆயர்கள் குழல்களுடனே சென்றதை இலக்கியங்கள் பலவிடத்தும் பதிவு செய்துள்ளன.”[35]

**குழலிசைத்தல்:**

ஆயர்குல ஆடவர்கள் குழலிசைப்பதில் வல்லவராய் விளங்கினர். முல்லை நிலத்தில் விளைந்த கொன்றைக் காய்களைத் துளைத்து, அவற்றின் நச்சுமிக்க விதைகளை அகற்றிவிட்டு குழல் செய்தனர். அதற்கு ‘கொன்றைக்குழல்’ என்று பெயர். கொன்றைக்குழலை இசைத்த வண்ணம் ஆயர்கள் பசுக்கூட்டத்தின் பின்னே செல்வர். இதனை,

**“படுமணி மிடற்ற பயநிரை யாயம்**
**கொடுமடி யுடையர் கோற்கைக் கோவலர்**
**கொன்றைங் குழலர் பின்றைத் தூங்க”     (அகம்.54:9-11)**

என்ற அடிகள் புலப்படுத்தும். கால்நடை மேய்ச்சலில் ஈடுபடும் ஆயர்கள் கொன்றைக் குழல் இசைத்து மகிழ்ந்தனர். இதனை,

**“இமிழ்இசை மண்டை உறியொடு தூக்கி**
**ஒழுகிய கொன்றைத் தீங்குழல் முரற்சியர்”     (கலி.106:2-3)**

என்ற அடிகள் உணர்த்தும். அந்திநேரத்தில் கோவலர்கள் பசுக்களை ஒன்று திரட்டுவதற்காக இசைக்கும் கொன்றைக் குழலோசையானது காட்டைக்கடந்து, நிலா முற்றத்தில் கேட்கும். இதனை,

**“காலை எய்த கடவுமதி மாலை**
**அந்திக் கோவலர் அம்பணை இமிழ்இசை**
**அரமிய வியல்அகத்து இயம்பும்**
**நிரைநிலை ஞாயில் நெடுமதில் ஊரே”     (அகம்.124:13-16)**

என்ற அடிகளால் உணரமுடிகின்றது. கொன்றைக் குழலோசை இனிமையான நெடிய இசை என்பதும் புலனாகின்றது.

**மூங்கில் குழல் / புல்லாங்குழல் இசை:**

முல்லை நிலத்தில் வாழ்ந்த இடையன் கன்றுகளையும் பசுக்கூட்டத்தையும் காட்டில் மேய்க்கும் போது தீக்கடைக்கோலால் தீ உண்டாக்கி மூங்கிலில் துளைபோட்டு குழல் செய்தான். மூங்கிலால் ஆன புல்லாங்குழலில் பாலைப்பண்ணை இசைத்தான். பாலைப்பண்ணை வெறுத்தால் குமிழ மரத்தின் துளையை உடைய கொம்பை வளைத்து, மரலை நரம்பாகக் கொண்டு வில்யாழினை உருவாக்கி அதில் குறிஞ்சிப் பண்ணைப் பாடினான். இதனை,

**"ஞெலிகோல் கொண்ட பெருவிறல் நெகிழிச்**
**செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்**
**இன்தீம் பாலை முனையின் குமிழின்**
**புழற்கோட்டுத் தொடுத்த மரல்புரி நரம்பின்**
**வில்யாழ் இசைக்கும் விரல் ஏறி குறிஞ்சிப்" (பெரும்பாண்.178-182)**

என்ற அடிகள் புலப்படுத்தும்.

இசைக்கு மயங்காத உயிர்கள் இல்லை என்பது உலக வழக்கு. ஆயர்கள் தங்கள் கன்றுகளையும் ஆநிரைகளையும் மேய்ச்சல் தொழிலில் ஈடுபடுத்தும் போது பொழுதுபோக்குக்காக குழல் இசைப்பர். ஆயர்களின் குழல் இசைக்கு ஆநிரைகள் கட்டுப்பட்டன. ஆநிரைகளை நீர்பருகச் செய்விக்கும் பொழுதும் குழலோசை வழிநடத்தியாகச் செயல்பட்டுள்ளது. இதனை,

**"நீர்க்கியங்கு இனநிரைப் பின்றை வார்கோல்**
**ஆய்க்குழல் பாணியின் ஐதுவந்து இசைக்கும்" (அகம்.225:7-8)**

என்ற அடிகள் உணர்த்தும். ஆயர்கள் கன்றுகளையும், ஆநிரைகளையும் நீர்காட்டிவிட்டு அவற்றைக் கொன்றை மரங்களின் நிழலிலே இளைப்பாறவிட்டுக் குழலிசைப்பர். அவர்களின் குழலோசைக்கு நெல்லிக்கனியை உண்டு அசைபோட்டுக் கொண்டு இருக்கும் மான்களும் மயங்கி நிற்கும். இதனை,

**"பல்லான் கோவலர் கல்லாது ஊதும்**
**சிறுவெதீர்ந் தீங்குழற் புலம்புகொள் தெள்விளி**
**மையில் பளிங்கின் அன்ன தோற்றப்**
**பல்கோள் நெல்லிப் பைங்கால் அருந்தி**
**மெல்கிடு மடமரை ஓர்க்கும்" (அகம்.399:11-15)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**குழலிசை: பண்:**

யாழின் ஒரு பகுதி பண். முல்லைநில மக்களின் முல்லைப்பண் ‘சாதாரிப்பண்’ எனவும் அழைக்கப்பட்டது. துளைக்கருவிகளில் முதன்மையான குழல், முல்லை நிலத்தவரால் உருவாக்கப்பட்டு அதில் பலவகைப் பண்ணிசையும் இசைக்கப்பட்டன.

ஆயர்கள் குழலில் குறிஞ்சிப்பண், பாலைப்பண், முல்லைப்பண் ஆகியவற்றை இசைத்தனர். ஆயர்களின் பண்ணிசையில் ஆம்பல் பண் சிறப்புற்று விளங்கியது.

**ஆம்பல் பண்:**

ஆயர்களின் களவு ஒழுக்கத்தில் தலைவியால் இரவுக்குறி நிகழுமிடத்து ஊராரின் அலருக்கு அஞ்சி, தலைவன் யாரும் அறியாமல் வருகையில் ஆம்பல் பண்ணிசைத்து குறி செய்துள்ளனர். இதனை,

> **“ஆம்பற் குழலால் பயிர்பயிர் எம்படப்பைக்**
> **காஞ்சிக்கீழ்ச் செய்தேம் குறி”   (கலி.108:62-63)**

என்ற அடிகள் உணர்த்தும். களவுக் காலத்தில் இன்பம் நல்கும் ஆம்பல் பண் கார்கால மாலைப்பொழுதில் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்குத் துன்பத்தை மிகுவிப்பதாய் அமைகின்றது. இதனை,

> **“ஆ பெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇப்**
> **பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப**
> **ஆர்உயிர் அணங்கும் தென்இசை”   (அகம்.214:12-14)**

என்ற அடிகள் உணர்த்தும். ஆயர்களின் இசைக்கருவிகளில் குழல் கருவியானது கால்நடைகளை ஒன்று திரட்டவும், பொழுது போக்கவும், மாலை நேரங்களில் இசைத்து மகிழவும் பயன்பட்டுள்ளதை அறியமுடிகின்றது. தமிழ்மொழியைப் ‘பக்திமொழி’ என்பர். இறைவனையே ஏழிசையாய் இசைப்பயனாய்க் கண்டவர்கள் பழந்தமிழ் மக்கள் காடுறை உலகின் இறைவனாகிய மாயோனின் திருவுருவத்தில் குழல் முக்கிய அங்கம் பெறும். அக்குழல் கருவியை காட்டு மரங்களினால் தயாரித்து பண்ணிசைத்து மகிழ்ந்துள்ளனர்.

**கூத்துக்கலை:**

இயலும் இசையும் இணைந்து நிகழும் கூத்துக்கலை ஆயர்களிடம் காணப்பட்டுள்ளது. மயிலினங்களின் ஆடலுக்கு தோளிக்கூத்தை உவமையாகக்

குறிப்பிடுவர். தோள்களை இயக்கிப் பெண்கள் ஆடுகின்ற ஆட்டம் தோளிக்கூத்து ஆகும். ஆயமகளிர் இணைந்து தோளிக் கூத்தாடியதை,

> **"வைஎர் வால்எயிற்று ஒள்நுதல் மகளிர்**
> **கைமாண் தோளி கடுப்பப் பையென**
> **மயிலினம் பயிலும் மரம்பயில் கானம்"     (அகம்.344:4-6)**

என்ற அடிகள் புலப்படுத்தும்.

**குரவைக்கூத்து:**

குறிஞ்சி மக்களின் குரவைக்கூத்து முல்லைநிலத்து மக்களிடமும் காணப்பட்டுள்ளது. "குரவை என்பது முல்லை அல்லது குறிஞ்சிநில மகளிர் தம்முள் கைகோத்து ஆடும் கூத்து வகையாகும்."[36] இக்கூத்து மகளிர் எழுவர் அல்லது ஒன்பதின்மரால் கைகோத்து ஆடப்பெறும்."[37] முல்லை நிலத்தில் ஏறுதழுவலின் வெற்றியைக் கொண்டாட குரவைக் கூத்து இடம்பெற்றுள்ளது. ஏறுதழுவி வெற்றி பெற்ற ஆடவருடன் மகளிர் இணைந்து குரவைக் கூத்தாடுவர். இதனை கலித்தொகை,

> **"பண்அமை இன்சீர்க் குரவையுள் தெண்கண்ணித்**
> **திண்தோள் திறல்ஒளி மாயப்போர் மாமேனி**
> **அம்துவ ராடைப் பொதுவனோடு ஆய்ந்த**
> **முறுவலாள் மென்தோள்பா ராட்டிச் சிறுகுடி**
> **மன்றம் பரந்தது உரை"     (கலி.102:35-39)**

என்ற அடிகளால் உணர்த்தும். "தோளிக்கூத்து என்பது மகளிர் பலர் கூடிநின்று களித்தாடும் ஒருவகை வரிக்கூத்தாகும்."[38] குரவைக் கூத்தாடும் மகளிர் ஏறுகளைத் தழுவியடக்கிய ஆயர்குல இளைஞர்கள் அணிந்துள்ள மாலை, அவர்களின் தோளாற்றல், ஏறுகளை அடக்கிய அவர்தம் ஆண்மைச்செயல், ஆண்மையாளர்களாகிய அவர்களுக்கு மனைவியராகப் போகும் மங்கையரின் புன்முறுவல் தவழும் இன்முகங்கள், அவர்தம் மென்மையான தோள்கள் முதலியவற்றைச் சிறப்பித்துப்பாடுவர். இதனை முல்லைக்கலிப் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

ஆயர்குல மகளிர், தம்மை விரும்பும் ஆடவர் காலம் கடத்தாமல் ஏறுதழுவி வென்று மணமுடிக்க வேண்டும் என்பதையும் குரவையுள் பொருளாக அமைத்துப் பாடினர். இதனை,

**“அஞ்சார் கொலையேறு கொள்பவர் அல்லதை**
**நெஞ்சிலார் தோய்தற்கு அரிய உயிர்துறந்து**
**நைவாரா ஆயமகள் தோள்”　　(கலி.103:65-67)**

என்ற அடிகள் உணர்த்தும். ஆயமகளிர் விரும்பும் ஆயனின் வீரத்தையும், வீரமுடைய ஆயமகனையே ஆயமகளிர் மணப்பர் என்பதையும் குரவை பாடும்போதே வெளிப்படுத்தினர்.

“குரவைப்பாட்டில் தம்குலக் கடவுளாகிய திருமாலையும், அவர் உறையும் கானகத்தையும், தாம் வாழும் நாட்டை ஆட்சி செய்யும் பாண்டிய மன்னனையும் வாழ்த்திப் பாடுவதை ஆயமகளிர் மரபாய்க் கொண்டிருந்தனர்.”[39] இதனை,

**“குரவை தழீஇயாம் மரபுளி பாடித்**
**தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்**
**மாசில்வான் முந்நீர்ப் பரந்த தொன்னிலம்**
**ஆளுங் கிழமையொடு புணர்ந்த**
**எம்கோ வாழியர்இம் மலர்தலை உலகே”　(கலி.103:75-79)**

என்ற அடிகள் விளக்கும். “பாண்டிய மன்னனின் ஆட்சி சிறப்படைய ஆயமகளிர் வேண்டுவர்.”[40] இதனை,

**“தொல்கதிர்த் திகிரியாற் பரவுதும், ஒல்கா**
**உரும்உறழ் முரசின் தென்னவற்கு**
**ஒருமொழி கொள்கஇவ் உலகுடன் எனவே”　(கலி.104:77-79)**

என்ற அடிகள் உணர்த்தும். “ஏறுதழுவி வென்ற ஆய இளைஞரும், மகளிரும் கைகோர்த்துக் குரவைக் கூத்தாடி மகிழ்ந்ததையும், திருமணத்திற்குப்பின் மனைவியர் தம் கணவன்மாரின் கையொடு தம் கையைக் கோத்துக் குரவையாடி மகிழ்ந்ததையும், கலித்தொகை அடிகள் புலப்படுத்துகின்றன.”[41]

**விளையாட்டுகள்:**

ஆயர்குல மக்கள் பொழுது போக்கிற்காகவும், உடல் வலிமை பெறுவதற்காகவும் விளையாட்டினை மேற்கொண்டனர். ஆடவர் மேற்கொண்ட விளையாட்டுகளில் ஏறுதழுவல் முதன்மையானது. ஆயர்வாழ்வியலில் ஏறுதழுவல் என்பது அகம் சார்ந்த புறவிளையாட்டுகளில் ஒன்றாகும். களவு, கற்புமணமாய் மாறுவதற்கு ஏறுதழுவல் அடிப்படையான நிகழ்வாய் அமைந்தது. காட்டினை

இருப்பிடமாய்க் கொண்ட ஆயர்கள் தம் கால்நடைகளிடையே போரினைத் தோற்றுவித்து பொழுது போக்கினர் என்பதை உணரமுடிகின்றது.

**ஏறுகொள்வென்றி:**

தலைவியை விரும்பிய தலைவன் ஏற்றினைத் தழுவி வெற்றி பெறுவதை கொண்டாடி மகிழ்ந்தனர். ஏறுதழுவி எய்தும் வெற்றியைக் கூறுவது 'ஏறுகொள்வென்றி' என்கின்றது புறப்பொருள் வெண்பாமாலை. இதனை,

> **"குடைவரை ஏந்தியநம் கோவலனே கொண்டான்**
> **அடையவிழ் பூங்கோதை அஞ்சல் - விடையரவம்**
> **மன்றங் கறங்க மயங்கப் பறைபடுத்து**
> **இன்று நமர்விட்ட ஏறு"[42]**

என்ற அடிகள் விளக்கும்.

**தகர்வென்றி:**

ஆட்டுக்கிடாய்ப்போர் என்பது பழந்தமிழ் மக்களிடத்தில் காணப்பட்ட விளையாட்டுகளுள் ஒன்றாகும். போர்க்கிடாய்களைப் பொருதவிட்டு பொழுது போக்குவதில் ஆயர்களும் ஈடுபட்டனர். கடாவிடுதலின் வெற்றியைக் கூறுவது 'தகர்வென்றி' என்று புறப்பொருள் வெண்பாமாலை விளக்குகின்றது. இதனை,

> **"அருகோடி நீங்கா தணைதலும் இன்றித்**
> **திரிகோட்ட மாவிரியச் சீறிப் - பொருகளம்**
> **புக்கு மயங்கப் பொருது புறவாயை**
> **நக்குமாம் நல்ல தகர்"[43]**

என்ற அடிகள் உணர்த்தும். ஆயமகளிர் கழங்காடலில் விருப்பமுடையவர்கள். வளையலணிந்த வளைந்த முன்கைகளைக் கொண்ட ஆயமகளிர் கழங்காடியமையை,

> **"வணங்கிறை மகளிர் அயர்ந்தனர் ஆடும்**
> **கடங்குறழ் ஆலியொடு கதழுறை சிதறிப்"** **(அகம்.334:7-8)**

என்ற அடிகள் உணர்த்தும். "கழங்கு என்பதற்கு கழல், ஓராடல், கழற்சிக்கொடி, வெறியாட்டாளனாடல், கழற்காய் எனப் பல பொருள் நல்கின்றது தமிழ்மொழி அகராதி."[44] முல்லை நிலத்தில் கிடைத்த காய்களின் விதைகளையும், கற்களையும் கொண்டு ஆயமகளிர் கழங்காடல் மேற்கொண்டிருப்பர் என்பதை உணரமுடிகின்றது.

"கழங்கு என்பது கழற்சிக்காயைக் குறிக்கும் எனவும், இக்கழற்சிக் காயைக் கொண்டு பெண்கள் விளையாடும் விளையாட்டு கழங்காடல் எனவும் குறிக்கப்பட்டது என்கின்றது தமிழ்ப் பேரகராதி."[45]

"கழங்குச் செடியின் விதைகளைக் கொண்டு பெண்கள் விளையாடும் விளையாட்டு கழங்காடல் எனப் பெயர் பெற்றதாகவும், செல்வக்குடிகளில் பிறந்த பெண்கள் பொன்னாலாகிய கழங்குகளைக் கொண்டு கழங்காடியதாகவும் ஆ.இராமகிருட்டிணன் குறிப்பிடுகின்றார்."[46]

மணலில் வீடு கட்டி விளையாடும் சிற்றில் இழைத்தல் ஆயமகளிரின் விளையாட்டுகளுள் ஒன்றாக விளங்கியுள்ளது. தோழியருடன் ஆற்றங்கரை மணலில் விளையாடச் செல்லும் ஆயமகளிர் அங்கு வீடு கட்டி விளையாடி மகிழ்ந்துள்ளனர். இதனை,

**"வரிமணல் முன்துறைச் சிற்றில் புனைந்த"     (கலி.114:15-16)**
**"முற்றிழை ஏஎர் மடநல்லாய்! நீயாடும்**
**சிற்றில் புனைகோ சிறிது? என்றான்"     (கலி.111:8-9)**

என்ற அடிகள் விளக்கும். சிற்றில் அமைத்து விளையாடிய ஆயமகளிரின் குழந்தை மனத்தை உணரமுடிகின்றது.

"சிற்றில் என்பது சிறுகுடிலைக் குறிக்கும் எனவும், சிறுமியர் கட்டி விளையாடும் மணல் வீட்டிற்குச் சிற்றில் என்னும் பெயர் தோன்றியதாகவும் தமிழ்ப் பேரகராதி குறிப்பிடுகின்றது."[47]

"சிற்றில் என்பது மணலால் கோலும் விளையாட்டு வீடு எனப் பொருள் உரைத்துள்ளார் பெருமழைப்புலவர்."[48]

ஆயமகளிர் சோலைகளுக்குள் புகுந்து மலர் பறித்து விளையாடி மகிழ்ந்தனர். காட்டில் கிடைத்த மலர்களனைத்தையும் மாலைகளாகத் தொடுத்து சூடிக்கொண்டு விளையாடினர். இதனை,

**"காயா, கொன்றை, நெய்தல், முல்லை**
**போதவிழ் தளவமொடு பிடவலர்ந்து கவினிப்**

**பூவணி கொண்டன்றாற் புறவே**

**பேரமர்க் கண்ணி! ஆடுகம் விரைந்தே!" (ஐங்.412:1-4)**

என்ற அடிகள் புலப்படுத்தும். கலித்தொகையும் ஆயமகளிர் புனலாடி மலர்பறித்து விளையாடியதை,

**"பல்கால்யாம் கான்யாற்று அவிர்மணல் தண்பொழில்**

**அல்கல் அகலறை ஆயமொடு ஆடி" (கலி.113:23-24)**

என்ற அடிகளால் உணர்த்துகின்றது.

பருவம் வாய்த்த ஆயமகளிர் தம் வீடுகளின் முற்றங்களிலே சிறு பிள்ளைகளைப் போலக் குதித்தும் விளையாடியுள்ளனர். அம்மகளிர் குதித்து விளையாடிய பொழுது முற்றத்தில் அமர்ந்திருந்த புறாக்கள் வேறு இடங்களுக்குச் சென்று அமர்ந்தன. இதனை,

**"மனைஉறை புறவின் செங்காற் சேவல்**

**துணையொடு குறும்பறை பயிற்றி மேல்செல**

**விளையாடு ஆயத்து இளையோர்க் காண்தொறும்**

**நம்வயின் நினையும் நல்நுதல் அரிவை" (அகம்.254:5-8)**

என்ற அடிகள் புலப்படுத்தும்.

ஆயமகளிரும் ஆடவரும் சேர்ந்து சுனைநீராடி மகிழ்ந்தும் உள்ளனர். கால்நடை மேய்ச்சலுக்குச் செல்லும் ஆடவரும் மகளிரும் சுனைகளில் நீராடிய பின்னரே சோலைக்குள் புகுந்து மலர் பறித்தும் விளையாடியுள்ளனர். இதனை,

**"பிடிதுஞ்சு அன்ன அறைமேல, நுங்கின்**

**தடிகண் புரையும் குறுஞ்சுனை ஆடிப்**

**பனிப்பூந் தளவொடு முல்லை பறித்துத்" (கலி.108:40-42)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**தொழில்கள்:**

சங்க கால மக்கள் தாங்கள் வாழும் இடத்திற்கு ஏற்பவும், அப்பகுதியின் பொருளாதாரச் சூழ்நிலைக்கு ஏற்பவும் சாதகமான தொழில்களை மேற்கொண்டுள்ளனர். "தொழில் என்பதற்கு வினை என்று சங்க இலக்கியப் பொருட்களஞ்சியமானது பொருள் தருகின்றது."[49]

“பணி செய்தல், வேலை பார்த்தல், செயல், செய்கை, காரியம், அறவினை, தருமகாரியம் என தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம் பொருள் கூறுகின்றது.”[50]

“தொழில் என்பதற்கு அலுவல், செயல், தன்மை, வினைச்சொல், வேலை என கழகத் தமிழ் அகராதி பொருள் தருகின்றது.”[51]

“வேலை, உத்தியோகம், சாமர்த்தியம், தன்மை, கலாச்சாரம், தந்திரம் என பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி பொருள் தருகின்றது.”[52]

இயற்கைச் சூழலை மையமாகக் கொண்ட திணைச் சமுதாயங்களில் தொழில்களும் வேறுபட்டன. அவற்றுள் வாணிகம், உழவு, நெசவு, தச்சு, பொன் அணி வேலைகள், இரும்பு வேலைகள் வீட்டுக் கட்டுமானப் பணிகள், கப்பல், படகு கட்டுதல், வேட்டையாடுதல், ஆநிரை மேய்த்தல், மீன் பிடித்தல், தினைப்புனம் காத்தல் முதலியன குறிப்பிடத்தக்கனவாகும்.

ஆயர்குல ஆடவரும் மகளிரும் பல்வேறு வகையான தொழில்களை மேற்கொண்டிருந்தனர். அவர்கள் மேற்கொண்ட கால்நடை பராமரிப்பானது ஆயர்களின் பொருளாதாரத்திற்கு அடிப்படைக் காரணமாய் அமைந்தது.

முல்லை நிலத்து மக்களின் முதன்மைத் தொழில் ஆடு, மாடு மேய்த்தலாகும். உழவுத்தொழில், வாணிகம் முதலிய தொழில்களையும் மேற்கொண்டிருந்தனர். ஆயர் கால்நடை வளர்ப்பினால் பெரும் பலனடைந்தனர். மேலும் கால்நடைகளிடமிருந்து பெறப்படும் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் போன்றவற்றையும் விற்பனை செய்தும் தம் வாழ்வின் பொருளாதாரத்தை மேம்படுத்திக் கொண்டனர்.

ஆயர்வாழ்வியலில் அவர்கள் மேற்கொண்ட தொழில் இன்பம் பயப்பதாய் அமைந்தது. ஆயர்கள் கால்நடை வளர்ப்பை தொழிலாகக் கருதாமல் இன்பமான பொழுதுபோக்காய்க் கருதினர். கால்நடைப் பராமரிப்பில் ஈடுபட்டு எளிமையான வாழ்விலேயே இன்பம் கண்டவர்கள் ஆயர்கள். இத்தகைய ஆயர்களின் சிறப்பினைச் சிலப்பதிகாரம்,

**“ஆகாத் தோம்பி ஆப்பயன் அளிக்கும்**
**கோவலர் வாழ்க்கை ஓர் கொடும்பா டில்லை”[53]**

என்ற அடிகளால் புலப்படுத்தும்.

கார்கால மழையினால் ஏற்பட்ட பெருவெள்ளத்தை இடையர்கள் வெறுத்தனர். வெள்ள நீரிலிருந்து பசு, ஆடு, எருமைகளைப் பாதுகாப்பதற்காக மேடான நிலங்களுக்குச் சென்றனர். தங்களது இருப்பிடங்களை விட்டு கால்நடைகளின் துன்பம் களைவதற்காக வேற்றிடங்களுக்குச் சென்றனர். மழைநீரினால் நனைந்த உடம்பினைக் கொண்ட ஆயர்கள், குளிரிலிருந்து காத்துக்கொள்ள கைகளை நெருப்பருகில் காட்டி கன்னங்களில் வைத்துக் கொண்டனர். கடுங்குளிரால் அவர்களின் பற்கள் பறையடித்துக் கொண்டன. அத்தகைய கடுங்குளிரிலும் ஆயர்கள் ஆநிரைகளைப் பராமரித்து வளர்த்தனர். இதனை,

**“ஆர்கலி முனைஇய கொடுங்கோல் கோவலர்**
**ஏறுடை இனநிரை வேறுபுலம் பரப்பி**
**புலம்பெயர் புலம்பொடு கலங்கி கோடல்**
**நீடுஇதழ்க் கண்ணி நீர்அலைக் கலாவ**
**மெய்க்கொள் பெரும்பனி நலிய பலருடன்**
**கைக்கொள் கொள்ளியர் கவுள்புடையூஉ நடுங்க”      (நெடுநல்.3-8)**

என்ற அடிகள் உணர்த்தும். கால்நடை பராமரிப்புடன் பிறதொழில்களையும் ஆயர்கள் மேற்கொண்டனர்.

**ஆடவர் தொழில்கள்:**

ஆயர்குல ஆடவர் ஆடு மாடு மேய்த்தலை முதன்மைத் தொழிலாகவும் அதற்கடுத்த நிலையில் உழவுத் தொழிலையும் மேற்கொண்டனர். ஆயர்களின் முல்லை நிலமானது மழைவளம் பெற்றுக் காணப்பட்டது. கால்நடைகளின் மேய்ச்சலுக்கு முல்லைநிலம் ஏற்றதாய் அமைந்தது. ஆயர்களும், ஆடு மாடுகளையே பெருஞ்செல்வமாகப் போற்றினர். “மாடு என்னும் சொல்லுக்குச் செல்வம் என்று பொருள் தருகின்றது தமிழ்ப் பேரகராதி.”[54] ஆயர்கள் பசுக்கூட்டங்களை மேய்ப்பதற்கு முல்லைநிலம் ஏற்றதாய் அமைந்திருந்ததால் அவர்களிடையே பசு வளர்ப்பும் பராமரிப்பும் மிகுந்து காணப்பட்டது. இதனை,

**“முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்**
**குறும்பொறை மருங்கின் நறும்பூ அயரப்**
**பதவு மேயல் அருந்து மதவுநட நல்ஆன்” (அகம்.14:7-9)**

என்ற அடிகள் புலப்படுத்தும்.

கால்நடை மேய்ச்சலுக்குச் செல்லும் ஆயர்கள் கைகளில் வளைந்த கோலைக் கொண்டிருந்தனர். இலக்கியங்கள் இதனை ‘கொடுங்கோல்’ என்று சுட்டுகின்றன. இதனை,

**“கொடுமடி உடையர் கோற்கைக் கோவலர்” (அகம்.54:10)**

என்ற அடி சுட்டும். ஆயர்கள் கையில் வைத்திருந்த கோல் பசுக்களை துன்புறுத்துவதற்காக அன்று. உயரமான மரங்களின் இழை தழைகளை வளைப்பதற்காகவே அக்கோலைப் பயன்படுத்தினர். “ஆநிரை மேய்க்கும் ஆயர்கள் கைகளில் கோல் வைத்திருந்தமையை இலக்கியங்கள் பலவிடத்தும் சுட்டுகின்றன.”[55] மேயச்சென்ற பசுக்களை மாலைக் காலத்தில் ஊருக்குள் கொண்டு வந்து அமர்த்தும் இடத்திற்கு ‘மன்றம்’ என்று பெயர். “இம்மன்றத்தையுடையவராயிருத்தலால் இடையர்கள் மன்றாடிகள் எனவும் அழைக்கப்பட்டுள்ளனர்.”[56]

வேளாண்மைத் தொழில் மேற்கொள்பவர்கள் தம் வயல்களில் ஆட்டுக் கிடைகளை அமர்த்த ஆயரின் உதவியை நாடுவர். “நடுகைக்குரிய வயல்களில் உழவுப்பணி தொடங்கும் முன்னரும் முடிந்த பின்னரும் நிலத்துக்கு வளம் சேர்க்க உரம் வைத்தல் இயல்பு. உழவுப் பணிக்கு முன்னர் ஆட்டுக்கிடை வைத்தல், மாட்டுக்கிடை வைத்தல் ஆகியவற்றினாலும் உழவுக்குப் பின்னர் நிலத்தில் பசுந்தழை உரம் போடுவதன் மூலமும் நிலத்துக்கு வளம் சேர்க்கப்பட்டது.”[57]

புன்செய் நிலத்தில் எருவிற்காக ஆட்டுக்கிடையை நிறுத்தி இடையர் காவலிருந்ததை இடியுடன் மழை பெய்யும் நேரத்திலும் ஆடுகளைக் கவனமாகக் காவல் புரியும் இடையனின் தோளின் ஒருபக்கம் சோற்றுப் பானை வைத்த உறியும், மறுபக்கம் தோல் படுக்கையும் காணப்பட்டன. ஆயர்கள் ஆடுகளை ஓரிடத்தில் சேர்க்கவும், ஓநாய்களிடமிருந்தும் நரிகளிடமிருந்தும் பாதுகாக்கவும் ‘சீழ்க்கை’ ஒலியை

எழுப்பினர். வாயினை மடித்து எழுப்பும் சீழ்க்கை ஒலியைக் கேட்டு சிறு விலங்கினங்கள் பயப்படும். இதனை,

> **"மடிவிடு வீளை கடிதுசென்று இசைப்பத்**
> **தெறிமறி பார்க்கும் குறுநரி வெரீஇ**
> **முள்ளுடைக் குறுந்நூறு இரியப் போகும்" (அகம்.274:9-11)**

என்ற அடிகள் உணர்த்தும்.

'சீழ்க்கை ஒலி' இடையரின் மடித்த வாயால் உருவாக்கப்படுவதால் 'மடிவாய்க் கோவலர்' எனவும், ஆட்டிடையர் எனவும் அழைக்கப்பட்டனர். இவ்வொலியினை "மடிவிடுவீளை" என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன. சீழ்க்கை ஒலி சிறு விலங்கினங்களை அஞ்சச் செய்யும், சீழ்க்கை ஒலி கேட்டு குறுமுயல்கள் அஞ்சுவதை,

> **"மடிவிடு வீளை வெரீஇ குறுமுயல்**
> **மன்ற இரும்புதல் ஒலிக்கும்" (அகம்.394:14-15)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**ஆயமகளிர் தொழில்கள்**

ஆயர்குல மகளிர் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டனர். மகளிர் காலையில் எழுந்தது முதல் இரவு வரையிலும் பல பணிகளைப் புரிந்தனர். "ஆயர்குல மகளிர் அதிகாலையில் எழுந்து தயிர்கடைவர்"[58] "தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்த மோரையும், நெய்யையும் வேற்றுப்புல மக்களிடம் விற்பனை செய்வது அவர்தம் வழக்கமாக இருந்தது."[59] "கன்றுகளைக் கொட்டிலிலே கட்டிப் பாதுகாப்பதும், அவற்றை மேய்ப்பதும்"[60], "பாலைக் கறக்கக் கறவைக்கலம் கொண்டு செல்வதும், கறந்த பாலைப் பத்திரமாகக் கொண்டு வந்து வீட்டில் பாதுகாப்பதும்"[61], "புனத்தில் பயிர்த்தொழில் மேற்கொண்டிருக்கும் பெற்றோர்க்கும், உடன்பிறந்தோர்க்கும் உணவு எடுத்துக் கொண்டு செல்வதும்"[62] ஆயமகளிர் மேற்கொண்ட தொழில்களாகும்.

**தயிர்கடைதல்:**

ஆயமகளிர் வைகறைப் பொழுதில் துயிலெழுந்து தயிர்கடையும் மத்திலே கயிற்றைச் சுற்றி வலிய இழுத்துத் தயிர் கடைவர். மகளிர் தயிர் கடையும் நிகழ்வை,

**“நள்ளிருள் விடியற் புள்ளெழப் போகிப்**
**புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி**
**ஆம்பி வான்முகை அன்ன கூம்புமுகிழ்**
**உறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து”**

**(பெரும்பாண்.155-158)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**மோர் விற்றல்:**

தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுக்கப்பட்ட மோரைத் தம் தலையிலே சுமந்து சென்று வேற்றுப்புல மக்களுக்கும் விற்பனை செய்தனர். இதனை,

**“அகல்ஆங்கண் அளைமாறி அலமந்து பெயருங்கால்”**

**(கலி.108:5)**

**“அளைமாறிப் பெயர்தருவாய் அறிதியோ? அஞ்ஞான்று”**

**(கலி.108:25)**

என்ற அடிகள் விளக்கும். மோருடன் நெய்யையும் கொண்டு சென்று விற்று வருவாய் ஈட்டியுள்ளனர் ஆயமகளிர்.

**ஆயமகளிர் அறிந்த பண்டமாற்று முறை வணிகம்:**

சங்ககால மக்கள் தங்கள் நிலத்தில் கிடைத்த பொருட்களை மற்றொரு நிலத்து மக்களிடம் கொடுத்து அதற்குப் பதிலாக வேறொரு பொருளைப் பெற்றுக் கொண்டனர். பழந்தமிழர் அன்றாடத் தேவையான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலானப் பொருட்களைக் காசு கொடுத்து வாங்காமல் பண்டமாற்று முறையிலேயே வாங்கிப் பயன்படுத்தினார்கள். பண்டமாற்று என்பது ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக இன்னொரு பொருளைக் கொள்வது. இன்றைய வணிகவியலார் பண்டமாற்றினை ‘மதிப்பு’ என்னும் சொல்லில் குறிக்கின்றனர். ஆயமகளிர் தங்கள் குடும்பத்தின் பொருளாதாரத்தை உயர்த்துவதற்காக மோரினைப் பானையில் ஊற்றி வேறிடம் சென்று விற்றுப் பண்டமாற்றாக நெல் முதலிய உணவுப் பொருள்களைப் பெற்றனர். நெய் விற்ற பணத்திற்கு பொன் முதலிய பொருள்கள் வேண்டாம் என்று மறுத்து எருமையையும், பசுக்களையும் அவற்றின் கன்றுகளோடு பெற்றிருக்கின்றாள் ஆயமகள். இதனை,

**“அளைவிலை உணவின் கிளைஉடன் அருந்தி**
**நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்**
**எருமை, நல்ஆன், கருநாகு பெறூஉம்”**

**(பெரும்பாண்.163-165)**

என்ற அடிகள் உணர்த்தும். பொன் முதலிய பொருட்களைக் காட்டிலும் பசு, எருமை, அவற்றின் கன்றுகளையே பண்டமாற்றுப் பொருளாகப் பெற்றுள்ளனர். எதிர்காலத்தில் தொழிலை விரிவுபடுத்த மூலதனம் தேவைப்படும். கால்நடை வளர்ப்பினை விரிவுபடுத்த பணத்தைவிட கால்நடைகளையே பெற்றுக் கொண்ட ஆயமகளிர் பொருளாதாரச் சிந்தனை நிறைந்தவராய்க் காணப்படுகின்றனர்.

**உழவுத் தொழில்:**

ஆயர்கள் கால்நடை வளர்ப்பிற்கு அடுத்தபடியாக உழவுத்தொழிலை மேற்கொண்டனர். உழவுத்தொழிலின் படிநிலைகளை முறையாக அறிந்திருந்தனர். ஈரமான நிலத்தைப் புழுதி தோன்றுமாறு நன்கு உழுதனர். உழுது பண்படுத்தப்பெற்ற நிலத்தில் விதை விதைத்தனர். பயிர்களோடு சேர்ந்து வளரும் களைகளைக் களைந்தனர். பயிர்கள் நன்கு செழித்து விளைந்ததும், விளைந்த தானியங்களை அறுவடை செய்தனர். இதனை,

**“வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவற்**
**கார்ப்பெயற் கலித்த பெரும்பாட் டீரத்துப்**
**பூழி மயங்கப் பலவுழுது வித்திப்**
**பல்லி யாடிய பல்கிளைச் செவ்விக்**
**களைகால் கழாலிற் றோடொலிபு நந்தி**
**மென்மயிற் புனிற்றுப்பெடை கடுப்ப நீடிக்**
**கருந்தாள் போகி யொருங்குபீள் விரிந்து**
**கீழு மேலு மெஞ்சாமைப் பலகாய்த்து**
**வாலிதின் விளைந்த புதுவர கரியத்**
**தினைகொய்யக் கவ்வை கறுப்ப வவரைக்**
**கொழுங்கொடி விளக்காய் கோட்பத மாக” (புறம்.120:1-11)**

என்ற அடிகள் விளக்கும். “ஆயர்கள் மேற்கொண்ட உழவுத்தொழில் முறைகளை இலக்கியங்கள் பலவிடத்தும் எடுத்துக் காட்டுகின்றன.”[63]

**விதை விதைத்தல்:**

உழவுப்பணியின் ஆயத்தமாக மழைப்பொழிவுக்குப் பின்னர் நாற்று விளைவிப்பதற்கு நாற்றாங்காலை நன்கு உழுது பக்குவப்படுத்துவர். பழந்தமிழர் "ஏர்பூட்டி உழுவதற்கு நற்சகுனம் பார்த்தனர். இதற்கு 'நாளேரிடல்' அல்லது 'பொன்னேர் பூட்டுதல்' என்று பெயர்."[64]

ஏர்பூட்டி உழுத பின்னர் நீரும் சேறுமாக உள்ள நாற்றங்கால் விதைப்புக்கு ஏற்ற வகையில் பண்படுத்தப்படும். இதற்கு 'தொளிகலக்குதல்' என்று பெயர். கலக்கப்பட்ட நிலம் நிலமட்டப்பலகை கொண்டு சமப்படுத்தப்படும். இதற்கு பரம்படித்தல் என்று பெயர். இவ்விதம் பக்குவப்படுத்தப்பட்ட நிலத்தில் விதை தெளிப்பர். முல்லை நிலத்து ஆயர்கள் பலமுறை உழுது பண்பட்ட பழங்கொல்லையில் வரகினை விதைத்தனர். இதனை,

> **"விதையர் கொன்றை முதையல் பூழி**
> **இடுமுறை நிரப்பிய ஈர்இலை வரகின்"** (நற்.121:1-2)

என்ற அடிகள் உணர்த்தும். "உணவிற்காக முல்லை நிலத்தினர் சாமை, வரகு, தினை, கொள், எள், அவரை, முதிரை போன்ற தானியங்களை விதைத்துள்ளனர்."[65] இதனை,

> **"கருங்கால் வரகே இருங்கதிர்த் தினையே**
> **சிறுகொடிக் கொள்ளே பொறிகிள ரவரையொடு**
> **இந்நான் கல்லது உணாவு மில்லை"** (புறம்.335:4-6)

என்ற அடிகள் உணர்த்தும்.

**களைகட்டல்:**

பண்படுத்தப்பட்ட நிலத்தில் விதைக்கப்பட்ட விதைகளானவை நீர்வசதியால் நன்கு தளிர்விட்டு வளருகையில் அவற்றினிடையே தேவையற்ற புல் வகைகளும் வளரும். அத்தகைய புல்களைக் களைந்து பயிர் வளர்ச்சியை துரிதப்படுத்தும் செயலே 'களைகட்டல்' எனப்படுகின்றது.

உழுது பயிரிடப்பட்ட வயல்களில் களைகளும் சேர்ந்து வளர்ந்தன. ஆயர்கள் மழையைப் பொருட்படுத்தாது பனங்குடையைத் தலையில் கவிழ்த்துக் கொண்டு 'களைகடிபறை' எனப்பட்ட முரசு முழங்க களைகளை வேரோடு வளைத்துப்

பறித்துள்ளனர். முறையான வேளாண் படிநிலையைக் கையாண்டதால் முல்லைநில வயல்களில் வரகுக் கதிர்கள் விளைந்து நின்றன எனத் தெரியவருகின்றது. இதனை,

**"கறங்குபறை சீரின் இரங்க வாங்கி**
**களைகால் கழீஇய பெரும்பீபன வரகின்**
**கவைக்கதிர் இரும்புறம் கதூஉ உண்ட**
**குடுமி நெற்றி நெடுமாத் தோகை**
**காமர் கலவம் பரப்பி ஏமுறக்**
**கொல்லை உழவர் கூழ்நிழல் ஒழித்த**
**வல்லிலைக் குருந்தின் வாங்குசினை இருந்து" (அகம்.194:8-14)**

என்ற அடிகள் விளக்கும்.

**அறுவடை செய்தல்:**

ஆயர்கள் பலரும் அறிந்து பயிர் செய்து படிநிலைகளை முறையாகக் கையாண்டு விளைச்சலில் லாபம் கண்டனர். தானியங்களை அறுவடை செய்ய ஆயர்கள் ஆரவாரத்துடனும் மகிழ்ச்சியுடனும் சென்றனர்.

"ஆயர்களின் அறுவடை கால ஆரவார மிகுதியால் அங்கு வாழ்ந்த பறவையினங்கள் அஞ்சி ஓடின."[66] இதனை,

**"உடுப்பு முகமுழுக் கொழுமூழ்க ஊன்றித்**
**தொகுப்பு எறிந்து உழுத துளர்படு துடவை**
**அரிபுகு பொழுதின் இரியல் போகி … …**
**… … … … … … … … … … …**
**… … … குறும்பூழ் கச்சி சேக்கும்" (பெரும்பாண்.200-205)**

என்ற அடிகள் உணர்த்தும்.

**ஆயர்களின் தொழில்சார் கருவிகள்:**

ஆயர் ஆநிரை மேய்க்குங்கால் தம் கைகளில் ஊன்றுகோலுடன் சில தொழிற்சார்ந்த கருவிகளையும் வைத்திருந்தனர். பால் கறப்பதற்குப் பயன்படுத்தப்படும் கலம், 'கறவைக்கலம்' எனப்பட்டது. பால் கறப்பதற்கு முன்னர் இக்கலம் பால்பற்று இன்றித் தூய்மை செய்யப்பட்டிருக்கும். கறத்தற்கு அரியவாய் முரட்டுத்தன்மை வாய்ந்த பசுக்களிடம் பால் கறப்பதற்காக 'கழு' எனும் கருவியைப் பயன்படுத்தினர். மாடுகளுக்குச் சூடு போடும் வழக்கம் பின்பற்றப்பட்டது. அதற்குப் பயன்படுத்தும்

கோலுக்குச் ‘சூட்டுக்கோல்’ என்று பெயர். ஒரு பெரிய கழியில் கறவைக் கலங்கள் வைத்த உறி, தோற்பை, கழு, சூட்டுக்கோல் முதலியவற்றை ஒரு பையில் இட்டுச் சுருக்கி அதனை ஆயர் தோள்களில் தொங்கவிட்டிருந்தனர். இதனை,

**“கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்**
**இமிழிசை மண்டை உறியொடு தூக்கி” (கலி.106:1-2)**

என்ற அடிகள் விளக்கும்.

கால்நடைப் பராமரிப்பைத் தவிர வேறு தொழில் அறியாத இடையர் என்பதை “கல்லாக் கோவலர்”[67] என இலக்கியங்கள் சுட்டினாலும், ஆயர்கள் கால்நடைப் பொருளாதாரத்தை மட்டுமே அல்லாது உழவுத் தொழிலையும் மேற்கொண்டுள்ளனர். “முல்லைநில மக்கள் சிறந்த உழவர்களாகவும் இருந்துள்ளனர். சில ஆயர்குடியினர் தோட்டப் பயிர்களை மிகுதியாக விளைவித்ததால் மானுடவியலார் இவர்களைத் ‘தோட்டப்பயிரிடுவோர்’ எனக் குறிப்பிட்டனர் என்கின்றார் பக்தவத்சல பாரதி.”[68]

**தொகுப்புரை:**

- அகமும் புறமும் வாழ்வின் இரு கண்களாய்க் கருதி வாழ்ந்தவர்கள் அற்றைநாள் ஆயர் என்பதை அறியமுடிகின்றது.
- முல்லை எனும் அகத்திணைக்கு மண்ணாசை மிகுந்த அரசனுடன் மற்றோர் அரசன் பிறர்அஞ்சும்படி போர்புரியும் வஞ்சித்திணை புறத்திணையாவதை அறியமுடிகின்றது.
- சங்ககால ஆயர்களின் அகமும் புறமும் இணைந்த வாழ்வியலை விளக்கும் ஒப்பற்ற நூலாக முல்லைப்பாட்டு விளங்குவதை உணரமுடிகின்றது.
- முல்லைப்பாட்டின் வழி போர்ப் பாசறைகள், போர்க்களத்தில் இடம் பெறுவோர் போர்க்கள நிகழ்வுகள் முதலானவற்றை அறியமுடிகின்றது.
- போர்க்களத்தில் மெய்க்காப்பாளர்கள், ஊமை மிலேச்சர்கள், நாழிகைக் கணக்கர்களுடன் இரவு நேரங்களில் விளக்கு ஏந்திய கைகளுடன் நின்ற பெண்களையும் முல்லைப்பாட்டு எடுத்துக் காட்டுகின்றது.

- சங்ககால ஆயர்களிடம் பழக்க வழக்கமும் நம்பிக்கையும் நிறைந்து காணப்படுகின்றது.
- இறைவழிபாடு நிறைந்து காணப்பட்ட ஆயர்களின் வாழ்வியலில் முதன்மைத் தெய்வமாக திருமால் விளங்குவதை அறியமுடிகின்றது.
- இல்லுறை வழிபாடு, காமன் வழிபாடு, பெண்தெய்வ வழிபாடும் இவர்களிடம் காணப்படுவதை அறியமுடிகின்றது.
- ஆயர்களின் வழிபாட்டுப் பொருளாக நெல்லும், மலரும் முதன்மை பெறுவதை அறியமுடிகின்றது.
- பெண்கள் இல்லுறை வழிபாட்டில் நெய்விளக்கு ஏற்றுவதையும், காமன் வழிபாட்டில் பாலினைப் படைத்தும், பெண் தெய்வத்திற்குப் பால் சோற்றினைப் படைத்தும் வழிபடுவதை அறியமுடிகின்றது.
- திருமண ஏற்பாட்டில் வீட்டின் முற்றத்தில் புதுமணல் பரப்பி, அதில் பெண் எருமைக் கொம்பினை நட்டு வழிபட்டதையும் அறியமுடிகின்றது.
- ஆயர்களின் வாழ்வியலில் நிமித்தம் (சகுனம்) பார்ப்பதும், நற்சொல் (விரிச்சி) கேட்பதும் நம்பிக்கை சார்ந்த நிகழ்வுகளாக அமைவதைக் காணமுடிகின்றது.
- கண்துடித்தல், காக்கை கரைதல், பல்லி ஒலித்தல், தவளை, தேரைகளின் ஒலி குழலோசை, கிளியின் மொழி முதலியவற்றில் நிமித்தம் காண்பதை அறியமுடிகின்றது.
- விரிச்சி (நற்சொல்) கேட்டல் ஆயர்களிடம் காணப்பட்ட வரவு குறித்த நம்பிக்கையாகும். தலைவனின் வரவை எண்ணி வருந்தும் தலைவியின் மனநிலையைத் தேற்றுவதற்காக மேற்கொள்ளும் வழிபாட்டு முறை என்பதை உணரமுடிகின்றது.

- சங்ககால ஆயர்களின் ஒப்பனையில் இயற்கைப் பொருள்கள் மட்டுமே பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. காடுகளில் கிடைத்த நறுமணமிக்க மலர்களான காயா, குருந்தம், கொன்றை, சுரபுன்னை, பாங்கர், முல்லை, பிடவம் முதலிய மலர்களால் தங்களை அழகுபடுத்திக் கொண்டமையை அறியமுடிகின்றது.
- ஆயர்குலப் பெண்கள் சூடிய முல்லை மலரானது கற்பின் குறியீடாகக் கருதப்பட்டது புலனாகின்றது.
- ஆயமகளிர் தம் கூந்தலில் சூடிய மலர்களை ஆடவர் மாலையாகத் தொடுத்து கழுத்தில் சூடிக்கொண்டனர். இதன்வழி ஆடவர்களுக்கும் மலர்மாலை அணிவதில் விருப்பம் இருந்தமையை அறியமுடிகின்றது.
- ஆயர்கள் கூந்தல் நலம் பேணுவதில் கவனமாக இருந்துள்ளனர். கால்நடைகளிடமிருந்து கிடைக்கும் பால் மற்றும் நெய் முதலியவற்றை கூந்தலில் தடவியதை அறியமுடிகின்றது.
- எளிதாகக் கிடைத்த ஆரோக்கியமான இயற்கைப் பொருட்களைப் பயன்படுத்தி அழகு நலம் காத்துள்ளமையை உணரமுடிகின்றது.
- ஆயமகளிர் தலைவனுடன் இருக்கும் வேளையில் தங்களை அணிகலன்களால் அலங்கரித்துக் கொள்வதும், தலைவனின் பிரிவின் போது புனையா ஓவியமாய்க் காட்சியளிப்பதும் இவர்களின் அன்புநிறைந்த உள்ளத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றது.
- அணிகலன்கள் விலையுயர்ந்த உலோகத்தாலும், கற்பனை நயம் நிறைந்த நுட்பமான வடிவமைப்புடனும் அமைந்திருந்ததை அறியமுடிகின்றது.
- ஆயர்களின் பொழுதுபோக்கு பறை, யாழ், குழல் ஆகியவற்றின் மூலம் இசை எழுப்புவதாய் அமைந்ததை உணரமுடிகின்றது.
- அற்றைநாள் ஆயர்களின் விளையாட்டு வீரம் சார்ந்ததாகவும், பொழுதுபோக்கு கலை சார்ந்ததாகவும் திகழ்ந்ததை அறியமுடிகின்றது.

- காடும் காடு சார்ந்த முல்லைநிலப் பகுதியில் கால்நடைப் பராமரிப்பே முக்கியத் தொழிலாகக் காணப்பட்டது. ஆண்கள் கால்நடை மேய்ப்பதையும் பெண்கள் மோர், நெய் விற்பதையும் அடிப்படைத்தொழிலாகவும் கொண்டிருந்ததை அறியமுடிகின்றது.
- கால்நடை வளர்ப்பில் வாழ்வாதாரம் கண்ட ஆயர்கள் உழவுத் தொழிலின் படிநிலைகளையும் முறையாகத் தெரிந்து பயிர் உற்பத்தி மேற்கொண்டதையும் உணரமுடிகின்றது.
- உழவுத்தொழில் மேற்கொண்டதால் முல்லை நிலத்தினரை தோட்டப்பயிரிடுவோர் என்று குறிப்பிட்டிருப்பதையும் அறியமுடிகின்றது.
- ஆயர்கள் மேற்கொண்ட தொழிலுக்கு ஏற்ப நுட்பமான தொழிற் கருவிகளைப் பயன்படுத்தியிருப்பது அவர்களின் தொழிற்சார் அறிவைப் புலப்படுத்துகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. திருக்குறள்: 742.
2. சிலப்பதிகாரம், நீர்ப்படைக்காதை, 151-152.
3. ந.மு.வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), சிலப்பதிகாரம் வஞ்சிக்காண்டம், ப.97.
4. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.985.
5. மேலது., ப.985.
6. சீ.வசந்தா, காப்பியங்களில் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.23.
7. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.1260.
8. பொற்கோ, பண்பாட்டுக் கருத்தோட்டம், ப.13.
9. பாஸ்கல் கிஸ்பர்ட், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், பக்.232-234.
10. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.1261.
11. மு.சண்முகம்பிள்ளை, இளம்பூரணம், தொல்.பொருள்.அகத்.20.
12. சாமி.சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப.19.
13. சிங்காரவேலு முதலியார், அபிதானசிந்தாமணி, ப.3168.
14. மேலது., ப.3175.
15. சிலப்பதிகாரம், கனாத்திறமுரைத்தகாதை, 1-3.
16. மதுரை:578, நெடுநல்:40-44.
17. மணிமேகலை, விழாவறைக்காதை, 50-51.
18. சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, 116-118.
19. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.189.
20. க.காந்தி, தமிழரின் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.103.
21. சு.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.191.
22. நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.213.
23. அ.முத்துச்சாமி, சங்க இலக்கியத்தில் ஆயர், ப.107.
24. சிலப்பதிகாரம், இந்திரவிழாவூர் எடுத்தகாதை, 237-239.
25. கலி.11:21.
26. சிலப்பதிகாரம், ஆய்ச்சியர்குரவை, 11-16.

27. குறுந்.167:3, ஐங்.408:2, 439:2, 446:1, கலி.101:2, 4, 5, 34, 35, 39, 102:2,3,4, 103:1-3, 105:65, 107:6, 108:10, 111:7, 113:25, 115:5, 117:11,12, புறம்.131:2, 146:9, பெரும்பாண்.173-174.
28. சு.கு.பன்னீர்செல்வம், காலக்கண்ணாடியில் இலக்கியத்தின் பார்வை, ப.157.
29. நற்.221:8-9, 321:7, 371:6-7, அகம்.324:1, 374:18, அகம்.384:14, ஐங்.408:1-2, புறம்.11:2, 209:17, 367:6, கலி.104:20.
30. பெரும்பாண்.161, நெடுநல்.38, நற்.316:3, புறம்.50:4.
31. அகம்.9:23, புறம்.97:24, 117:10, 352:5.
32. ச.வே.சுப்பிரமணியன், பத்துப்பாட்டும் சங்க இலக்கியமும், பக்.22-41.
33. தமிழ்ப்பேரகராதி, தொகுதி-41, ப.3698.
34. பொ.வே.சோமசுந்தரனார் உரை, முல்லைக்கலி, ப.74.
35. நற்.69:8, 371:8-9, அகம்.74:15-17, 124:14-16, 305:14-16.
36. தமிழ்ப்பேரகராதி, தொகுதி-II, ப.1012.
37. ந.மு.வேங்கடசாமி நாட்டார் உரை, சிலப்பதிகாரம், ப.403.
38. பொ.வே.சோமசுந்தரனார் உரை, அகம்.நித்திலக்கோவை, ப.119.
39. கலி.106:47-50.
40. கலி.105:71-75.
41. கலி.103:61-62, 104:61-62, 106:31-33, 106:43-45.
42. புறப்பொருள்.பெருந்திணைப்படலம், நூ.42, ஏறுகொள்வென்றி.
43. மேலது., நூ.43, தகர்வென்றி.
44. நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி, பக்.415-416.
45. தமிழ்ப்பேரகராதி, தொகுதி-II, ப.797.
46. ஆ.இராமகிருட்டிணன், தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும், ப.98.
47. தமிழ்ப் பேரகராதி, தொகுதி-III, ப.1452.
48. பொ.வே.சோமசுந்தரனார் உரை, முல்லைக்கலி, ப.74.
49. அருணாச்சலம், சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி-3, ப.436.
50. இராசேந்திரன், தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம், ப.279.

51. கழகப்புலவர் குழுவினர், கழகத் தமிழ் அகராதி, ப.584.

52. ச.பவானந்தம் பிள்ளை. தமிழ்ச் சொல்லகராதி ப.290.

53. சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, 120-121.

54. தமிழ்ப் பேரகராதி, தொகுதி-V, ப.3151.

55. நற்.69:8, 142:6, கலி.108:11-12, முல்லைப்பா.15.

56. குறிஞ்சி.217-218, குறுந்.108:2, அகம்.64:14.

57. இலக்கியமும் அறிவியல் வேளாண்மையும், ப.15.

58. கலி.108:35, 110:10, பெரும்பாண்.155:158.

59. கலி.108:5,26,109:7, 110:9-10, பெரும்பாண்.159-160,164.

60. கலி.111:1-2.

61. கலி.108:33, 110:24, 112:12, 116:1.

62. கலி.108:32, 116:16, 111:1.

63. நற்.97:9,266:1,289:7, குறுந்.155:1-3, ஐங்.459:5, கலி108:31, புறம்.215:5, கலி.116:1.

64. இலக்கியமும் அறிவியல் வேளாண்மையும், ப.15.

65. மதுரை.271-285, பெரும்பாண்.148-184, மலை.404-420.

66. பட்டினப்பாலை, 53-8.

67. அகம்.74:116, நற்.364:9.

68. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானுடவியல், ப.471.

## இயல்-4

## இற்றைநாள் ஆயர்களின் அக-புற வாழ்வியல்

சங்க இலக்கியங்களில் கால்நடை வளர்ப்பினை மேற்கொண்ட முல்லை நிலத்தினர் ஆயர் எனப்பட்டனர். ‘ஆயர்’ எனும் பொதுவான பிரிவு இன்று பல்கிப் பெருகியுள்ளது. காரைக்குடி வட்டாரத்தில் வாழும் ஆயர்களிடம் ‘ஆயர்’ குறித்த சாதிப் பெயர்கள் பல பரிணாமங்களைப் பெற்று விளங்குகின்றது. ஆயர் என்பதை குலப்பெயராகவும், இடையர், கோனார் என்பதை சாதிப்பெயராகவும் கூறிக்கொள்கின்றனர். மேலும் சிலர் கிருட்டிணன் (அல்லது) திருமால் வழிபாட்டை முன்னிறுத்துவதன் காரணமாக யது குலம், யாதவ குலம் என்றும் குறிப்பிடுகின்றனர். யாதவர் என்பது வடமாநிலங்களில் கால்நடை மேய்ப்பவர்களைக் குறிப்பதாகும். மேற்கொண்ட தொழில் ஒற்றுமை காரணமாக ஆயர்கள் ‘யாதவர்’ என அழைக்கப்பட்டிருக்கலாம் எனவும் கருதமுடிகின்றது. ஆரம்ப காலக்கட்டத்தில் இடையர், கோனார் உள்ளிட்ட சாதிப்பெயர்கள் சமூகத்தினரால் கல்வியறிவற்ற சாதியச் சமுதாயங்களாகக் கருதப்பட்டுள்ளது. “கோனார்கள் ஒரு காலத்தில் சமூகத்தில் மிகவும் தாழ்ந்து கிடந்தனர். சமூகத்தில் எவருமே இவர்களிடம் உணவு, நீர் பெறுவது கிடையாது. யாராவது ஒருவர் முன்வந்து இவர்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்று கிருட்டிண பகவான் எண்ணி அவரே அச்செயலைச் செய்தார். கோனார் வீட்டிற்குள் சென்று பால், தயிர், வெண்ணெய் உண்டார். அன்று முதல் பிராமணர் உட்பட அனைவரும் கோனார்களிடம் நெருங்கிப் பழகினார்கள்”[1] என்கின்றார் பக்தவத்சலபாரதி. ஆயர், இடையர், கோனார் என்ற அடைமொழிப் பெயர்களைவிட யாதவர் என்பது மேல்நிலையாக்கப்பட்ட சாதிப்பெயராகக் கருதப்படுவதால் காரைக்குடி வட்டார ஆயர்களும் தங்களை யாதவர் என்றே அடையாளப்படுத்திக் கொள்கின்றனர். மேலும் இவர்கள் தங்கள் குழந்தைகளின் சாதிச்சான்றிதழிலும் இடையர் - யாதவா என்றே பதிவு செய்துள்ளனர். ஆயர் என்பது தொன்மையான பழங்குடி மக்கள் வாழ்ந்த காலம் முதல் இன்றளவும் பயன்படுத்தப்படும் சொல் என்பதால் இவ்வியலில் ஆயர் எனும் சொல்லடையே

பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளது. காரைக்குடி வட்டாரத்தில் காணலாகும் ஆயர்களின் வாழ்வியலானது பாரம்பரியமிக்க அக-புற வாழ்வியல் கூறுகளை உள்ளடக்கிக் காணப்படுகின்றது. ஆகையால் இவர்களின் வாழ்வியலில் காணலாகும் அக-புற வாழ்வியல் கூறுகளை ஆராய்ந்து விளக்குவதையும், அற்றைநாள் ஆயர்களின் வாழ்வியலோடு இற்றைநாள் ஆயர்களின் வாழ்வியலை ஒப்பிட்டுப் பார்ப்பதையும் அடிப்படை நோக்கமாகக் கொண்டு இவ்இயல் அமைகின்றது.

ஆயர், கோனார், இடையர், யாதவர் என்ற சொல் வழக்குகள் இன்றைய ஆயர் குடியினரிடம் பெரிதும் காணப்படுகின்றன.

**ஆயர்:**

தமிழகத்தில் வாழ்ந்த தொல்குடியினர் ஆயர். கலித்தொகை ஆயரினத்தை மூன்றாகப் பகுத்துக் காட்டினும் இன்று கிளைகளாய்ப் பல பெயர்கள் தோன்றிவிட்டன. “இளம்பூரணர் ஆயர் என்பார் ‘நிரைமேய்ப்பார்’ எனவும், ‘காடுபற்றி வாழ்தலின் அந்நிலத்தின் மக்களாயினார்’ எனவும், ‘பொதுவன்’ ஆயன் என்பன ‘குலம் பற்றி வரும்’ எனவும் கூறுவர்.”[2]

**இடையர்:**

ஆடுகளை மட்டும் வளர்த்துப் பலன்பெற்ற புல்லினத்து ஆயர்களே இடையர் என்று அழைக்கப்படுகின்றனர். “ஆட்டினத்தை மட்டும் கொண்டு வாழ்ந்தவர் புல்லினத்தாயர் என அழைக்கப்பட்டனர்.”[3] குறிஞ்சி மருதத்துக்கு இடைப்பட்ட பகுதியில் வாழ்ந்ததால் இடையர் எனவும், ஆட்டுக் கிடைகளுக்கு உரியவர்கள் என்பதால் இடையர் எனவும் பெயர் பெற்றதாய் அறியமுடிகின்றது. இதனை “கிடை என்றால் கால்நடைக் கூட்டம் என்று பொருள். அதற்கு உரியவர் என்ற பொருளில் கிடையர் என அழைக்கப்பெற்று நாளடைவில் அது இடையர் என ஆயிற்று என்கின்றார் சி.ஈ.இராமச்சந்திரன்.”[4] ஆடு மாடுகளை கிடை வைப்பது போன்றே நிலத்தை வளப்படுத்துவதற்காக வாத்துகளையும் கிடைவைக்கும் வழக்கம் இன்றும் உள்ளது. வாத்துகளுக்கு உரியவரை - இடையர் என அழைப்பது பொருத்தமாகாது. கிடைக்கு உரியவர் இடையர் என்ற கருத்தை மறுக்கும் வகையில் மொ.அ.துரை

அரங்கசாமி “செல்வம் வாழ்க்கை நிலை ஆகியவற்றில் (முதல்வராய், முதலிகளாய்) உள்ளவர்க்கும் நாள்தோறும் உழைத்து வயிறு வளர்க்கும் கடையருக்கும் இடைப்பட்டவரே இடையர்”[5] என்கின்றார். திணைச்சமுதாயத்தில் ஒவ்வொரு நிலத்திலும் செல்வம், வாழ்க்கை நிலையிலும் தலையானவரும் கடையரும் வாழ்ந்ததற்கான இலக்கியச் சான்றுகள் சங்க இலக்கியங்களில் பல இடத்தும் காணக்கிடக்கின்றன. பொருளாதார நிலையில் இடைப்பட்டவர்கள் முல்லை நிலத்தில் மட்டுமே வாழ்ந்தனர் என்பதும் பொருந்தாது நில அமைப்பில் இடைப்பட்ட பகுதியான முல்லையில் வாழ்ந்தவர்களே இடையர் என்பது புலனாகின்றது. இதனை “குறிஞ்சி நிலத்துக்கும் மருத நிலத்துக்கும் இடைப்பட்ட முல்லை நிலத்தில் வாழ்ந்தவர் இடையர் என்கின்றார் சக்திதாசன் சுப்பிரமணியன்.”[6]

**காரைக்குடி வட்டாரத்தில் ஆயர் சமுதாய மக்கள் பரவிக் காணப்படும் பகுதிகள்:**

சாக்கவயல், புதுவயல், கண்டனூர், தேவரிப்பட்டி, கோவிலூர், சின்னமாத்தூர், இலுப்பைக்குடி, அரண்மனைப்பட்டி, அரியக்குடி, இடையன்கேணி, இடைத்தெரு, கழனிவாசல், கூத்தலூர், கீரணிப்பட்டி, கம்பனூர், காரைக்குடியின் உள்நகர்ப் பகுதியில் முத்துப்பட்டணம் (மீனாட்சிபுரம்).

**காரைக்குடி வட்டாரத்தில் காணப்படும் ஆயர் சமுதாயத்தினரின் பெயர்கள்:**

காரைக்குடி வட்டாரத்தில் காணப்படும் ஆயர்கள் வணங்கும் தெய்வத்தினை வைத்து 14 கரைகளாகப் பகுக்கப்பட்டுள்ளனர். திருமால் (கிருட்டிணன்) இவர்களின் மூலதெய்வமாக இருப்பினும் அவர்கள் வழிபடும் பிறதெய்வங்களின் அடிப்படையில் கரைகள் அமைகின்றன.

களஆய்வின் பொழுது நேர்காணலில் கலந்து கொண்ட மக்கள் கரைகள் 14 என்றும் 16 என்றும் குறிப்பிட்டனர்.இருப்பினும் ஒருவரால் கூட 14 அல்லது 16 கரை தெய்வங்களை வகைப்படுத்த இயலவில்லை. பெரும்பான்மையான மக்கள் குறிப்பிட்ட தெய்வங்களாவன; அடைக்கலங்காத்தார், முதலியம்மன், பத்தினிநாச்சியா, பொன்னடைச்செல்வி, அரியறிப்பிள்ளை, அரியறிநாச்சியா, நம்பர்பிள்ளை, பூவாத்தா, கருவிழி அம்மன் என்பனவாகும். இத்தெய்வங்களுள் ஒன்பது கோவிலார். ஐந்து

கோவிலார் எனும் பகுப்பில் கும்பிடுவோரும் உள்ளனர், 14 கரைகள் மட்டுமே உள்ளன என்பது ஆய்வின்வழி அறியப்பட்டுள்ளது.

பதினான்கு கரைகளிலும் வாழும் ஆயர்கள் தாங்கள் வணங்கும் தெய்வங்களின் அடிப்படையிலும் மேற்கொள்ளும் பழக்க வழக்கங்களினாலும் மேலும் பல உட்பிரிவுகளாய்ப் பிரிந்துள்ளனர். இடையர் சாதியில் பல குலப்பிரிவுகள் உள்ளன. "எனினும் இவற்றை இரண்டு பெரும் பிரிவுகளுக்குள் அடக்கலாம். அவற்றுள் ஒன்று நன்கு ஒழுங்குபடுத்தப்பட்டு வளர்ந்துள்ள பிரிவு, மற்றொன்று தொன்மையான இனத்துக்குரிய இன்றியமையாக் கூறுகளைத் தன்னகத்தே அழியாது தாங்கி நிற்கும் தொல்லினப்பிரிவு, முதற்பிரிவினைச் சேர்ந்தவர்கள் வைணவச் சமயத்தை மேற்கொண்டிருப்பதோடு நாமம் தரித்தவர்களாகக் கூறிக் கொள்கின்றனர். இரண்டாம் பிரிவினைச் சேர்ந்தவர்கள் ஊர்த்தேவதைகளை வணங்குவதோடு தாங்கள் யாதவ மரபில் வந்தவர்கள் எனப் பெருமை பேசிக்கொள்வதில்லை. இவர்கள் தங்கள் நெற்றியில் பசுஞ்சாணத்தை நெருப்பிலிட்டு எரித்த சாம்பலைப் பூசிக்கொள்கின்ற ஒரே காரணத்தின் அடிப்படையில் மட்டும் சைவநெறியைப் பின்பற்றுபவர்களாகக் கூறிக்கொள்கின்றனர் என இவர்களைப் பற்றி மதுரை மாவட்டக் கையேட்டில் நெல்சன் குறிப்பிடுவதை சுட்டிக் காட்டுகின்றார் பக்தவத்சலபாரதி."[7] காரைக்குடி வட்டாரப் பகுதிகளில் வாழும் ஆயர்கள் தங்களை யாதவர் என்றே சொல்லிக் கொள்கின்றனர். தமிழகத்தில் ஆயர்கள் பல பெயர்களில் பரவிக் காணப்படுகின்றனர். "இடையர்களுக்குள் இருக்கும் பல பிரிவினர்களில் பின்வரும் பிரிவுகள் குறிப்பிடத்தக்கதாக எட்கர்தர்ஸ்டன் (1909) குறிப்பிடுகின்றார். கல்கட்டி, பாசிபிரிவினர், பால், பெண்டுக்கு மெக்கி சிவியன் அல்லது சிவாளன், சங்கு கட்டி, சாம்பன், புதுநாட்டார் அல்லது புதுக்கா நாட்டார், பெருந்தாலி, சிறுதாலி, பஞ்சரம் அல்லது பஞ்சாரம் கட்டி, மணியக்காரர், கள்ள சோழியர், ஆனைக்கொம்பு, கருத்தகாடு, பெருமாள் மாட்டுக்காரன் ஆகியன."[8] "இந்தப் பிரிவுகளையே சஷியும் (1990-37) முக்கியப் பிரிவுகளாகக் குறிப்பிட்டுள்ளார். கடலூர் மாவட்டத்திற்கு வந்துள்ளவர்கள்

அப்புச்சி இடையர், சிவியார் இடையர், கல்லுக்கட்டி இடையர், தலப்பாக்கட்டி இடையர் ஆகிய பிரிவுகளைக் குறிப்பிடுகின்றார்."[9]

**எட்கர் தர்ஸ்டன் குறிப்பிடும் ஆயர் பிரிவினர்: கல்கட்டி, பாசிபிரிவினர்:**

இப்பிரிவினைச் சேர்ந்த பெண்கள் தமிழர் பழக்கத்திற்கு மாறாகத் தங்கள் தாலியோடு கறுப்புப்பாசி மணிகளையும் கோத்து அணிவர். இப்பழக்கத்திற்குக் காரணம் தெலுங்குப் பிராமணப் புரோகிதர்களுடைய செல்வாக்காக இருத்தல் கூடும். தெலுங்குச் சாதியார் பலரும் தங்கள் தாலியோடு கண்ணாடிப் பாசிமணிகளைக் கோத்து அணியும் பழக்கம் உடையவர்கள். கறுப்புப் பாசிமணிகளாலான கழுத்துச் சங்கிலியை அணிகின்றனர். ஒரு கதை வரலாற்று வழக்கப்படி இப்பாசிமணிகள் ஆறுகளில் கிடைக்கும் கூழாங்கற்களிலிருந்து செய்யப்படுவதாகவும் ஆற்றங்கரையில் இடைச்சேரிச் சிறுவர்களோடு விளையாடிக் கொண்டிருந்த கண்ணன், தன்னைக் கொல்ல வந்த ஓர் அரக்கனை இந்தக் கூழாங்கற்களைக் கொண்டு தாக்கிக் கொன்றதாகவும் கூறப்படுகின்றது.

**பால்:**

இப்பிரிவு கன்னட குருபர்களான இடைச்சாதியின் ஹாலு பிரிவினோடு ஒத்ததாகும்.

**பெண்டுக்கு மெக்கி:**

மனைவிக்கு அடங்கி நடப்பவன் என்ற பொருள் தருவது இது. இப்பிரிவினருள் ஒருவன் திருமணம் முடிந்தவுடன் தன் மனைவியின் குடும்பத்தைச் சேர்ந்தவனாகிவிடுகின்றான். தன் தந்தையின் சொத்துக்களுக்குப் பதிலாக இவன் தன் மாமனாரின் சொத்துக்களுக்கு உரிமை உடையவனாகின்றான்.

**சிவியன் அல்லது சிவாளன்:**

பல்லக்குச் சுமப்பவர்களுக்கு உரிய தொழில் தொடர்பான பெயர்.

**சங்கு கட்டி:**

சங்கினைக் கட்டிக் கொண்டிருப்பவர்கள் எனப் பொருள் தருவது. கண்ணன் ருக்மணியை மணந்துகொள்ள விரும்பினான். ஆனால் ருக்மணியின் குடும்பத்தினர் அவளைச் சிசுபாலனுக்கு மணம் செய்து தருவதில் பிடிவாதம் காட்டினர்.

அத்திருமணம் நடைபெற இருக்கும் சமயத்தில் கண்ணன் ருக்மணியைத் தூக்கிச் சென்று அவள் கரத்தில் சங்கினாலான வளையல் ஒன்றினை அணிவித்தான்.

**சாம்பன்:**

இது சிவனுக்குரிய பெயர். இப்பிரிவினைச் சேர்ந்தவர்களுள் யாதவர்கள் தேவேந்திரனுக்குப் படையல் இடுவதே வழக்கம். கண்ணன் அவர்களைத் தனக்குப் படையலிட்டு வழிபடும்படி கூறினார். சில யாதவர்களையும் ஆடு மாடுகளை மேய்க்கும் பணியில் அமர்த்தப்பட்டிருந்த பறையன்களையும் தவிர மற்றவர்கள் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. “முன்பு இடையர்சாதி பறையர் சாதிக்கும் சற்றே மேம்பட்டதாகக் கருதப்பட்டு வந்தது. இடைச்சேரி பறையர்கள் வாழ்விடமான பறைச்சேரியை அடுத்தே ஒவ்வொரு ஊர்ப்புறத்திலும் இடம்பெற்றிருக்கும்.”[10]

**புதுநாட்டார் அல்லது புதுக்கா நாட்டார்:**

புதிதாகக் குடியமர்ந்தவர்கள் என்பது பொருள். கண்ணன் கிட்கிந்தையில் சென்று தங்கிய பொழுது அங்கே அவன் தங்கள் சாதியினரைக் குடியமர்த்தினான் என இடையர்கள் கூறுகின்றனர்.

**பெருந்தாலி, சிறுதாலி:**

மணமான பெண்கள் அணியும் தாலியின் அமைப்பைக் கொண்டு ஏற்பட்ட பிரிவுகள் .

**பஞ்சரம் அல்லது பஞ்சாரம் கட்டி:**

இப்பெயர் பஞ்சாரம் என அழைக்கப்படும் பொன்னணி ஒன்றின் பெயரிலோ பஞ்சாரம் எனப்படும் பல கதிர்களையும் நடுவில் மூன்று பொட்டுக்களையும் உடைய கதிரவன் வடிவிலான கைம்பெண்கள் அணியும் அணியின் பெயரிலோ அமைந்த பிரிவாகும். “இப்பிரிவினருள் கைம்பெண்களின் மறுமணம் தாராளமாக அனுமதிக்கப்படுகின்றது. கண்ணன் தன் உள்ளம் கவர்ந்த இடையர்குலக் கைம்பெண்களின் கழுத்தில் அவர்களை மணமான பெண்களாக மாற்றப் பஞ்சரம் என்ற இந்த அணியினை அணிவிப்பான். அவர்களுக்கு இன்ப நுகர்ச்சி விலக்கன்று. இந்தக் காதல் உறவின் விளைவால் அமைந்தது இப்பிரிவு எனக் கூறப்படுகின்றது.”[11]

**மணியகாரர்:**

கால்நடைகளான ஆடுமாடுகளின் கழுத்தில் அணிவிக்கப்படும் மணியின் அடிப்படையில் வந்த பெயர்.

**கள்ள:**

கள்ளர் சாதியார் வாழும் பகுதிகளில் இப்பிரிவினர் மிகுதியாக உள்ளனர். இப்பிரிவினர் கள்ளர் சாதியிலிருந்து பிரிந்து ஆடு மாடு மேய்க்கும் தொழிலை மேற்கொண்டவர்களாக இருத்தல் கூடும். கள்ளர்களைப் போலவே இப்பிரிவிலும் தேவன், வேந்தன் போன்ற புறமணக் கட்டுப்பாடு உடைய கிளைகள் (குலங்கள்) உள்ளன.

**சோழியர்:**

சோழதேசத்தில் வாழ்பவர்கள் எனப் பொருள்படும் வாழ்விடத்தின் அடிப்படையிலான பிரிவின் பெயர்.

**ஆனைக் கொம்பு:**

சகடாசுரனைக் கொல்லக் கண்ணனும் யாதவர்களும் பயன்படுத்திய போர்க்கருவியின் அடிப்படையிலான பிரிவின் பெயர்.

**கருத்தகாடு:**

திருநெல்வேலி மதுரைப் பகுதிகளிலேயே இப்பிரிவினர் மிகுதியும் காணப்படுகின்றனர். அப்பகுதிகளில் கரிசல்மண் காடுகள் பெரும்பரப்பினவாக உள்ளன.

**பெருமாள் மாட்டுக்காரன்:**

இவர்கள் சாமி மாட்டினை ஓட்டியபடி ஊர் ஊராகச் செல்வர். இவர்கள் பூ இடையன் என்ற இடைச்சாதியின் பிரிவைச் சேர்ந்தவர்கள் எனக் கூறப்படுகின்றது. இவ்வாறு பெயர் பெறுவதற்குரிய காரணம் இப்பிரிவினர் கோயில்களில் பூக்கட்டும் பணியைப் பெரும்பாலும் மேற்கொண்டு இருந்ததேயாகும். சில இடங்களில் இன்றளவும் இவர்கள் இப்பணியினைச் செய்து வருகின்றனர்.

மதுரை மாவட்ட விவரக் குறிப்பில் பொதுநாட்டு (புதுநாட்டு) இடையர் என்ற பிரிவினரைப் பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகள் வருமாறு; பொதுநாட்டு (புதுநாட்டு)

இடையர்கள் தாங்கள் திருநெல்வேலியைச் சேர்ந்தவர்களாக இருந்ததாகவும் ஒரு வட்டாரத் தலைவனின் கொடுமையைத் தாங்க இயலாது ஓர் இரவில் யாரும் அறியாதபடி திருமலைநாயக்கன் ஆட்சிக் காலத்தில் மதுரைக்கு வந்து சேர்ந்ததாகவும் கூறுகின்றனர்.

காரைக்குடி வட்டாரப் பகுதிகளில் வாழும் ஆயர்களில் பெரும்பாலானோர் கல்லுக்கட்டி இடையர் எனப்படுகின்றனர். இந்த கல்லுக்கட்டி இடையர்களே பதினான்கு கரைகளாக உள்ளனர் என்கின்றனர். கல்லுக்கட்டி இடையர்களில் இரண்டே பிரிவு தான் உள்ளது. 1.ஐந்து கோவிலார், 2.ஒன்பது கோவிலார், ஐந்து + ஒன்பது = பதினான்கு கரைகள் தான் என்பது 1936 ஆம் ஆண்டு ஸ்ரீரெங்கம் ஸ்ரீ ஆயனார் ஸ்வாமிகளால் தீர்மானிக்கப்பெற்ற தீர்ப்பின் மூலம் உறுதியாகின்றது.

**கல்லுக்கட்டி ஆயர்கள் வாழ்ந்த பகுதி:**

கல்லுக்கட்டி, ஆயர்கள் புதுக்கோட்டை சிவகங்கை, தஞ்சாவூர் மாவட்டங்களில் விரவிக் காணப்பட்டுள்ளனர். இதனை, “ஸ்ரீரெங்கம் திருமாளிகையிலிருந்து பிறப்பிட்டு பங்குனி மீ முதல் சித்திரை மீ வரையில் புதுக்கோட்டை சமஸ்தானம், திருமெய்யம் தாலுகா, சிவகங்கை சமஸ்தானம், திருப்பத்தூர் தாலுகா, தஞ்சாவூர் சமஸ்தானம், அருந்தாங்கி தாலுகா இந்த தாலுகாக்களைச் சேர்ந்த கிராமங்களிலிருக்கும் நடு நாட்டைச் சேர்ந்த கல்லுக்கட்டிடயர் கோபாலர்கள் அனைவர்களும்”[12] என்ற அடிகளால் அறியமுடிகின்றது. இன்றைய காரைக்குடி வட்டார ஆயர்கள் கூறும் கரைகளைப் பற்றிய வழக்கு 1911 மீ ஆண்டு நடந்துள்ளது. கரைகளுக்குள் வரும் தெய்வங்களை வழிபடுவதால் தாங்களும் கல்லுக்கட்டி இடையர் தான் என சிலர் வீம்பு பிடித்துள்ளனர். அதனால் ஒன்பது கரைகளுடன் மேலும் இரண்டு கரைகளைச் சேர்த்து பதினொரு கரைகள் என்று வீம்புபிடித்தவர்களின் மீது வழக்கு தொடுத்துள்ளனர். இதற்கு ஸ்ரீரங்கம் திருமாளிகை கோவஸ்திரி ஸ்ரீ ஆயனார் சுவாமிகள் கல்லுக்கட்டி இடையர்கள் ஒன்பது கோவிலார், ஐந்து கோவிலார் என்ற இரண்டு பிரிவில் உள்ள பதினான்கு கரைகளே என்று தீர்ப்பளித்துள்ளார்.

**பிராதில் கண்ட வாதி, பிரதிவாதிகளின் பெயர்:**

**"வாதிகள்**

1. கீழ்முகம் பெரியவீடு மணப்பட்டி முதலிக்கோனார் மகன் கிருட்டிணக்கோனார்.
2. விரையாச்சிலை முத்துப்பழனிக்கோனார் மகன் அடைக்கலக்கோனான்.
3. மேற்படியூர் அம்மனாடி வெள்ளையக் கோனார்
4. ஊனையூர் மாகாளிக் கோனார்
5. கூத்தலூர் மாகாளிக்கோன் மகன் அழகப்பக்கோன்
6. நற்பவளக்குடி ம.மெய்யக்கோன்
7. பிலாக்குடி அடைக்கக்கோன் மகன் அடைக்கக்கோன்
8. செங்கீரை ரா.ராமசாமிக்கோன்
9. பட்டணம் சுப.காட்டுக் கருப்பக்கோன்
10. வடவயல் சின்னக்காமாட்சிக்கோன், ஆதிக்கோன்
11. குரிச்சிவயல் அழ.சின்னய்யாக்கோன்
12. காயாம்பட்டி கருப்பக்கோன் மகன் பனையக்கோன்
13. ஓலைக்குடிப்பட்டி முத்துக்கருப்பக்கோன் மகன் மெய்யக்கோன்.

**பிரதிவாதிகள்:**

1. அரண்மனைப்பட்டி அடைக்கக்கோன்
2. தேவிரிப்பட்டி ஆதியான்கோன்
3. மேற்படி தேவிரிப்பட்டி ஆண்டியப்பக்கோன்
4. இலுப்பைக்குடி சின்னக்கருப்பக்கோன்
5. பிள்ளையார்பட்டி பெரியணக்கோன்"[13]

**பதினான்கு கோவிலார்களின் பெயர்களாவன**

1. "கோதையம்மன் (அசோதை நாச்சியார்)
2. பத்தினி நாச்சியம்மன்
3. உடப்பிரப்பிள்ளை (உடைப்பியம்மன்)
4. முதலிப்பிள்ளை (முதலியம்மன்)

5. கருவிழி நாச்சியார்
6. மின்னிண்டபிள்ளை
7. பொன்னடைச்செல்வி
8. அழகியநல்லாள்
9. அரியுளிபிள்ளை (அரியவுளி அம்மன்)
10. பூசலுடையார்
11. பொன்னி அம்மன்
12. விளத்தருடையார்
13. மாயனுடையார்
14. மூலக்களியார்”[14]

**பதினான்கு கோவில்களும் இடம்பெறும் கிராமங்களாவன:**

1. அசோதை நாச்சியார் கரை (பொன்.வையாபுரிப்பட்டி & மணப்பட்டி)
2. பத்தினி நாச்சியார் கரை (கொப்பரம்பட்டி, நற்சாந்துப்பட்டி அருகில்)
3. உடைப்பியம்மன் கரை (ஊனையூர், திருமயம் அருகில்)
4. முதலியம்மன் கரை சாமந்தன்பட்டி (அரிமளம் அருகில்)
5. கருவிழி நாச்சியார் கரை, கா.செட்டிபட்டி (ராயவரம் அருகில்)
6. மின்னின்ட பிள்ளையம்மன் கரை செங்கீரை (ராயவரம் அருகில்)
7. பொன்னடைச் செல்லியம்மன் கரை (ராயவரம் புதூர்)
8. அழகிய நல்லாள் கரை (ஊர் பெயர் இதுவரை தெரியவில்லை. இக்கரையை சேர்ந்தவர்கள் பிலாக்குடிப்பட்டியில் வாழ்கின்றார்கள்)
9. அரியவுளி அம்மன் (சேதுரெகுநாதப்பட்டணம்)
10. விளத்தருடையார் கரை (தேவரிப்பட்டி)
11. பூசருடையார் கரை (தேவரிப்பட்டி)
12. மாயருடையார் கரை (தேவரிப்பட்டி)
13. பொன்னியம்மன் கரை (தேவரிப்பட்டி)
14. மூலக்கல்யாணியம்மன் கரை (தேவரிப்பட்டி)

1 முதல் 9 வரையிலான கரைகளை ஒன்பது கோவிலார்கள் என்றும், 10 முதல் 14 வரையிலான கரைகளை ஐந்து கோவிலார்கள் என்றும் அழைக்கின்றனர். ஆனால் பதினான்கு கோவில் திருவிழாக்களிலும் மற்றும் திருமண வீடுகளிலும் கரைப்பாக்கு வழங்கும் போது ஒன்பது கோவிலார்களுக்கு தனித்தனியே கரைகளின் பெயர்களைக் கூப்பிட்டு பாக்குக் கூறுகளைக் கொடுப்பர். ஆனால் ஐந்து கோவிலார்களுக்கு மொத்தமாக ஐந்து கூறு பாக்குகளையும் கொடுத்துவிடுவார்கள். பின்பு ஐந்து கோவிலாரும் தங்களுக்குள் பாக்கினைப் பகிர்ந்து கொள்வர். ஒன்பது கோவிலாருடன் ஆரிய நாச்சியம்மனையும், அந்தரநாச்சியம்மனையும் வழிபடுவார்கள் தங்களையும் சேர்த்து பதினொரு கோவிலார் எனவும் 11+5=16 கரைகள் என்றும் கூறியிருக்கின்றனர். இதனை, "நற்பவளக்குடி பரட்டயக்கோன் என்ற மெய்யக்கோன் 1வது வாதிக்கி 11 கோவிலார் என்ற பெயர் கிடையாதுயென்று எழுதிவைத்திருக்கின்றார். அன்றி 6வது வாதி இவருக்காக 16க்கு ஒப்புக் கொண்டு ஆரியநாச்சியம்மனையும், அந்தரநாச்சியம்மனையும் ஒப்புக் கொண்டது பிசருதானென்று எழுதி வைத்திருக்கின்றார்."[15]

**கல்லுக்கட்டி இடையர் பெயர்க்காரணம்:**

ஆரம்ப காலத்தில் இவ்வகை இடையர்களின் திருமணத்தில் தாலிகட்டும் பொழுது பளிங்குக் கல்லை முடிந்து கட்டுவதால் கல்லுக்கட்டி இடையர்கள் என்றழைக்கப்பட்டுள்ளனர். தற்போது இவ்வகை இடையர்கள் தாலிகட்டும் பொழுது நூலில் மஞ்சளைத்தடவி மகாலெட்சுமி பொட்டுடன் அமைந்த தாலியைக் கட்டுகின்றனர். பிறிது ஒரு நல்ல நாள் பார்த்து நூலில் உள்ள தாலியைப் பிரித்து தங்கச் சங்கிலியில் பொட்டு, மணி, மாங்காய் முதலிய தங்க உருக்களுடன் பவளம் கோர்த்து தாலிச்செயினாக மாற்றிக் கட்டுகின்றனர். இதற்கு 'தாலி பிரித்துக் கோர்த்தல்' என்று பெயர்.

காரைக்குடியின் நகரப் பகுதியில் கொப்புடையம்மன் கோவிலை ஒட்டிய வர்த்தகப் பகுதிகள் கல்லுக்கட்டி என்றே அழைக்கப்படுகின்றது. இப்பகுதியில் கல்லுக்கட்டி ஆயர்கள் தொழில் மேற்கொண்டிருக்கலாம் எனக் கருதமுடிகின்றது.

திருமயம் வட்டாரத்தில் நார்கட்டி இடையர் எனும் பிரிவினர் காணப்படுகின்றனர். இவர்களின் திருமணத்தில் செடிகளின் நாரினைத் தாலிக்கயிறாக மாற்றிக் கட்டியதால் நார்கட்டி இடையர் என்றழைக்கப்பட்டுள்ளனர்.

அற்றைநாள் ஆயர்கள் மேற்கொண்ட தொழிலின் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டுள்ளனர். இற்றைநாள் ஆயர்கள் மேற்கொள்ளும் பழக்க வழக்கத்தினால் வகைப்படுத்தப்பட்டுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

**இற்றைநாள் ஆயர்களின் அகவாழ்வியல்:**

பழந்தமிழ் சமுதாயத்தில் வாழ்ந்த ஆயரின் அகவாழ்வியல், களவும் கற்பும் சார்ந்து சிறப்புற்றிருந்தது, ஒழுக்கமாய் போற்றப்பட்டது. “ஓர் ஆண் மகன் தன்னாற் காதலிக்கப்பட்ட ஒரு பெண்மகளையும், ஒரு பெண்மகள் தன்னாற் காதலிக்கப்பட்ட ஓர் ஆண்மகனையும் மணந்து வாழ்க்கை செலுத்துதல் வேண்டுமென்பதே பண்டைத் தமிழ் மேன்மக்களின் கொள்கையாயிருந்தது”[16] என்கின்றார் மறைமலை அடிகள்.

இன்றைய சூழலில் ஆயரின மக்களிடையே திருமணத்திற்கு முன்பான காதல் ஒழுக்கம் காணப்படின் அங்கே சாதியும், பொருளாதார வசதியுமே திருமணத்தைத் தீர்மானிக்கும் காரணிகளாய் அமைகின்றன. பெண்களின் காதல் திருமணத்தைவிட ஆண்களின் காதல் திருமணங்கள் ஓரளவு ஏற்றுக் கொள்ளப்படுகின்றது. சாதி பற்றிய கொள்கைகளில் மிகுந்த பற்றுக் கொண்டவர்களாய் இவர்கள் காணப்படுகின்றனர். கலப்புத் திருமணங்கள் இவர்களிடையே மிகவும் குறைவான எண்ணிக்கையிலேயே காணப்படுகின்றது. “காதலன்பைக் கருதாமற் செய்யும் போலி மணத்தை அறவே ஒழித்துவிடல் வேண்டும். வேறெந்தக் காரணத்தையும் ஒரு பொருட்டாக நினையாமற் பெண்ணும் ஆணுங் காதலன்பாற் கூடுங்கூட்டத்திற்கே முதன்மை தரல் வேண்டும்”[17] என்கின்றார் மறைமலை அடிகள்.

**பெண்பார்க்கும் நிகழ்வு:**

திருமண வயதை நெருங்கிய ஆணுக்கும் பெண்ணுக்கும் தாய்மாமன், தந்தைவழி அத்தை மக்கள் இருப்பின் அவர்களுக்கே மணமுடித்துக் கொடுக்கும் வழக்கம் இன்றளவும் நிலவுகின்றது. “பெரும்பாலான தமிழ்ச் சாதியரைப் போன்றே

இடையரும் தாய்மாமன் மகள், அத்தை மகள், அக்காள் மகள் ஆகியோரை விரும்பத்தக்க மணத்துணையினராக ஏற்கின்றனர். சொந்தத்தின் வழி கொண்டு கொடுத்தலை மிகவும் விரும்புகின்றனர்”[18] என்கின்றார் பக்தவத்சலபாரதி.

“உறவினர்களின் பெண்களைக் கேட்க விரும்பும் மணமகன் வீட்டார் யாரும் மணப்பெண்ணின் பெற்றோரை நேரடியாகக் கண்டு கேட்பதில்லை. மணப்பெண்ணின் உறவினர்கள் யாரையேனும் கேட்டுச் சொல்லும்படியே அணுகுகின்றனர்.”[19] மணப்பெண்ணைக் கேட்டு அவர்கள் தரமறுத்துவிட்டால் தனக்கு மரியாதைக்குறைவு என்று மணமகன் வீட்டார் கருதுவதே இதற்குக் காரணம் ஆகும்.

மணமகனுக்கு மணப்பெண்ணைத் தருவதில் மணப்பெண் வீட்டார் சம்மதம் தெரிவித்ததும் இருவீட்டாரும் நேரில் சந்திக்க ஏற்பாடு செய்யப்படுகின்றது. நேரில் சென்று பெண்ணைப் பார்ப்பதற்கு முன்னரே திருமண உறவில் இணையும் இருவரின் சாதகப் பொருத்தம் கணிக்கப்படுகின்றது. சாதகம் பொருந்தினால் மட்டுமே பெண் பார்க்கும் நிகழ்வு ஏற்பாடு செய்யப்படுகின்றது. இந்நிகழ்வு பெண் வீட்டிலேயே நடைபெறுகின்றது. பெண் வீட்டாரின் விருப்பத்திற்கு ஏற்ப மாப்பிள்ளையின் தாய்மாமன், பங்காளி வீட்டார் உள்ளிட்ட உறவினர்கள் தேங்காய், பழங்கள், பூ போன்றவற்றை கொண்டு சென்று மணமகளைப் பார்க்கின்றனர். மணமகன் வீட்டார் கொண்டு வந்த பூவினை மணப்பெண்ணுக்கு நாத்தனார் சூட்டிவிடுகின்றார். “இந்நிகழ்வை கள்ளர் சமுதாயத்தினர் பூவைத்தல் என்கின்றனர்.”[20] இருவீட்டாருக்கும் எல்லா வகையிலும் பிடித்துப்போன நிலையில் மணமகள் வீட்டின் விருந்தினை மணமகன் வீட்டார் ஏற்றுக் கொள்கின்றனர். “இதனை கை நனைத்தல் என்கின்றனர் ஆயர்குல மக்கள்.”[21] பேச்சுவார்த்தை முடியாத நிலையில் மணமகள் வீட்டில் கை நனைக்கும் பழக்கம் தங்களிடம் இல்லை என்கின்றனர். “பெண்பார்த்துப் பிடித்துப் போனதும் பேசிமுடிப்பதை பேசி முடித்தல்”[22] என்கின்றனர். பேசிய பெண்ணை தங்களுக்கு மட்டுமே என்று உறுதி செய்வதற்காக மணமகன் வீட்டார் பெண்ணுக்கு தங்களின் சூழ்நிலையைப் பொறுத்து மோதிரமோ அல்லது கழுத்துக்குத் தங்கச் சங்கிலியோ அணிவிக்கின்றனர். அதற்குப்பின் திருமண உறவில் இணையும் இருவரின் ஜாதகம் பொருத்தம் உள்ளதா

என்று பார்க்கின்றனர். சாதகம் பொருந்திய பின்பே திருமணத்திற்கான நாளைக் குறிக்கின்றனர். "இதனை முகூர்த்த ஓலை எழுதுதல் என்கின்றனர்."[23] முகூர்த்த ஓலை வாசிக்கும் நிச்சயதார்த்த நிகழ்வை திருமணத்திற்கு முன்னரே வைப்போரும் உண்டு, திருமணத்திற்கு முதல் நாளோ அல்லது திருமணத்தன்று காலையிலோ நடத்துவோரும் உள்ளனர். முகூர்த்த ஓலை எழுதிய பின்னரே திருமணப் பத்திரிக்கை வைத்து உறவுகளையும் நட்புகளையும் திருமணத்திற்கு அழைப்பர்.

**திருமணப் பத்திரிக்கை:**

இற்றைநாள் ஆயர்களின் திருமணப் பத்திரிக்கையின் அட்டையில் கிருட்டிணபகவானின் படத்தை தவறாமல் அச்சடிக்கின்றனர். ஒருசிலர் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட வீரன் அழகுமுத்துக்கோனின் படத்தையும் சேர்த்தே அச்சிடுகின்றனர். பத்திரிக்கையின் உள்ளே ஆண்மகனின் பெயர்களுக்குப் பின்னர் யாதவ் எனும் அடையாளத்தை இணைத்துக் கொள்கின்றனர். பெயருக்குப் பின்னால் படித்த பட்டத்தைப் போட மறந்தாலும் யாதவ் என்ற சாதிப்பெயரை மறக்காமல் அச்சிடுவதால் இவர்களின் சாதிப்பற்றினை அறிந்துகொள்ள முடிகின்றது. திருமணம் 30 நாள்கள் இருக்கும் நிலையில் பத்திரிக்கைகளை கொடுக்க ஆரம்பித்துவிடுகின்றனர்.

**திருமண நிகழ்வுகள்:**

ஆயர்களின் திருமணமானது முகூர்த்தக்கால் ஊன்றுதல் முகூர்த்த அரிசி அள்ளிப்போடுதல், சாமிப்படைப்பு, பெண் அழைப்பு, தாலிகட்டுதல் முதலான நிகழ்வுகளை உள்ளடக்கிக் காணப்படுகின்றது.

**முகூர்த்தக்கால் ஊன்றுதல்:**

திருமணத்திற்கு சில நாள்கள் இருக்கும் நிலையில் 3,5,7,9 எனும் ஒற்றைப்படை நாள்களில் நல்ல நாள், நேரம் பார்த்து காலைப்பொழுதில் முகூர்த்தக்கால் ஊன்றப்படுகின்றது. திருமண ஏற்பாடு செய்யும் இல்லங்களின் வாசலில் சிறு குழி தோண்டி அதில் தண்ணீரும் பாலும் ஊற்றி பூக்களை இட்டு முகூர்த்தக்கால் நடப்படுகின்றது. பெரும்பாலும் மூங்கில் (அல்லது) சவுக்கு மரம் முகூர்த்தக்காலாகப் பயன்படுகின்றது. முகூர்த்தக்காலின் நுனியில் மாவிலையும் பூவும் கட்டப்படும். தாய்மாமன்களும், பங்காளிகளும், இல்லத்தினரும் முகூர்த்தக்காலில் சந்தனப் பொட்டினை

5,7,9 இடங்களில் வைத்து வணங்குவர். முகூர்த்தக்கால் ஊன்றுவதற்காகத் தோண்டப்பட்ட குழியில் ஒவ்வொருத்தரும் தண்ணீர், பால், பூக்களைத் தூவுவர். அனைவரும் வணங்கிய பின்னர் பெரியவர்கள் சேர்ந்து தண்ணீர், பால், பூக்களால் நிரம்பிய குழியில் முகூர்த்தக்காலைத் தூக்கி வைத்து குழியை மூடுகின்றனர். முகூர்த்தக்காலுடன் இணைத்து கொட்டகைக்காரர் கொட்டகை அமைக்கின்றார்.

**முகூர்த்த அரிசி அள்ளிப்போடுதல்:**

திருமணத்திற்கு முதல்நாள் மணமகன், மணமகள் இருவீட்டிலும் இந்நிகழ்வு நடைபெறுகின்றது. தாய்மாமன் பங்காளிகளுடன் முக்கியமான உறவுகள் மட்டும் இந்நிகழ்விற்கு அழைக்கப்படுகின்றனர். காலைவேளையில் நல்லநேரம் பார்த்து 3,5,7,9 படி அரிசி கொள்ளும் அளவில் பித்தளைக் குடத்தில் வாய்ப்பகுதியில் பூமாலையைக் கட்டி சந்தனப்பொட்டு வைத்து வழிபடுகின்றனர். குடத்தைப் பெரும்பாலும் கிழக்கு முகம்பார்த்து அரிசி அள்ளிப்போடும் வகையில் வைப்பர். கிழக்கே சூலம் என்றால் மட்டுமே வேறு திசையில் வைக்கின்றனர். முதலில் தாய்மாமன்கள், ஆண்கள் வரிசையாக குடத்தில் தண்ணீர், பால் ஊற்றி இரண்டு கைகளும் நிறைய அரிசியை அள்ளிப்போடுகின்றனர். ஆண்கள் அனைவரும் அரிசி அள்ளிப் போட்டதும் பெண்கள் ஒருவர்பின் ஒருவராக அரிசியை அள்ளிப்போட்டு வழிபடுகின்றனர். மணமகன், மணமகள், இருவர் வீட்டிலும் உறவினர்கள் அனைவரும் அரிசி அள்ளிப்போட்டதும் நிறைவாகவே மணமகனோ, மணமகளோ அரிசி அள்ளிப்போடுகின்றனர். தண்ணீராலும் பாலாலும் நனைந்த அரிசியை மதியவிருந்துக்கு தாய்மாமன்களும் பங்காளிகளும் இல்லத்தினர் மட்டுமே உண்பதற்காகப் பயன்படுத்துகின்றனர். பெட்டைக் கோழியை அடித்து ரசம் வைத்து சாமிக்குப் படைத்துவிட்டு பின்பு உண்கின்றனர்.

சாமிப்படைப்பில் வைக்கப்படும் உணவுகள் மற்றவர்களுக்குப் பரிமாறப்படுவதில்லை. மற்ற உறவினர்களுக்கு தனியாகச் சமைத்து விருந்தளிக்கின்றனர். சாமிப்படைப்பின் போது மணமகளுக்கு சீர்செய்யும் நகைகள் முழுதையும் சாமிமுன்வைத்து வணங்கிய பின்னரே மணமகளுக்கு அணிவிக்கின்றனர். மணமகளுக்கு அணிவிக்கும் நகைகளை உற்றார் உறவினர் தெரிந்து கொள்ளும்

மனநிலையில் இந்நிகழ்வு நடைபெறுவதை அறியமுடிகின்றது. மணமகன் இல்லத்திலும் மணமகளுக்காக எடுத்து வைக்கப்பட்ட நகைகள், தாலி, பட்டுபுடவைகள் போன்றவை சாமிப்படைப்பில் வைத்து வழிபடப்படுகின்றன.

**கங்கணம் கட்டுதல்:**

திருமணத்திற்கு முதல்நாள் மணப்பெண்ணுக்கும், மணமகனுக்கும் அவரவர் தாய்மாமன்களால் வலது கையில் கட்டப்படும் காப்பு 'கங்கணம்' எனப்படுகின்றது. மஞ்சளால் நனைக்கப்பட்ட துணியில் ஒன்றேகால் ரூபாய் வைக்கப்பட்டு முடிந்து மணமக்களின் கைகளில் கட்டப்படுகின்றது. கங்கணம் கட்டிய பின்னரே திருமண மண்டபத்திற்கு மணமக்கள் அழைத்துவரப்படுகின்றனர். மணமகன் வீட்டார் மண்டபத்திற்கு வந்த பின்னரே மணமகளை அழைத்து வருகின்றனர். மணமகள் இல்லத்திற்கு மணமகன் வீட்டாரின் 5 நபர்கள் சென்று மணமகளை தங்களுடனே அழைத்து வருகின்றனர். மணமகளுடன் அவளின் உறவினர்களில் ஒன்று, இரண்டு பேர் செல்கின்றனர். மணமகளின் மற்ற உறவினர்களும், சீர்வரிசைப் பொருள்களுடன் மணமகளின் வண்டியைத் தொடர்ந்து செல்கின்றனர். மணமகன் வீட்டார் மணமகளை மங்கல வாத்தியங்கள் முழங்க வரவேற்கின்றனர். மணமகளின் கைகளில் தேங்காய், பழம், அரிசி கொண்ட பெட்டி கொடுக்கப்படுகின்றது. "புகுந்த வீட்டிற்குப் போகும் பெண் பொட்டி அரிசி கொண்டு செல்வது வழக்கம் என்கின்றனர்."[24]

ஆரம்ப காலத்தில் ஓலைப்பெட்டியும் தற்பொழுது சில்வர் முதலான உலோகப் பாத்திரங்களிலும் பொட்டி அரிசி கொண்டுவரப்படுகின்றது. இந்தப் பொட்டி அரிசியை திருமணம் முடிந்ததும் மாப்பிள்ளையின் சகோதரி கைகளில் வைத்துக் கொள்கின்றார். "மராத்திய மணமகன் குலதெய்வக் கோவிலுக்குச் செல்லும் போது அவனது இடது தோளில் ஒரு சல்லடையின் மேற்பகுதியையும், மணப்பெண் தன் கையில் தயிர்கடையும் மத்தினையும் எடுத்துச் செல்கிறார்கள்"[25] எனக் குறிப்பிட்டுள்ளார் ஜெ.அப்பாட். திருமணத்திற்கு மறுநாள் மணமக்கள் தங்களின் கைகளில் கட்டியிருக்கும் கங்கணத்தை அவிழ்த்துவிட்டு பொட்டி அரிசியில் உள்ள தேங்காய் பழத்தைத் தின்கின்றனர்.

**போலப்பொட்டி:**

மணப்பெண் கையில் பொட்டி அரிசி கொடுப்பதைப் போன்றே மணமகன் வீட்டில் போலப்பொட்டி கொடுக்கப்படுகின்றது. மூடியுடன் கூடிய ஓலைப்பெட்டியே போலப்பொட்டி எனப்படுகின்றது. இந்த போலப்பெட்டியினுள் தேங்காய், பழம் வைத்து மூடப்பட்டு ஒரு வெள்ளைத் துணியால் கட்டி மணமகனின் சகோதரியிடம் தரப்படுகின்றது. திருமணம் முடிந்து கங்கணம் கழட்டியதும் போலப்பொட்டி பிரிக்கப்படுகின்றது. போலப்பொட்டியை பூஜை அறையில் வைத்து வழிபடுகின்றனர். போலப்பொட்டியை ஒருசிலர் ராசி கருதி குறிப்பிட்டவர்களிடம் இருந்தும் பெற்றுக் கொள்கின்றனர்.

**நிச்சயதார்த்தம் அல்லது பரிசம் போடுதல்:**

காரைக்குடி வட்டார ஆயர் நிச்சயதார்த்த விழாவிற்காக 21 தாம்பூலத்தட்டுகளில் சீர்வரிசைகளைப் பரப்புகின்றனர். மணமகன் வீட்டார் பூ, பழம், பட்டுப்புடவை முதலான பொருள்களுடன் நெய், அரிசி, கருப்பட்டி, மிளகாய், மல்லி, சில்வர் பானை என பரிசப் பொருள்களை மணமகள் வீட்டாருக்கு சீராக மேடையில் அளிக்கின்றனர். மணமக்களின் தாய்மாமன்கள் தேங்காய், பழம் நிறைந்த தட்டுகளை மாற்றிக் கொள்கின்றனர். மணமகன் வீட்டாரிடமிருந்து பரிச நெய் வந்துவிட்டதா? பரிச அரிசி, கருப்பட்டி வந்துவிட்டதா என ஒருவர் ஒவ்வொன்றாகக் கேட்க, மணமகள் வீட்டார் வந்துவிட்டது என ஒப்புதல் தெரிவித்துப் பெற்றுக் கொள்கின்றனர். மணமகன் மணமகள் பெயர்களைத் தெரிவித்து இவருக்கு இவர் என்று திருமணம் குறிக்கப்பட்ட முகூர்த்த ஓலையை வாசித்து இருவீட்டாரும் தட்டுகளை மாற்றிக் கொள்கின்றனர். நிச்சயதார்த்தத்திற்கு மணமகன் வீட்டார் மணமகளுக்குப் பட்டுப்புடவையை பரிசாக அளிக்கின்றனர். இருவீட்டாரின் தாய்மாமன்களும் தாம்பூலத்தட்டை மாற்றிக் கொண்டதும் மணமகன் வீட்டார் கொடுத்த பட்டுப்புடவையை அணிந்து கொண்டு மணமகள் சபையை வணங்குகின்றாள். மணமகன் கையால் மணமகளுக்கு மோதிரம் அணிவிக்கின்றார். மணமகனையும் மணமகளையும் அருகருகே நிற்க வைத்து பெரியோர்கள் வாழ்த்துகளையும் ஆசிர்வாதத்தையும் அளிக்கின்றனர்.

**சீக்காழித்தல்:**

திருமணத்தன்று அதிகாலையில் மணமகனுக்கும் மணமகளுக்கும் அவரவர் இருப்பிடங்களில் செய்யப்படும் சடங்குகளில் ஒன்று சீக்காழித்தல் ஆகும். இந்நிகழ்வு கள்ளர், நாடார் சமூகத்தில் முதல்நாள் இரவு நடைபெறுகின்றது. மணமக்களுக்கு தீட்டு கழித்தல், திருஷ்டி கழித்தல் என்றும் இந்நிகழ்வைக் குறிப்பிடுகின்றனர். “சிந்து மகாணத்தில் புதிதாகக் கிணறு வெட்டுவது, தானியங்களை அளப்பது, மணமகனுக்கு தலைப்பாகையைக் கட்டுவது, மணமக்களுக்கு புதிய ஆடைகளைத் தைப்பது, ஆவிகளைக் கட்டுப்படுத்துவது, தீய ஆவிகளை மாற்றுவது போன்ற எந்த ஒரு பணியும் நல்ல மனிதர் ஒருவராலேயே செய்யப்படுகின்றது என்கின்றார் ச.சரவணன்.”[26]

நெல், நிறை செம்பு தண்ணீர், விளக்கு உள்ளிட்ட ஐந்து பொருள்களைக் கைகளில் ஏந்தி ஒருவர் கையில் இருந்து மற்றவர் கை மாற ஏழு ஐந்து பேர் சூழ மணமக்களுக்கு சடங்கு செய்யப்படுகின்றது. ஒவ்வொரு பொருளையும் மூன்று முறை சுற்றுகின்றனர். பின்பு நூலினை கொடி மாதிரி பிடித்து மணமக்களை மூன்றுமுறை தாண்டச்சொல்லி கைகளில் வெற்றிலையைக் கொடுத்துப் பின்பக்கமாய்ப் போடச் சொல்கின்றனர். இதன்மூலம் மணமக்களின் மீது எந்தவொரு தீயசக்தியும் இணையாது என நம்புகின்றனர்.

**மெட்டி அணிவித்தல்:**

மணமகளுக்கு தாலிகட்டுவதற்காக மாப்பிள்ளை அழைப்பு நடைபெறுகின்றது. மணமகளின் உறவினர்கள் மணமகனுக்கு மாலை அணிவித்து மரியாதை செய்து மணமேடைக்கு அழைத்து வருகின்றனர். மணமகளின் சகோதரி மணமகனுக்கு மெட்டி அணிவித்து வரவேற்கின்றாள்.

**எறிசோறு போடுதல்:**

மணமகனுக்கு மெட்டி அணிவித்தலும், வெண்சோற்றில் மஞ்சள் கலந்து உருண்டையாக எறிசோறு தயாரிக்கப்படுகின்றது. மணமகனுக்கும், மணமகளின் சகோதரனுக்கும் கையில் ஒவ்வொரு உருண்டை எறிசோறு தரப்படுகின்றது. இருவருக்குமிடையே ஒரு வெள்ளைத்துணியால் மறைவு ஏற்படுத்தி ஒருவர் முகத்தை

ஒருவர் பார்க்காமல் கைகளில் உள்ள எறிசோறு எறியப்படுகின்றது. இந்நிகழ்வு கண்ணேறு கழித்தல் என்பதற்காகவே என்றும் கூறப்படுகின்றது.

**மணமேடை நிகழ்வுகள்:**

வீட்டில் திருமணமேடை அமைத்தால் அரசாணிப்பானை அடுக்கி வைக்கப்படுகின்றது. "திருமணமேடையில் வைக்கப்படும் அடுக்குப்பானை அரசாணிப்பானை என்கின்றது அகராதி."[27] அடுக்கி வைக்கப்படும் மங்கலப் பானைகளில் நவதானியங்களை இட்டு வைக்கின்றனர். மணமேடையின் முன்னே இருபுறங்களிலும் அடுக்கி வைக்கப்படும் அரசாணிப்பானைகள் முன்னோர்களின் வடிவங்களாகக் கருதப்படுகின்றது. அரசாணிப்பானை அரசாணிக்கால் அருகே ஆரம்ப காலக்கட்டத்தில் நடப்பட்டுள்ளது. அரசனின் சீரும், பரிசுப்பொருள்களும் மணமக்களுக்கு வழங்கப்பட்ட நாள்களில் அரசனின் படைவீரன் பரிசுப் பொருள்களுடன் ஒரு மூங்கில் குச்சியையும் கொண்டு வந்துள்ளான். மணமக்களின் உறவினர் அரசன் வராத சூழ்நிலையில் அரசமரத்தின் கிளையை ஒடித்து மூங்கில் குச்சியுடன் சேர்த்து நட்டு அரசனாகவே நினைத்து வழிபட்டுள்ளனர். அரசு+ஆணை+கால்=அரசாணிக்கால். அரசனின் ஆணையுடன் இடப்பட்ட கால் அரசாணிக்கால் என்கின்றனர். "இதனை விவாக மண்டபத்திலே அரசாணியிலே முருக்குடன் நாட்டப்படும் அரசங்கொம்பு என்கின்றது தமிழ்மொழி அகராதி."[28] மேலும் அரசமரத்தின் அடிபாகத்தில் பிரம்மாவும் மத்தியில் மஹாவிட்ணுவும் உச்சியில் பரமேசுவரனும் குடியிருப்பதாகக் கருதுவதால் மும்மூர்த்திகளும் மணமக்களை வாழ்த்துவதற்காக வந்துள்ளனர் என்றும் மக்கள் நம்பியுள்ளனர். ஆயர் குலத்தினர் அரசமரக்கிளையுடன் பாலமரம், கல்யாணக் கிளுவை மரத்தின் குச்சிகளையும் இணைத்து வழிபடுகின்றனர்.

மணமக்கள் அரசாணிக்கால், பானையை வழிபட்ட பின்னரே மணமேடையில் அமர்கின்றனர். அரசாணிக்காலிற்கு மணமிட்ட பின்னரே மணமக்கள் திருமணச்சடங்கை மேற்கொள்கின்றனர். மணமகன் மணமகளுக்கு தாலி கட்டுவதற்கு முன்பு பாக்கு அடிக்கும் சடங்குமுறை நடைபெறுகின்றது.

**பாக்கு அடித்தல் (கரைப்பாக்கு)**

தாலி கட்டுவதற்குமுன் மணமகனின் உறவினர் ஒருவரால் பாக்கு அடித்தல் நடைபெறுகின்றது. மணமகனின் வீட்டிலிருந்து ஒரு ஓலைப் பெட்டியினுள் கொட்டை அல்லது சாயப்பாக்குகள் வைத்து கொண்டுவரப்படுகின்றது. மணமக்கள் மேடையில் அமர்ந்திருக்கும் நிலையில் ஓலைப்பெட்டியில் உள்ள பாக்குகளை சிறிது சிறிதாக அள்ளி அடைக்கலங்காத்தார் உள்ளிட்ட 14 கரைகளுக்கும் வைக்கின்றனர். ஒவ்வொருகரை பெயரையும் சொல்லி வைக்கும் பாக்குகளை திருமணவிழாவில் கலந்து கொண்டிருக்கும் அந்தந்த கரையைச் சேர்ந்தவர்கள் யாரேனும் சென்று எடுத்துக் கொள்கின்றனர். உறவினர்கள் தான் பாக்குகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற விதி எல்லாம் இங்கு இல்லை. ஐந்து கோயிலார்க்கு வைக்கப்படும் பாக்குகளை மட்டும் பாக்குகளை அவர்கள் எடுக்கும் முன்னரே மணமகனின் உறவினர் பாக்குகளை களைத்து பெட்டிக்குள்ளேயே அள்ளிப் போட்டுவிடுகின்றனர். ஐந்து கோவிலாரின் சடங்குமுறைகளில் உள்ள வேறுபட்ட நிகழ்வுகளே அதற்குக் காரணம் எனக் கருதப்படுகின்றது. “ஐந்து கோவிலார்களுக்கும் 9 கோவிலார்களுக்கும் நன்மை, தீமைகளில் சில வித்தியாசங்களினால் பேதம் ஏற்படுகின்றது. நன்மையில் 5 கோவிலார் வீட்டிற்குள்ளே வைத்து பரிசம் பேசி தாலி கட்டுகின்றார்கள். 9 கோவிலார்கள் வெளியில் பந்தல்போட்டு மணவறையில் தாலி கட்டுகின்றார்கள். 9 கோவிலார்கள் தங்களைப் போல் மணவறையில் அக்கினி அரசாணி அடுக்கி மணவறையில் தாலிகட்ட வேண்டுமென்கிறார்கள். அதற்கு அஞ்சு கோவிலார்கள் ஒப்புக் கொள்ளுவதில்லை. சாதியில் இரண்டு விதமாய் நடத்தினால் வேறு சாதி என்று ஏற்படும் 9 கோவிலார் இதினால்தான் 5 கோவிலாருக்கு நெடுநாளாய் பாக்குச்சங்கடம் வருவதாகத் தெரியவருகின்றது.”[29]

இதன்மூலம் பாக்கு அடித்தல் என்பது உறவுமுறைகளின் வரவிற்கான மரியாதை செலுத்துதல் என்பதனை உணரமுடிகின்றது. இங்கு கிராமங்களில் ஏதேனும் பொதுவான விழாக்களை வைத்த உறவினர்கள் நேரில் சென்று அழைக்க இயலவில்லை எனில் உறவினர்கள் கோபம் கொள்வர். இந்நிலையில் விழா வைத்த

குடும்பத்தினர் ஏன்! அவர்களுக்கு நேரில் சென்று பாக்கு வைக்க வேண்டுமோ! என்று கிண்டலாகக் கேட்பதும் நினைவுகூரத்தக்கது ஆகும்.

திருமண நிகழ்வில் 14 கரைகளுக்கும் பாக்கு வைப்பது தெய்வங்களை வணங்குவதன் பொருட்டும் ஆயர் பல பிரிவுகளாகப் பிரிந்திரிந்தாலும் உறவினர்களே என்ற சாதியக் கட்டுப்பாட்டை நிலைப்படுத்துவதன் பொருட்டும் என்பதை அறியமுடிகின்றது. 14 கரைகளாகப் பிரிந்தாலும் திருமணம் புரிவதற்கு கரைகள் தடையாக இருப்பது இல்லை. ஆனால் "கள்ளர் சமுதாயத்தில் கிளைகள் உண்டு. பாகனேரி வட்டாரத்தில் (சிவகங்கை மாவட்டம்) தேவர் சமுதாயத்தில் ரக்ஷ கிளை, அம்மாத்த கிளை. அப்பிய கிளை, நாலுபண்ட கிளை எனும் நான்கு கிளைகள் உள்ளன. இவர்களில் ஒரே கிளைக்காரர்கள் திருமணம் புரிவதில்லை. ஒரே கிளைக்குள் உள்ளவர்கள் பங்காளி உறவுமுறை என்கின்றனர்."[30]

பாக்கு அடித்தல் நிகழும் போது ஒரே கரையைச் சேர்ந்த பலரும் எழுந்திருப்பதால் தங்கள் வகையறாவின் அடையாளத்தைத் தெரிந்து கொள்கின்றனர். அந்தணரைக் கூப்பிட்டு மந்திரம் சொல்லி தாலிகட்டும் பண்பாடு இவர்களிடம் இல்லை. ஆரம்ப காலக்கட்டத்தில் மணமக்களைச் சார்ந்த சான்றோர் ஒருவரால் மணமகன் கைகளில் தாலி எடுத்துக் கொடுக்கப்பட்டது. தாலி எடுத்துக் கொடுக்கும் சான்றோர் வாயால் "அரசாணி முன்பாக நந்தகோபாலன் வாழ்த்த நாடறிய ஊரறிய நண்பர்கள் தானறிய நடைபெறும் திருமணத்தின் மணமக்கள் வாழியவே!"[31] என வாழ்த்த கூடியிருக்கும் பலராலும் வாழ்த்துகளைப் பெறுவர் மணமக்கள். திருமணத்திற்குப் பின்பு மணமக்கள் உண்மையான காதலன்பு கொண்டு இல்லறம் புரியுமாறு வாழ்த்தப்படுகின்றார்கள். "காதலன்பு இல்லாவழி மகளிர்க்குக் கற்பொழுக்கம் நிலைபெறுதல் அரிது. தமிழ்மக்கள் மகளிரது கற்பொழுக்கத்தையே மிக மேலானதாய்க் கருதினர் என்கின்றார்"[32] மறைமலை அடிகள்.

திருமணத்திற்குப் பிறகும் ஓரிரு நாள்கள் விருந்து நடைபெற்ற ஆயர் சமுதாயத்தில் இன்று ஒரே நாளிலேயே வீடறிதல், மறுவீடு உள்ளிட்ட சடங்குகளை நிறைவு செய்கின்றனர். "பழங்காலத்தில் 7 நாட்கள் திருமணம் நடந்தது. அது பின்னர்

5 நாட்கள், 3 நாட்கள் எனக் குறைந்தது. இப்போது ஒரே நாளில் கோயிலில் திருமணம் செய்வது வரை முறை குறைந்துள்ளது என்கின்றார் பக்தவத்சல பாரதி."[33]

**ஏறுதழுவுதல்:**

அற்றைநாள் ஆயர்களின் திருமண நிகழ்வு ஏறுதழுவுதல் எனும் வீரவிளையாட்டை அடிப்படையாகக் கொண்டது. சங்ககாலத்தில் தமிழரின் மறப்பண்பாட்டிற்கு அடையாளமாகத் திகழ்ந்த ஏறுதழுவுதல், ஏறுகோள் என்பன இன்று பல்வேறு வேறுபாடுகளுக்கு உட்பட்டு மஞ்சிவிரட்டு, சல்லிக்கட்டு எனும் பெயர்களில் அழைக்கப்படுகின்றது. ஆனால் ஆயர்களின் திருமணத்திற்கும் சல்லிக்கட்டிற்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை. வீரமான ஆண்மகனைவிட சாதியும் பொருளாதார வசதியும் நிறைந்த ஆண்மகனை மணமகனாகப் பெறுவதையே இன்றைய ஆயமகளிரும் பெற்றோரும் விரும்புகின்றனர். ஆயர் சமுதாயத்தில் திருமண உறவுடன் தொடர்புடைய ஏறுதழுவல் இன்று அனைத்துச் சமுதாயத்தினரும் கொண்டாடும் தமிழர் திருநாளாம் பொங்கல் திருநாளுடன் சேர்த்தே கொண்டாடப்படுகின்றது.

"மஞ்சி என்பது நார். நாரினால் கழுத்துத்தொங்கல் கட்டி காளையை வெகுளச் செய்வதால் இந்தத் திருவிழாவை மஞ்சிவிரட்டு என்று இராமநாதபுரத்தினர் கூறுவர் என்பர்."[34] தேங்காயிலிருந்து பெறப்படும் நாரைப்போன்று செடிகளிலிருந்து மஞ்சி எனும் நார் பெறப்படுகின்றது. "மஞ்சி என்பது கற்றாழை நார். வேலியோரங்களில் வளர்ந்திருக்கக்கூடிய கற்றாழை மடலை வெட்டி அதன் விளிம்பிலும் நுனியிலும் உள்ள முள்ளினை அகற்றி, நீர் நிறைந்த சேற்றில் அமிழ்த்திப் பத்து நாள்களுக்குக் குறையாமல் ஊறவைப்பர். அதன்பின்பு அடித்துத் துவைத்தால் கற்றாழையின் சதைப்பகுதி அகன்று அதன் நார் மட்டும் மிஞ்சும். அது தூய வெண்ணிறத்தில் நூல் போல இருக்கும். இந்த நாரைத்தான் மஞ்சி என்பர். சிவப்பாக இருக்கும் சப்பாத்திக்கள்ளிப் பழத்தைப் பிளந்து, அதன் சிவப்பு நிறத்தினை இந்த நாருக்கு ஊத்துவதும் உண்டு. அத்துடன் விரும்பும் வண்ணச்சாயத்தில் தோய்த்து அவ்வண்ணத்தில் மஞ்சியைப் பெறுவர். புளிச்சகீரைத்தண்டினை ஊறவைத்துச் சில நாள்கள் கழித்து அவற்றின் பட்டையைப் பிரித்தெடுத்துத் தண்ணீரில் அலசுவர். அப்படிச் செய்தால் மிகவும் தூய்மையான நூல் போன்ற நார் மட்டும் மிஞ்சும்.

இது கற்றாழை நாரைவிட இருமடங்கு நீளமுடையதாயிருக்கும். இவற்றை வேண்டிய வண்ணத்தில் தோய்த்து எடுப்பர். இதற்கும் மஞ்சி என்றே பெயர். கற்றாழை நார், புளிச்ச நார் ஆகியவற்றால் கிடைத்த தூய நூல் போன்ற மஞ்சியை அடையும் பொருட்டு வீரர்கள் காளையை விரட்டும் இந்த விளையாட்டை மஞ்சிவிரட்டு எனக் குறிப்பிட்டனர். மஞ்சிக்கு விரட்டு என்ற நான்காம் வேற்றுமை உருபு நிமித்த காரண காரியப் பொருளால் மஞ்சியினைப் பெறுவதற்காக வீரர்கள் காளையை விரட்டும் விளையாட்டு எனப் பொருள்படும்”[35] என்கின்றார் முனைவர் ஆ.முத்தையா.

**சல்லிக்கட்டு: பெயர்க்காரணம்:**

“சல்லி என்பதற்கு ஆபரணத் தொங்கல்”[36] என்று பொருள் கூறுகின்றது Tamil Lexicon. “சல்லி என்பதற்கு மூன்று சின்னங்கொண்ட காசு என்கின்றார் நா.கதிரைவேற்பிள்ளை.”[37] ஆதலால் சல்லி எனும் காசுகளைக் கட்டாகக்கட்டி காளையின் கழுத்தில் தொங்கவிடுவர். காளையை அடக்கும் வீரர்கள் பரிசுப் பொருளாகச் சல்லிக்காசுகளைப் பெறுவர் என்பதை அறியமுடிகின்றது.

ஒரு சிலர் சல்லி என்பதும் மஞ்சியைப் போன்றே காளையின் கழுத்தைச் சுற்றிக் கட்டப்படும் நார் போன்ற வளையம் என்கின்றனர். “சல்லி என்பது விழாவின்போது மாட்டின் கழுத்தில் கட்டப்படுகின்ற வளையத்துக்குப் பெயர் என்று கருதப்படுகின்றது.”[38] சல்லி என்று அழைக்கப்படும் வளையம் பெரும்பாலும் புளியவளாறினால் செய்யப்பட்டது. புளியநாரை முறுக்கி வளைத்து அதைப் பல நிறச் சாயங்களிலே நனைத்துக் காயவைப்பார்கள். பிறகு அதில் தேங்காய்முடி, பழம், பவுன் அல்லது வெள்ளி நாணயம், மோதிரம் முதலியவற்றைக் கோர்த்துக் காளையின் கழுத்திலே கட்டிவிடுவார்கள் எனக் கலைக்களஞ்சியக் கட்டுரையாசிரியர் சல்லிக்கட்டு என்ற பெயர்க் காரணத்தை இதில் குறிப்பிட்டுள்ளார். காளையின் கழுத்தில் கட்டப்படும் ஒன்றை அடிப்படையாகக் கொண்டே இந்தப்பெயர் ஏற்பட்டிருக்கும் என அவர் கருதுகின்றார்”[39] என்பதை ஆ.முத்தையா விளக்கியுள்ளார். சல்லிக்கட்டு, மஞ்சிவிரட்டு ஆகிய இரு சொற்றொடர்களும் காளையின் கழுத்தில் கட்டப்படும் ஒரு பொருளைக் குறித்தே பெயர் பெற்றுள்ளன என்பதை அறியமுடிகின்றது.

பழந்தமிழகத்தில் திருமணத்துடன் தொடர்புடைய ஒரு விளையாட்டு காலப்போக்கில் பரிசுக்காகவும் பொழுதுபோக்கும் நிகழ்வுக்காகவும் மாற்றம் பெற்றுள்ளது.

**சல்லிக்கட்டு (ஜல்லிக்கட்டு) பொருள்:**

சல்லிக்கட்டு என்பதற்குப் பொருத்தமான பெயர்க்காரணங்கள் இருப்பினும் ஒரு சிலர் ஜல்லிக்கட்டு என்றும் குறிப்பிடுகின்றனர். தமிழில் சல்லி என்பதற்கு சிறிய என்னும் பொருளுண்டு சிறிய சில்லறை காசுகளால் ஆன முடிச்சாக இருந்திருக்கும் என்பது பொருத்தமானது. ஜல்லிக்கட்டு என்று வழங்குவது பொருந்தாது. வடமொழியிலும் தெலுங்கிலும் ஜல்லிக்கட்டு என்ற சொல் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆங்கிலேயர்கள் Jallikkattu என்று எழுதுவதை மனதிற்கொண்டே சிலர் ‘ஜல்லிக்கட்டு’ என்று எழுதி இருக்கக்கூடும். “தமிழ்ப் பேரகராதியில் கூட சல்லிக்கட்டு என்பதற்கு ஆங்கிலச் சொல்லான Calli-K-Kattu என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.”[40] இன்றும் காளையை அடக்கிய வீரர்கள் காளையின் கழுத்தில் இருக்கும் புதுத்துண்டினை அவிழ்த்துக் கொள்வதைக் காணமுடிகின்றது.

**பாக்கு வைத்தல்:**

காரைக்குடி வட்டாரத்தில் தை மாதம் இரண்டாம் நாள் மாட்டுப்பொங்கல். அன்று அனைத்து கிராமங்களிலும் மஞ்சுவிரட்டு நடைபெறுகின்றது. தை மாதம் முதல் பங்குனி மாதம் வரை ஒவ்வொரு கிராமப் பகுதிகளிலும் மஞ்சுவிரட்டு ஏற்பாடு செய்யப்படுகின்றது. மஞ்சுவிரட்டினை ஏற்பாடு செய்யும் கிராமத்தினர் மற்ற கிராமத்தின் கோயில் காளைகளை நேரில் சென்று தாம்பூலத்தட்டில் வெற்றிலை பாக்கு வைத்து அழைப்பர். இந்நிகழ்விற்கு பாக்கு வைத்தல் (அல்லது) சிறப்பு அழைப்பு என்று பெயர். ஒரு ஊரின் கோயில் காளையை நேரில் சென்று பாக்கு வைத்து அழைத்துவிட்டால் அது அந்த ஊரின் அனைத்து காளைகளையும் அழைத்ததற்குச் சமமாகும். மஞ்சுவிரட்டு நடைபெறும் கிராமங்களில் மதியவிருந்து அசைவ வகைகளுடன் இடம்பெறுகின்றது.

1900-2000 ஆம் ஆண்டுகளில் ஏறுதழுவல் விழாவாகக் கொண்டாடப்பட்ட மஞ்சுவிரட்டு இன்றைய மக்களுக்கு பொதுவான பொழுதுபோக்காகவே

கருதப்படுகின்றது. இன்று மஞ்சுவிரட்டு நடைபெற வேண்டுமெனில் அந்த ஊரின் காவல்துறையினரிடம் அனுமதியும் பாதுகாப்பும் பெறவேண்டியுள்ளது.

**விருந்தோம்பல் பண்பாடு:**

பழந்தமிழகத்தில் வாழ்ந்த ஆயர் சமுதாய மக்களிடம் சிறந்து விளங்கிய பண்பாடுகளில் ஒன்று விருந்தோம்பல். விருந்தோம்பலின் இலக்கணத்தை நன்கு அறிந்தவர்களாகவே காரைக்குடி வட்டார ஆயர்கள் காணப்படுகின்றனர். காரைக்குடி என்றாலே சாப்பாடு என்கின்ற அளவுக்கு புகழ்பெற்ற இவ்வூரில் ஆயர்களின் விருந்துணவும் விருந்தோம்பும் பண்பாடும் போற்றத்தக்கதாய் உள்ளது. எந்தவொரு சுபநிகழ்ச்சி நடைபெற்றாலும் முதலில் சிறப்பான விருந்துணவுக்கே அட்டவணை இடப்படுகின்றது. காலையும், இரவும் பலவகைகளுடன் கூடிய சிற்றுண்டியும் மதியவேளையில் அசைவ உணவு வகைகளும் விருந்தாக்கப்படுகின்றன.

**மது அருந்தும் பழக்கம்:**

மதியமும், இரவும் நடைபெறும் விருந்துகளில் மது அருந்தும் பழக்கம் இற்றைநாள் ஆயர்களிடம் நிலவுகின்றது. திருவிழாக்காலங்களிலும், வீட்டின் சுபமுகூர்த்த நிகழ்வுகளிலும் விருந்தினை ஏற்பாடு செய்பவரே மதுவிற்கான செலவையும் ஏற்றுக் கொள்கின்றார். மது அருந்துவது மகிழ்ச்சியின் வெளிப்பாடாகவே கருதப்படுகின்றது.

**போர் குறித்த செய்திகள்:**

மன்னராட்சி நடைபெற்ற காலத்தில் போருக்கான காரணங்கள் பல இருந்தன. மக்களாட்சி நடைபெறும் இன்றைய சூழலில் காரைக்குடி வட்டார ஆயர்கள் சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொண்ட வீரர் அழகுமுத்துக்கோன் அவர்களை தங்களின் போர்க்குணத்திற்கும் வீரத்திற்கும் அடையாளமாகக் காட்டுகின்றனர். "சுதந்திரப் போராட்டத்துக்குப் பலர் பல்வேறு தியாகங்களைச் செய்திருக்கிறார்கள். அந்நிய ஆட்சியாளர் நெருக்கடிக்கு அடிபணிய மறுத்திருக்கிறார்கள். ஆனால் வீரன் அழகுமுத்துக்கோன் தியாகம் தனித்தன்மை வாய்ந்தது. மகாபாரதத்துக் கண்ணனின் செயலைப்போன்றது. மகாபாரதத்தில் பகை பாண்டவர்களுக்கும் துரியோதனாதியர்க்கும்

தான். நடுவில் நின்ற கண்ணன் நியாயத்துக்காக வாதாடப் புகுந்து அதர்மத்துக்கு எதிரான போரில் தானே முன்வந்து தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டான். அதுபோல் கும்பினி ஆட்சியின் ஏஜெண்ட் கான்சாகிப் கப்பம் கட்டச்சொன்னது எட்டயபுரத்து மன்னனைத்தான். அது தவறு. மானத்தை விட்டுக்கொடுக்கின்ற மரியாதையற்ற செயல். அன்னிய ஆட்சிக்கு அடிபணிகின்ற கோழையின் செயல் என்று கருதி தானே முன்வந்து எட்டயபுரம் மன்னருக்காகப் போராடி மரணத்தை முகர்ந்தவர் அழகுமுத்துக்கோன். அங்கேதான் அவரது மரணம் தியாகம் மகத்துவம் பெற்ற வரலாறாக அமைந்துவிடுகின்றது. அழகுமுத்துக்கோன் - கோகுலக்கண்ணனின் வழிவந்தவர் என்ற செய்தியும் இந்தச் செயலால் வலுப்பெறுகின்றது"[41] என்கின்றார் மா.முருகன்.

**மாவீரன் அழகுமுத்துக்கோன் (1710-1759)**

தென்னிந்தியாவில் ஆங்கில ஆட்சிக்கு எதிராக முதல் சுதந்திரப் போராளியாக இருந்தவர் மாவீரன் அழகுமுத்துக்கோன் ஆவார். அவர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கட்டாலங்குளம் கிராமத்தில் பிறந்தார். எட்டயபுரம் பாளையத்தில் படைத்தளபதியாகப் பணியாற்றிய இவர் பிரிட்டிஷ் மற்றும் மருதநாயகம் படைகளுக்கு எதிரான போரில் தோற்கடிக்கப்பட்டார். தாய்மண்ணின் உரிமைக்காகவும் சுதந்திரத்திற்காகவும் போராடிய மாவீரன் அழகுமுத்துக்கோனை நேருக்குநேர் சந்திக்கப் பயந்த கும்பினியப்படை, அவரது கைகளிலும் கால்களிலும் விலங்குகளைப்பூட்டி பீரங்கிக்கு முன்னால் நிறுத்தியது. அவரைப் போலவே கைகளில் பூட்டப்பட்ட விலங்குகளோடு அவரது ஆறு துணைத்தளபதிகளும் 248 வீரர்களும் நிறுத்தப்பட்டார்கள். தாய்நாட்டின் மானத்துக்காக மரணத்தை முத்தமிடவும் நாங்கள் தயார் என்ற அழகுமுத்துக்கோனின் கர்ஜனையைக்கேட்டு கும்பினிப்படை அதிர்ந்தது. ஆத்திரம் கொண்டது "உன்னைப் பணிந்து பெறும் பதவியைவிட மரணமே எனக்குச் சம்மதம்"[42] என்று முழக்கமிட்டவர் அழகுமுத்துக்கோன். இடப்பக்கம் மூன்று தளபதிகளும் வலப்பக்கம் மூன்று தளபதிகளும் நிற்க ஏழு வாயில்கள் கொண்ட பீரங்கியால் சுட்டுக் கொல்லப்பட்டார். ஏறுதழுவல், ஆநிரை கவர்தல், மீட்டல் போன்றவற்றில் பங்குபெற்று வென்றவன் வீரன் எனச் சங்ககாலத்தில் போற்றப்பட்ட மரபு காலவளர்ச்சிக்கு ஏற்பத் தற்காலத்து மாற்றம் பெற்றும் அமைந்துள்ளது. அதன் அடிப்படையில் நாட்டின்

விடுதலைக்குப் போராடியவர்களும் வீரர்களாகக் கருதப்பட்டுக் கொண்டாடப்படுகின்றனர். சுதந்திரப்போராட்டவீரன் அழகுமுத்துக்கோனைத் தங்களின் வீரத்தின் அடையாளமாகத் தற்காலத்து ஆயர்கள் கருதுகின்றனர். காரைக்குடி வட்டார ஆயர்களின் போற்றுதற்குரிய தலைவனாக வீரன் அழகுமுத்துக்கோன் திகழ்வதால் அவருடைய பிறந்தநாள் (சூலை 11) அன்று மதுரையில் உள்ள அழகுமுத்துக்கோனின் திருவுருவச்சிலைக்கு மாலை அணிவித்து மரியாதை செலுத்துகின்றனர்.

ஆயர்குலப் பெண்ணொருத்தி தன் இல்லத்திற்கு விருந்தினர் வந்து கொண்டே இருத்தல் வேண்டும். அதற்கு உணவுப் பொருள்கள் என்றும் நிறைந்திருக்க வேண்டும் என இறந்த வீரனின் நடுகல்லை வணங்கினாள். அதைப்போன்று முன்னோரை வணங்கும் பண்பாடு இற்றைநாள் ஆயரிடமும் நடைமுறையில் உள்ளது. அதன்வழி வீரத்துடன் உயிர்தியாகம் செய்த வீரன் அழகுமுத்துக்கோனை காரைக்குடி வாழ் ஆயர்கள் வழிபடுகின்றனர்.

**இற்றைநாள் ஆயர்களின் பழக்க வழக்கமும் நம்பிக்கையும்:**

பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் ஆயரின மக்களிடையே காலங்காலமாக அசைக்க இயலாத தன்மையுடன் நிலவி வருகின்றன. மனிதனுடைய அறிவுப்பூர்வமான வெளிப்பாடு மத நம்பிக்கை ஆகும். “மத வழிபாடு அவருடைய “செய்முறை அறிவைக் காட்டுகின்றது. மனிதனுடைய மதநம்பிக்கை வழிபாடு இரண்டும் பிரிக்க முடியாத ஒன்றாகும்”[43] என்கின்றார் அ.செல்வநாதன்.

**இறை நம்பிக்கை:**

கல்லுக்கட்டி ஆயர்களிடம் இறைவழிபாடு மிகுந்து காணப்படுகின்றது. இவர்கள் முதன்மைத் தெய்வமாக திருமால் வழிபாட்டை மேற்கொள்கின்றனர். தென்திருப்பதி என்றழைக்கப்படும் அரியக்குடி பெருமாள் கோவிலிலும், திருப்பத்தூர் அருகே உள்ள திருக்கோட்டியூர் பெருமாள் கோவிலிலும். திருமயம் பெருமாள் கோவிலிலும், புரட்டாசி மாத சனிக்கிழமைகளில் வழிபாடு மேற்கொள்கின்றனர். புரட்டாசி மாதத்தில் வீட்டில் விரதத்தைக் கடைபிடிக்கின்றனர். அசைவ உணவு வகைகளை சமைப்பதும் இல்லை, உண்பதும் இல்லை.

**வைகுண்ட ஏகாதசி:**

மார்கழி மாத ஏகாதசி தினத்தன்று பெருமாள் கோவில்களின் சொர்க்கவாசல் திறப்பதை நேரில் சென்று கண்டு வழிபடுகின்றனர். மேலும் மார்கழி மாதத்தில் இறப்பவர்கள் சொர்க்கத்தை அடைவார்கள் என்றும் நம்புகின்றனர். மார்கழி மாதத்தில் அதிகாலையில் எழுந்து கோவில்களில் நடைபெறும் திருப்பள்ளி எழுச்சியில் கலந்து கொள்கின்றனர். பெருமாள் வழிபாட்டுடன் 14 கரைகளுக்குரிய தெய்வ வழிபாட்டையும் மேற்கொள்ளும் ஆயர்கள் சிறுதெய்வ, பெண்தெய்வ வழிபாட்டினையும் மேற்கொள்கின்றனர். முத்துப்பட்டணம் சின்னமுத்துமாரியம்மன் கோவில் திருவிழா இவர்களால் பெரிதாகக் கொண்டாடப்படுகின்றது. முத்துமாரியம்மன் கோவில் திருவிழாவின் முதல் மண்டகப்படி யாதவர்களுக்கே உரியதாய் உள்ளது. மண்டகப்படியன்று அகத்தியன் மண்டபத்தில் இரவு விருந்து ஏற்பாடு செய்யப்படுகின்றது. யாதவர்கள் மட்டுமின்றி கோவிலுக்கு வருபவர்கள் அனைவருக்கும் உணவளிக்கப்படுகின்றது. விருந்து நிறைவுபெற்றபின் மண்டபத்தில் இருந்து முத்துமாரி அம்மனுக்கு யாதவ சமூகத்தினரால் சீர் எடுத்துச் செல்லப்படுகின்றது. கல்லுக்கட்டி ஆயர்களிடமிருந்தும் சுற்றுவட்டார யாதவ சமூகத்தினரிடமிருந்தும் ரூ.200-லிருந்து நன்கொடை பெறப்படுகின்றது. முதல் மண்டகப்படி யாதவ மண்டகப்படி என்பதால் அவர்களிடம் பெருமை நிலவுகின்றது.

**கிருட்டிணஜெயந்தி விழா:**

காரைக்குடி வட்டார ஆயர்களால் பெரிதும் கொண்டாடப்படும் மற்றொரு விழா கிருட்டிணஜெயந்தி விழா ஆகும். காரைக்குடி வட்டார மக்களிடம் நன்கொடையாகப் பெறப்படும் தொகையை வைத்து மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. காரைக்குடியைச் சுற்றியுள்ள ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் மக்கள் சிற்றுந்து முதலிய வாகனங்களைப் பிடித்துக் கொண்டு வந்து சேருகின்றனர். நன்கொடை கொடுத்த ஒவ்வொருவருக்கும் தாம்பூழப்பையும் இனிப்புகளும் தரப்படுகின்றன.

கிருட்டிணஜெயந்தி அன்று காலையில் சுபலெட்சுமி மஹாலில் அலங்கரிக்கப்பட்ட கிருட்டிணபகவான் சிலையை வைக்கின்றனர். அன்று இரவு விருந்து நடைபெறுவதற்குமுன் மேடையில் பெரும்தொகையை ஆண்டுதோறும் நன்கொடையாகத் தருபவர்களுக்கும், நன்கொடையை வசூலித்துத்தரும் கிராமத்தின் முக்கியப்

பிரதிநிதிகளுக்கும் பொன்னாடை அணிவித்து சிறப்பு செய்கின்றனர். மேடை முழுவதும் ஆயர்குலச் சிறுவர் சிறுமியர் ராதா-கிருட்டிணன் வேடம்புரிந்து காட்சியளிக்கின்றனர். ஒவ்வொரு ஆண்டும் 10,12 ஆம் வகுப்புகளில் முதல் மூன்று மதிப்பெண்களைப் பெற்ற ஆயர்குல மாணவ மாணவிகளுக்குப் பரிசாக ஊக்கத் தொகையும் வழங்கப்படுகின்றது. விருந்து நிறைவுபெற்ற பின்னர் கிருட்டிணன் சிலை வைக்கப்பட்டரதத்தை ஊர்வலமாக செஞ்சையில் உள்ள கிருட்டிணன் கோவிலுக்கு எடுத்துச் செல்கின்றனர். காரைக்குடி வட்டார ஆயர்கள் சூழ கிருட்டிணஜெயந்தி விழா பெரிய திருவிழாவாகவே நடைபெறுகின்றது. கிருட்டிணஜெயந்தி விழாவை சிறப்புடன் நடத்துவதற்காகத் தலைவர், செயலாளர், பொருளாளர், செயற்குழு உறுப்பினர்கள் என்ற பெரும்கட்டமைப்பு உள்ளது.

**ஆய்வு மேற்கொள்ளப்பட்ட காலத்தில் காரைக்குடி வட்டார யாதவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்:**

ஸ்ரீகிருட்டிணஜெயந்தி விழா - பதிவு எண்.1754/2009

| | | | | |
|---|---|---|---|---|
| தலைவர் | - | வெ.சுப்பிரமணியன் | - | 9942633343 |
| செயலாளர் | - | எம்.கணேசன் | - | 9965770960 |
| | | (ஸ்ரீ பாப்பாத்தி ஸ்டோர்) | | |
| பொருளாளர் | - | ஏ.எல்.கணபதி | - | 9865768702 |

**புள்ளிவரி:**

காரைக்குடி வட்டார ஆயர்களிடம் திருவிழா முதலான ஊர்ப்பொது நிகழ்வுகளுக்குப் புள்ளிவரி விதிக்கப்படுகின்றது. ஆயர்களின் இல்லங்களில் உள்ள திருமணமான ஆண்களுக்கு தலைக்கு ஒரு புள்ளி என்று கணக்கிடப்படுகின்றது. சுபநிகழ்வுக்குத் தேவையான மொத்தத் தொகையும் கணக்கிடப்பட்டு அத்தொகையைப் பகுத்துப் புள்ளிவரி நிர்ணயிக்கப்படுகின்றது.

காரைக்குடிக்குள் அமைந்துள்ள கொப்புடைநாயகி, இடைச்சி, காமாட்சி, நாகாத்த அம்மன் உள்ளிட்ட பெண் தெய்வங்களையும் காரைக்குடி வட்டார ஆயர்கள் வழிபடுகின்றனர். “மனிதனுக்கும் இறைவனுக்கும் உள்ள உறவுதான் மதம் ஆகும். மதம் அறிவுப்பூர்வமான செய்முறைக்கு ஏற்ற கூறுகளை உள்ளடக்கியுள்ளது”[44] என்கின்றார் அ.செல்வநாதன்

**இல்லுறை வழிபாடு:**

சங்க காலத்து ஆயர்களைப் போன்றே இற்றைநாள் ஆயர்களிடமும் இல்லுறை வழிபாடு மிகுந்து காணப்படுகின்றது. செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் வீடுகளில் மாலைநேரம் வந்ததும் விளக்கு ஏற்றி சாம்பிராணி புகைகாட்டி மலர்மாலை இட்டு இல்லுறை தெய்வத்தை வணங்குகின்றனர். இல்லங்களில் இறந்தவர்களின் புகைப்படங்களை வைத்து முன்னோர்களை மறக்காமல் வழிபடுகின்றனர்.

**அமாவாசை வழிபாடு:**

தை, ஆடி மாதங்களில் அமாவாசை அன்று இறந்துபோன முன்னோர்களுக்காக வீடுகளில் விரதம் இருந்து மதியம் சைவ உணவுகளைப் படைத்து காக்கைக்கு வைத்து வழிபட்டுவிட்டு பின்பு உண்கின்றனர். இறந்தவர்களின் இறந்தநாளை தமிழ் மாதக்கணக்கில் ஞாபகம் வைத்து ஆண்டுதோறும் விரதம் இருந்தும் அவர்களுக்குப் பிடித்த உணவுப் பொருள்களைப் படைத்தும் வழிபடுகின்றனர். இதனால் இறந்தவர்கள் காவல் தெய்வமாய் இருந்து வீட்டில் இருப்போரைக் காப்பர் என்றும் நம்புகின்றனர்.

**ஆவணி ஞாயிறு வழிபாடு:**

ஆவணி மாத ஞாயிற்றுக் கிழமைகளில் பெண்களால் மேற்கொள்ளப்படும் விரதம் ஆவணி ஞாயிறு விரதம் ஆகும். ஏனைய ஞாயிற்றுக் கிழமைகளில் அசைவ உணவை விரும்பிச் சமைத்துச் சாப்பிடுவது வழக்கமாக உள்ள காரைக்குடி ஆயர்களின் இல்லங்களில் ஆவணி ஞாயிறு மட்டும் அப்பளம், பாயாசம் உடன் கூடிய சைவ உணவு வகைகள் படையலாகின்றன.

**செவ்வாய் வழிபாடு:**

பெண்கள் மேற்கொள்ளும் விரதங்களில் செவ்வாய் வழிபாடும் ஒன்றாகும். ஆடி, தை, மாசி முதலான மூன்று மாதங்களிலும் செவ்வாய்க் கிழமைகளில் அனைத்து வயதுப் பெண்களும் விரதம் இருந்து ஔவையாரை வழிபடுகின்றனர். “இதற்கு அசந்தால் ஆடி தப்பினால் தை மறந்தால் மாசி”[45] என்ற செவ்வாய் வழிபாட்டு மாதங்களை வரையறை செய்கின்றனர். மேலும் செவ்வாய் வழிபாட்டிற்காக கைக்குத்தல் அரிசி பச்சரிசி மாவினை உப்பில்லாமல் கொழுக்கட்டையாகப் பிடித்துப் படைக்கின்றனர். விறகுவெட்டி பிழைப்பு நடத்தும் ஏழு அண்ணன்களுடன் பிறந்த ஒரு

பெண் ஔவையாரை வழிபட்டு பொருளாதார வளர்ச்சி பெற்ற கதையைக் கூறி செவ்வாய் வழிபாட்டை நிறைவு செய்கின்றனர். ஔவையாருக்குப் படைத்த கொழுக்கட்டையை ஆண்களுக்குத் தெரியாமல் உண்கின்றனர்.

காரைக்குடி வட்டார ஆயர்கள் சித்திரா பவுர்ணமி, விநாயகர் சதுர்த்தி, ஆடி பதினெட்டு (ஆடிப்பெருக்கு), தீபாவளி, திருக்கார்த்திகை, மார்கழி முதல் நாள், தைத்திங்கள் (பொங்கல்), மாசிமகம், பங்குனி உத்திரம் முதலான தினங்களில் வழிபாட்டை மேற்கொள்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

**நம்பிக்கைகள்:**

இற்றைநாள் ஆயர்களிடமும் கண்துடித்தல், நிமித்தம் (சகுனம்) பார்த்தல், காக்கை கரைதல், பல்லி ஒலித்தல், சத்தியம் செய்தல் (சூளுரைத்தல்) முதலிய நம்பிக்கைகள் நிலவுகின்றன.

**நிமித்தம் (சகுனம்) பார்த்தல்:**

அற்றைநாள் ஆயர்களிடம் நிலவிய நிமித்தம் (சகுனம்) பார்த்தல் இன்றும் நம்பப்படுகின்றது. வீட்டில் இருந்து கிளம்பும் பொழுது பூனை குறுக்கே ஓடினால் தீய நிமித்தம் என்கின்றனர். பெண்கள் நிரம்பிய தண்ணீர் குடத்துடன் வந்தால் நல்ல நிமித்தம் என்றும் வெறுங்குடத்துடன் வந்தால் தீயநிமித்தம் என்றும் கருதுகின்றனர். கணவனை இழந்த கைம்பெண்களை எதிரில் காண்பதும் சுபநிகழ்ச்சிகளில் முன்நிற்பதையும் தீயநிமித்தமாகக் கருதுகின்றனர்.

**சடங்குகள் பற்றிய நம்பிக்கை:**

சமயச் சடங்குகளில் பெரும்நம்பிக்கை கொண்டவர்களாய் ஆயர்கள் காணப்படுகின்றனர். இவர்களின் சடங்குகளில் தாய்மாமன் முறைக்குப் பெரும் மதிப்பு அளிக்கப்படுகின்றது. இறுதிச் சடங்குகளில் ஐந்து கோவிலாரிடம் சில மாற்றங்கள் காணப்படுகின்றன. சின்னமாத்தூரில் வாழும் ஐந்து கோவிலார் நீர்மாலை எடுப்பதில்லை. குடம் உடைப்பது மருமகளுக்கு உரியது என்றும் கருதுகின்றனர். காலம் காலமாக மற்ற ஊர்களிலும் குடம் உடைப்பது மகளுக்கு உரியமுறை என்பதை மாற்றி மருமகளுக்கு மரியாதை செலுத்தும் விதமாக இச்சடங்குமுறை அமைகின்றது.

**ஒப்பனை:**

இற்றைநாள் ஆயர்குலத்தில் ஆண்களைவிடப் பெண்கள் தங்களை அழகுபடுத்திக் கொள்வதில் அதிகமாக ஆர்வம் காட்டுகின்றனர். அதிலும் திருமணமான பெண்களைவிட வயதுப் பெண்கள் ஒப்பனை நயம் நிறைந்து காணப்படுகின்றனர். கண்ணுக்கு மைதீட்டுவதும் மலர்களால் கூந்தலை அழகூட்டுவதும் இன்றும் நடைபெறுகின்றது.

தாய்மார்கள் தங்களின் குழந்தைகளுக்கு ஆண், பெண் வேறுபாடின்றி கண்களுக்கு மைதீட்டுகின்றனர். நெற்றிமுட்டிவாய், கண்ணப்பகுதி, முன்கை, உள்ளங்கால் முதலிய பகுதிகளில் பொட்டு வைத்தும் மகிழ்கின்றனர்.

சங்ககால ஆயர்கள் காட்டுப்பகுதிகளில் மலர்ந்த மலர்கள் அனைத்தையும் சூடி மகிழ்ந்தனர். முல்லை மலரைச் சூடுவது கற்பின் சிறப்பு எனக் கருதப்பட்டது. இன்றைய காலகட்டத்தில் மல்லிகை, சாதிமல்லி, முல்லை, பிச்சிப்பூ, செவ்வந்தி, ரோஜா முதலிய மலர்களைச் சூடிக்கொள்கின்றனர்.

**அணிகலன்கள்:**

இன்றைய பெண்கள் அணிகலன்கள் என்றாலே பொன்னால் ஆனவையே எனக் கருதுகின்றனர். ஆயமகளிரும் பொன், வைரம், பிளாட்டினம் முதலிய விலையுயர்ந்த உலோகத்தால் ஆன அணிகலன்களையே அணியவிரும்புகின்றனர். சுபதினங்களிலும் விருந்துகளிலும் ஆடைக்கு ஏற்ற நிறத்தில் அணிகலன்களை அணிகின்றனர்.

திருமணத்திலும் பெண்ணுக்கு எத்தனை பவுன் தங்கநகை போடுவார்கள் என்பது முதல் வினாவாக உள்ளது. காதுகளில் தோடு, சிமிக்கி, மாட்டல் என்றும் கைகளில் வளையல், காப்பு, விரல்களில் மோதிரம், கழுத்தில் வகைவகையான ஆபரணங்களையும் காலுக்கு வெள்ளிக் கொலுசுகளையும் அணிகின்றனர். மூக்குத்தி அணிவது கல்லுக்கட்டி ஆயர்களிடம் காணப்படுவதில்லை. மற்ற ஆயர்களிடம் மூக்குத்தி அணிவது மிகுந்து காணப்படுகின்றது. மூக்கு குத்தும் ஆயர்களிடமிருந்து கல்லுக்கட்டி ஆயர்கள் பெண் எடுப்பது இல்லை. மூக்கு குத்தும் ஆயர்கள் சமுதாயத்தில் தரம் குறைந்தவர்கள் என காரைக்குடி வட்டார ஆயர்கள் கருதுகின்றனர்.

வயதுப் பெண்கள் பல வண்ணங்களிலும் கிடைக்கின்ற அழகு சாதனப் பொருள்களைப் பயன்படுத்துகின்றனர். சங்ககால ஆயர்கள் இயற்கையில் கிடைத்த பொருள்களைக் கொண்டு தங்களை அழகுபடுத்திக் கொண்டனர். இற்றைநாள் ஆயர்கள் காலமாற்றத்திற்கு ஏற்ப வேதிப்பொருட்களாலான அழகுசாதனப் பொருள்களைப் பயன்படுத்துகின்றனர்.

**பொழுதுபோக்குகள்:**

அற்றைநாள் ஆயர்கள் படைப்பாற்றல் மிகுந்தவர்களாய்க் காணப்பட்டனர். பொழுதுபோக்கிற்காகப் புல்லாங்குழல் இசைக்கவும், குழலின் வழியே பண்ணிசைக்கவும் கற்றிருந்தனர். ஏறுதழுவுதல் எனும் வீரவிளையாட்டையும் பொழுதுபோக்கிற்காக மேற்கொண்டனர். இற்றைநாள் காரைக்குடி வட்டார ஆயர்களிடம் படைப்பாற்றல் திறனை வெளிப்படுத்தும் பொழுதுபோக்கு நிகழ்வுகள் மிகவும் குறைவாகவே உள்ளன. காலமாற்றத்திற்கு ஏற்ப திரையரங்குகளிலும் கேளிக்கை நிகழ்வுகளிலும் விளையாட்டு மைதானங்களிலும் பொழுதுபோக்குகின்றனர்.

பெண்களின் பொழுதுபோக்குகள் ஆரம்ப காலத்தில் பொழுது போக்குவதற்காக நிகழ்ந்ததாயினும் பின்பு அதுவே தொழில் சார்ந்ததாய் வளர்ச்சி பெற்றுள்ளது. தையற்கலை, கூடை பின்னுதல் போன்றவை அதிகமான வருவாயை ஈட்டித்தரும் பொழுதுபோக்கு நிகழ்வுகளாக உள்ளன.

**தொழில்கள்:**

அற்றைநாள் ஆயர்களின் வாழ்வியலானது கால்நடை பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டது. காடும் காடுசார்ந்த விளைநிலப்பகுதியில் வாழ்ந்த சங்ககால ஆயர்கள் கால்நடை வளர்ப்பையும், சிறுபயிர் உற்பத்தியையும் மேற்கொண்டனர். இற்றைநாள் ஆயர்கள் தொழில்முறையில் பெரும் வளர்ச்சியைக் கண்டுள்ளனர். இவர்கள் கால்நடை பராமரிப்பு, அயல்நாடுகளில் வேலைபுரிதல், வட்டித்தொழில், சுயதொழில் (சிறுதொழில்கள்) போன்றவற்றின் மூலம் தங்களின் வாழ்வாதாரத்தைப் பெருக்கிக் கொள்கின்றனர்.

**கால்நடை பராமரிப்பு:**

காரைக்குடி வட்டார கிராமங்களில் வாழும் ஆயர்களிடம் கால்நடை பராமரிப்பு இன்றளவும் காணப்படுகின்றது. கால்நடைகளிடமிருந்து பெறப்படும் பால், மோர், தயிர், வெண்ணெய், நெய் முதலிய பால் பொருள்கள் ஆயர்களால் விற்பனை செய்யப்படுகின்றது. அரண்மனைப்பட்டியில் வாழும் ஆயர்கள் பால் விற்பதில்லை. மோர் விற்கின்றனர். பசுவின் பால் கன்றுக்கு வேண்டியது போக மிஞ்சிய பாலில் உறை ஊற்றி மோராக்கி விற்பனை செய்கின்றனர். "பசுவின் பாலை விற்பது பாவம் எனவும் சாமிக்கு ஆகாது எனவும் கருதுகின்றனர்."[46] வசதிவாய்ப்புகளுக்காக கிராமங்களை விட்டு காரைக்குடிக்கு குடியேறியிருக்கும் ஆயர்களின் வயதான பெற்றோர்கள் கிராமங்களில் கால்நடைப் பராமரிப்பை மேற்கொள்கின்றனர்.

**அயல்நாடுகளில் வேலைபுரிதல்:**

காரைக்குடியில் படித்து தகுதியை வளர்த்துக் கொண்ட ஆயர்களில் பெரும்பாலானோர் அயல்நாடுகளில் பணிபுரிகின்றனர். "இந்தியப் பொருளாதாரத்தின் பணமதிப்பானது அயல்நாடுகளைவிடக் குறைவாக உள்ளதே இதற்குக் காரணம் ஆகும்."[47] காரைக்குடி வட்டார ஆயர்கள் பெருமளவில் தங்களின் பெண்களுக்கு அயல்நாட்டில் வேலைபார்க்கும் ஆண்மகனையே தேர்வு செய்கின்றனர்.

**வட்டித்தொழில்:**

நகை அடகு பிடித்துக் கொண்டு அதற்கான பணத்தைத் தருவதும், வீட்டுப் பத்திரம் முதலான மதிப்புமிக்க பொருட்களை அடகுப் பொருளாக வைத்துக்கொண்டு வட்டிக்குப் பணம் தருவதும் இவர்களுக்கு முதன்மைத் தொழிலாய் உள்ளது. "நெடுங்குடி அருகே உள்ள வட்டியாண்டவர் கோவிலில் வழிபாடு செய்வதும் இவர்களின் நம்பிக்கையாக உள்ளது."[48]

**சுயதொழில்கள்:**

அயல்நாடுகளில் சென்று வேலை பார்க்கும் ஆயர்கள் இந்தியாவில் மற்றவர்களுக்குக் கீழே வேலை பார்ப்பதை மரியாதைக் குறைவாக எண்ணுகின்றனர். ஆதலால் சில்வர் பட்டறை உள்ளிட்ட லாபம் தரும் தொழில்களை

மேற்கொண்டுள்ளனர். “சில்வர் பாத்திரமாக வாங்கி விற்பதைக் காட்டிலும் தகடுகளை வாங்கி பட்டறையில் பாத்திரமாக வார்த்து விற்பது லாபத்தைத் தரும். பாத்திரமும் விரிசல் ஏற்படாமல் உழைக்கும் என்கின்றார் பட்டறை வைத்திருப்பவர்.”[49] வங்கி உள்ளிட்ட அரசு நிறுவனங்களில் பணிபுரிவதற்காக படித்த மாணவர்கள் போட்டித் தேர்வுகளையும் எழுதுகின்றனர்.

**விவசாயம்:**

“காரைக்குடியின் சுற்றுப்புற கிராமங்களில் ஆயர்களால் இன்றளவும் விவசாயம் மேற்கொள்ளப்படுகின்றது.”[50] நெல் முதன்மைப்பயிராக வயல்களில் விளைவிக்கப் படுகின்றது. வீட்டினை ஒட்டினாற்போல் அமைந்திருக்கும் கொல்லைப் புறங்களில் உளுந்து, பச்சைப்பயிறு உள்ளிட்ட தானிய வகைகளையும் வெண்டை, கத்தரிக்காய் உள்ளிட்ட காய்கறிகளையும் பயிரிடுகின்றனர்.

**பெண்களின் தொழில்:**

பெண்கள் கிராமப்புறங்களில் சங்ககால ஆயர்களைப் போன்றே தயிர் கடைதல், மோர்விற்றல், கன்றுகளைப் பராமரித்தல் உள்ளிட்ட வேலைகளை மேற்கொள்கின்றனர். ஆனால் மோர், தயிர் வேண்டுபவர்கள் வீட்டிற்கே வந்து பெற்றுக் கொள்கின்றனர். வேறு ஊர்களுக்கோ, வீடுகளுக்கோ சென்று விற்கும் வழக்கம் தற்போது இல்லை. சங்ககால ஆயர்குலப் பெண்களும் பொருளாதாரம் வணிகத்தில் தெளிந்த அறிவு பெற்றவர்களாய் விளங்கியுள்ளனர். “இன்றைய காரைக்குடி வட்டார பெண்கள் கல்வியறிவில் சிறந்து விளங்குகின்றனர். கல்லூரிப்படிப்பை முடித்ததுமே அரசுப் பணிகளிலும் முன்னணி நிறுவனங்களிலும் பணிபுரிகின்றனர்.”[51] மகளிர் சுய உதவிக் குழுக்களின் மூலமும் பெண்கள் தேவையான மூலாதாரத்தைப் பெற்றுக்கொண்டு பொருளாதார வளர்ச்சிக்கான தொழில்களை மேற்கொண்டுள்ளனர். இணையதளம் வழியாக தொழிலை சுலபமாக முடிக்கும் நுட்பம் இன்று பெரிதும் வளர்ந்துள்ளது. தொழில்துறையில் காரைக்குடி வட்டார ஆயர்கள் மேல்நிலையில் உள்ளனர்.

**தொகுப்புரை:**

- ❖ அற்றைநாள் ஆயர்களின் வகைபாடு அவர்கள் மேற்கொண்ட தொழிலின் அடிப்படையில் அமைந்தது. இற்றைநாள் ஆயர்களின் வகைபாடு அவர்களின் பழக்க வழக்கங்களினால் அமைகின்றது என்பதை அறியமுடிகின்றது.

- ❖ காரைக்குடி வட்டாரத்தில் வாழும் ஆயர்களின் பிரிவுகள் சமூகத்தினரால் மேல்நிலையில் வைத்து மதிக்கப்படுவதை உணரமுடிகின்றது.

- ❖ ஆயர் இடையர், கோனார், யாதவர் என்ற சொல் வழக்குகள் இன்றைய சமூகத்தினரிடம் பரவிக் காணப்படுவதை அறியமுடிகின்றது.

- ❖ ஆயர் என்பதை குலப்பெயராகவும், இடையர், கோனார் என்பதை சாதிப்பெயராகவும் கூறிக்கொள்வதை அறியமுடிகின்றது.

- ❖ ஆரம்பகாலக் கட்டத்தில் சமூகத்தில் கல்வியறிவில் பின்தங்கியிருந்த ஆயர்கள் தொழில் ஒற்றுமை காரணமாக வடமாநிலங்களில் காணப்பட்ட யாதவர் எனும் சாதிப்பெயரை தங்களின் அடையாளமாகக் கொண்டனர் என்பதை உணரமுடிகின்றது.

- ❖ ஆயர் என்பது நிரைமேய்ப்பார் என்றும் ஆயன் என்பது குலம் பற்றி வருவது என்றும் உணரப்படுகின்றது.

- ❖ கால்நடைக் கூட்டமாகிய கிடைக்கு உரியவர் இடையர் என்றும் செல்வம், வாழ்க்கை நிலை ஆகியவற்றில் முதலாளிகளுக்கும் கடையருக்கும் இடைப்பட்டவர் இடையர் என்றும் பெயர் பெற்றமையை அறியமுடிகின்றது.

- ❖ காரைக்குடி வட்டார ஆயர்கள் கல்லுக்கட்டி இடையர்கள் என்றழைக்கப்படுகின்றனர். இவர்களின் தாலியில் வெள்ளைப் பளிங்குக்கல் கொண்டு கட்டும் பழக்கத்தால் கல்லுக்கட்டி எனப் பெயர் பெற்றிருக்கின்றனர் என்பதை அறியமுடிகின்றது.

- ❖ காரைக்குடி வட்டாரத்தில் வாழும் கல்லுக்கட்டி இடையர்கள் 16 கரைகளை உடையவர்கள் எனவும் 14 கரைகளை உடையவர்கள் எனவும் குறிப்பிடப்படுகின்றனர்.

- 1911 ஆம் ஆண்டு கல்லுக்கட்டி இடையர்களின் கரைகள் குறித்து வழக்கு நடந்துள்ளது. இவ்வழக்கிற்கு தீர்ப்பு எழுதிய ஸ்ரீரெங்கம் திருமாளிகை கோவஸ்திரி ஸ்ரீ ஆயனார் ஸ்வாமிகள் கல்லுக்கட்டி ஆயர்கள் 14 கரைகளே என்று உறுதிபடுத்தியுள்ளதை அறியமுடிகின்றது.

- ஒன்பது கோவிலாரும் ஐந்து கோவிலாரும் சேர்ந்து 14 கோவில்களைக் கும்பிடுவோரே 14 கரைகளைக் கொண்ட கல்லுக்கட்டி ஆயர்கள் என்பதை உணரமுடிகின்றது.

- சாதியத் தொன்மங்களைப் பற்றிக் குறிப்பிடும் எட்கர்தர்ஸ்டன் ஆயர் பிரிவினரில் கல்கட்டி பாசிபிரிவினர் குறித்துக் கூறியுள்ள பெயர்க் காரணம் இற்றைநாள் ஆயர்களின் பெயர்க் காரணத்தோடு ஒத்துப் போவதை உணரமுடிகின்றது.

- இற்றைநாள் ஆயர்களின் திருமணவாழ்க்கை களவை விட கற்பை சார்ந்தே அமைகின்றது. களவில் காதல் என்பது மனங்களைப் பார்த்து சேர்த்து வைக்கப்படுவதில்லை. சாதியையும் பொருளாதார வசதியையும் வைத்தே சேர்த்து வைக்கப்படுகின்றது.

- மேலும் இவர்களின் திருமண உறவில் இணையும் வாழ்க்கைத்துணையைத் தேர்வு செய்வதில் தாய்மாமன் மகள், அத்தை மகள், அக்காள் மகள் முதலிய உறவுகளுக்கு முன்னுரிமை தரப்படுவதை அறியமுடிகின்றது.

- திருமணத்திற்குப் பெண்பார்ப்பதில் இருந்து பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து நிகழ்வுகளுக்கும் தாய்மாமன் உறவு முக்கியமானதாய் அமைவதை உணரமுடிகின்றது.

- இற்றைநாள் ஆயர்களின் திருமணமேடைகளில் அரசாணிப்பானைகள் அமைப்பதுடன் கரைப்பாக்கு வைப்பது மற்ற சமூகத்தினரிடமிருந்து மாறுபட்டதாய் காணப்படுகின்றது.

❖ ஏறுதழுவுதல் என்றழைக்கப்பட்ட காளை அடக்குதல் இன்று மஞ்சிவிரட்டு, சல்லிக்கட்டு எனும் பெயர்களில் பொழுதுபோக்கும் நிகழ்வாக மட்டுமே நடைபெறுவதை அறியமுடிகின்றது.

❖ மஞ்சிவிரட்டிற்கு பாக்கு வைத்து அழைத்தால் மட்டுமே மற்ற ஊர் காளைகள் கலந்து கொள்கின்றன. காளைகளை அடக்கும் வீரர்களுக்குப் பணமும் பரிசுப் பொருள்களும் வழங்கப்படுவதை அறியமுடிகின்றது.

❖ அற்றைநாள் ஆயர்களைப் போன்றே இற்றைநாள் ஆயர்களிடமும் விருந்தோம்பல் பண்பாடு சிறந்து காணப்படுகின்றது. விருந்துகளில் இடம்பெறும் உணவு வகைகளும் சுவைமிக்கதாய் அமைவதை அறியமுடிகின்றது.

❖ மது அருந்துவது விருந்துகளில் முக்கியக் கூறாக அமைந்துள்ளது. அசைவ உணவு விருந்து என்றாலே மதுவிற்கு முதலிடம் தரப்படுவதை அறியமுடிகின்றது.

❖ இற்றைநாள் ஆயர்களிடமும் நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் நிறைந்து காணப்படுகின்றது.

❖ காரைக்குடி வட்டார ஆயர்களிடம் கிருட்டிணஜெயந்தி விழாவும் முத்துமாரியம்மன் கோவில் திருவிழாவும் பெரிய அளவில் கொண்டாடப்பட்டு வருவதை அறியமுடிகின்றது.

❖ இல்லுறை வழிபாடு, அமாவாசை வழிபாடு, வைகுண்ட ஏகாதசி வழிபாடு உள்ளிட்ட வழிபாடுகளை இற்றைநாள் ஆயர்கள் மேற்கொள்வதை அறியமுடிகின்றது.

❖ சகுனம் பார்த்தல், காக்கை கரையும் ஒலி, கண்துடித்தல் முதலான நம்பிக்கைகள் இன்றளவும் நிலவுவதைக் காணமுடிகின்றது.

❖ பிறப்பு முதல் இறப்பு வரையிலான சடங்குமுறைகள் இற்றைநாள் ஆயர்களின் பழக்க வழக்கங்களைப் புலப்படுத்துகின்றன.

- இன்றுள்ள ஆயர்குலப் பெண்களிடம் ஒப்பனைநயம் நிறைந்து காணப்படுகின்றது. இவர்கள் தங்களை அழகுபடுத்திக் கொள்வதில் விலையுயர்ந்த அணிகலன்களையும், வாசனை மிகுந்த மலர்களையும் பயன்படுத்துவதைக் காணமுடிகின்றது.

- இன்றைய காலக்கட்டத்தில் ஆயர்களிடம் பொழுதுபோக்குகள் மிகுந்துள்ளன. திரையரங்குகள், விளையாட்டு மைதானங்கள் என பொழுதுபோக்கும் இடங்கள் இன்று நிறைந்துள்ளன என்பதும் புலனாகின்றது.

- ஆயர்குலப் பெண்களின் தையல் கலை, கூடை பின்னுதல் முதலான பொழுது போக்குகள் வருவாய் ஈட்டித்தரும் தொழில்முறையாக அமைவதைக் காணமுடிகின்றது.

- இன்றைய ஆயர்களின் வாழ்வியலானது கால்நடைப் பொருளாதாரத்தை மட்டும் நம்பி இல்லை. கிராமங்களில் உள்ள ஆயர்களே கால்நடைப் பராமரிப்பை மேற்கொண்டு வருகின்றனர். அதுவும் குறைவான எண்ணிக்கையிலான குடும்பங்களே கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளன என்பதும் புலனாகின்றது.

- இற்றைநாள் ஆயர்கள் வெளிநாட்டு வேலை, அரசுப்பணி, சுயதொழில் முதலான பல்துறை தொழில்களின் மூலம் தங்களின் வாழ்வாதாரத்தை வளர்த்துக் கொண்டுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. பக்தவத்சலபாரதி, தமிழர் மானிடவியல், ப.108.
2. தொல்.பொருள்.இளம்பூரணர் உரை, ப.20.
3. கலித்தொகை, 103:32-49.
4. சி.ஈ.இராமச்சந்திரன், சங்ககால வரலாறு, ப.166.
5. மொ.அ.துரைஅரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், ப.336.
6. சக்திதாசன் சுப்பிரமணியன், குறுந்தொகைக் காட்சிகள், ப.239.
7. பக்தவத்சலபாரதி, தமிழகத்தில் நாடோடிகள், ப.208.
8. எட்கர் தர்ஸ்டன், தென்னிந்திய குலங்களும் குடிகளும், பக்.458-461.
9. பக்தவத்சலபாரதி, தமிழகத்தில் நாடோடிகள், ப.208.
10. மேற்கோள்: எட்கர் தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் (மதுரை மாவட்டக் கையேடு)
11. மேற்கோள்: எட்கர் தர்ஸ்டன் தென்னிந்திய குலங்களும் குடிகளும், சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, 1901.
12. ஸ்ரீரெங்கம் திருமாளிகை கோவஸ்திரி ஸ்ரீ ஆயனார் ஸ்வாமிகளால் கல்லுக்கட்டி பதிநாலுகரை கோபாலர்களுக்கு தீர்மானிக்கப்பெற்ற தீர்ப்பு, பக்.1-2.
13. மேலது., பக்.2-3.
14. மேலது., பக்.20-21.
15. மேலது., ப.22.
16. மறைமலை அடிகள், தமிழர் மதம், பக்.77-78.
17. மேலது., பக்.256-257.
18. பக்தவத்சலபாரதி, தமிழகத்தில் நாடோடிகள், ப.288.
19. நேர்காணல்: சகுந்தலா நாராயணன், நாள்:29.11.2017, நேரம்:பிற்பகல் 3.00 மணி.
20. நேர்காணல்: லெட்சுமி வீரப்பன், நாள்: 06.12.2017, நேரம்: பிற்பகல் 2.00 மணி.
21. நேர்காணல்: பெரியசாமி கலியப்பெருமாள், நாள்: 03.01.2018, நேரம்: காலை 10.00 மணி.

22. நேர்காணல்: செல்வி பிரபு, நாள்: 26.01.2018, நேரம்: மாலை 5.00 மணி.

23. நேர்காணல்: கல்யாணமோகன், நாள்: 26.01.2018, நேரம்: மாலை 6.00 மணி.

24. நேர்காணல்: வள்ளி வெள்ளையன், நாள்: 27.01.2018, நேரம்: காலை 11.00 மணி.

25. ஜெ.அப்பாட் தமிழில் ச.சரவணன் இந்தியச் சடங்குகளும் நம்பிக்கைகளும் (இரண்டாம் தொகுதி), ப.118.

26. மேலது., முதல் தொகுதி, ப.24.

27. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.104.

28. மேலது., ப.104.

29. ஸ்ரீரெங்கம் திருமாளிகை கோவஸ்திரி ஸ்ரீ ஆயனார்ஸ்வாமிகளால் தீர்மானிக்கப்பெற்ற தீர்ப்பு, ப.16-17.

30. நேர்காணல்:கீதாராணி கார்த்திகேயன், நாள்:01.01.2018, நேரம்:காலை 11.00 மணி.

31. நேர்காணல்:கல்யாணி ரெங்கசாமி, நாள்:05.02.2018, நேரம்:மாலை 5.00 மணி.

32. மறைமலை அடிகள், தமிழர் மதம், ப.78.

33. பக்தவத்சலபாரதி (தொ.ஆ.), தமிழகத்தில் நாடோடிகள், ப.289.

34. கலைக்களஞ்சியம், தொகுதி-IV, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1956, பக்.517-518.

35. ஆ.முத்தையா, சல்லிக்கட்டு, பக்.18-19.

36. Tamil Lexican. Vol.III, Part-1, Madras, 1928, P.1323.

37. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.608.

38. கலைக்களஞ்சியம், தொகுதி-IV, ப.517.

39. முனைவர் முத்தையா, சல்லிக்கட்டு, ப.20.

40. Tamil Lexican. Vol.III, Part-1, Madras, 1928, P.1326.

41. மா.முருகன், வீரன் அழகுமுத்துக்கோன் வரலாறு, ப.2.

42. மேலது., ப.4.

43. பேரா.சூ.அ.செல்வநாதன், மதங்களும் மனித ஒற்றுமையும், ப.17.

44. மேலது., ப.16.

45. நேர்காணல்: உமாதேவி பாண்டி, நாள்: 24.02.2018, நேரம்: மாலை 6.00 மணி.

46. நேர்காணல்: கார்த்திகா சிவச்சந்திரன், நாள்:27.03.2018, நேரம்:காலை 11.00 மணி.

47. நேர்காணல்: ரகுபதி நாராயணன், நாள்: 28.12.2019, நேரம்: மாலை 5.00 மணி.

48. நேர்காணல்: செல்வக்குமார் துரை, நாள்: 01.01.2020, நேரம்: காலை 11.00 மணி.

49. கலி.வெள்ளைச்சாமி (எ) துரை, முத்துப்பட்டணம், காரைக்குடி. (சில்வர் பட்டறை வைத்திருப்பவர்) நாள்:20.06.2018, நேரம்: மாலை 5.00 மணி.

50. நேர்காணல்: செல்லம் சுப்பையா, நாள்: 10.02.2020, நேரம்: மாலை 3.00 மணி.

51. நேர்காணல்: வீரஜெயம் நாகராஜ், நாள்: 22.03.2020, நேரம்: காலை 10.00 மணி.

## முடிவுரை

ஆயர் வாழ்வியல் (அற்றைநாள் நோக்கும் இற்றைநாள் போக்கும்) எனும் தலைப்பின்கீழ் மேற்கொள்ளப்பெற்ற ஆய்வின்வழி பெறப்பட்ட முடிவுகள் கீழ்க்கண்டவாறு தொகுத்துத் தரப்படுகின்றன.

‘வாழ்க்கை வாழ்வதற்கே’ என்ற நேர்த்தியான கொள்கையைக் கொண்ட பழந்தமிழர் இயற்கையோடு இணைந்து பேரின்பப் பெருவாழ்வு கண்டனர்.

உணவிற்காக வேட்டையாடிப் பகுத்துண்டு வாழ்ந்த இனக்குழு சமுதாயம் மறையத் தொடங்கிய காலக்கட்டத்தில் தோன்றிய சங்க இலக்கியப் பாடல்களை அகம் என்றும் புறம் என்றும் இரண்டாகப் பாகுபாடு செய்தனர் தமிழ் மரபினர்.

பழந்தமிழ் மக்களின் வாழ்வியல் நிகழ்வுகளை சங்க இலக்கியங்கள் பிரதிபலிக்கின்றன. ‘இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்’ என்பது கோட்பாடு. சங்கத் தமிழரின் வாழ்வியலுக்கும் இலக்கணம் வகுத்துள்ளது தொல்காப்பியம்.

தொல்காப்பியத்தின் மூன்றாவது அதிகாரமான பொருளதிகாரம் பழந்தமிழரின் அகவாழ்க்கையையும் புறவாழ்க்கையையும் விளக்குவதாய் அமைந்துள்ளது.

அகவாழ்வியலை அகத்திணை வாயிலாகவும் புறவாழ்வியலை புறத்திணை வாயிலாகவும் அறியமுடிகின்றது.

தொல்காப்பியர் கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை பெருந்திணை என அகத்திணையை ஏழாகவும், வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என புறத்திணையை ஏழாகவும் பகுத்துள்ளார்.

தொல்காப்பியரின் திணைக்கோட்பாடானது அகத்தில் பெண்ணாசையையும், புறத்தில் மண்ணாசையையும் கொண்டு அமைவதை அறியமுடிகின்றது.

அகத்திணைகள் ஏழனுள் நடுவில் அமைந்த முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்தும் ‘அன்பின் ஐந்திணை’ எனப்படுகின்றது.

பாலைத்திணை தவிர மற்ற நான்கு திணைகளும் தனக்கெனத் தனிநிலம் பெற்றவையாக உள்ளன.

ஒவ்வொரு நிலத்தின் இயற்கையையும், அங்கு வாழும் மக்களின் வாழ்வியலையும் விளக்க முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனும் மூன்று அகத்திணைக் கூறுகளைத் தொகுத்துள்ளார் தொல்காப்பியர்.

மனிதனின் ஒழுக்க நிகழ்வுக்குக் காரணமான நிலத்தையும் பொழுதையும் முதற்பொருளாகவும், தெய்வம், உணவு, மரம், பறவை, விலங்கு உள்ளிட்டவையை கருப்பொருளாகவும், ஒழுக்கங்களை உரிப்பொருளாகவும் சுட்டியுள்ளார் தொல்காப்பியர்.

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் முறையே காடு, மலை, வயல், கடல் என நிலப்பகுப்பு காணப்படுகின்றது. ஒவ்வொரு நிலத்திற்கும் பெரும்பொழுது, சிறுபொழுது என இருவகைப் பொழுதுகள் குறிக்கப் பெறுகின்றன.

ஓர் ஆண்டின் பன்னிரண்டு மாதங்களை இரண்டிரண்டு மாதங்களாகப் பிரித்து கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என ஆறு பெரும்பொழுதுகள் பிரிக்கப்பட்டுள்ளன.

ஒரு நாளின் இருபத்துநான்கு மணி நேரங்களை நான்கு நான்கு மணி நேரங்களாகப் பிரித்து மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல், எற்பாடு என ஆறு சிறுபொழுதுகள் பிரிக்கப்பட்டுள்ளன.

முல்லை நிலத்திற்கான பெரும்பொழுது: கார்காலம், சிறுபொழுது: மாலை, குறிஞ்சித் திணைக்கு பெரும்பொழுது: கூதிர், முன்பனிக்காலம் சிறுபொழுது: யாமம், மருதத்திணைக்கு பெரும்பொழுதுகள்: ஆறும், சிறுபொழுது: வைகறை, நெய்தல் திணைக்கு பெரும்பொழுதுகள்: ஆறும், சிறுபொழுது: எற்பாடு, பாலைத்திணைக்கு பெரும்பொழுதுகள்: இளவேனில், முதுவேனில், பின்பனிக்காலம், சிறுபொழுது: நண்பகல் எனவும் அறியப்படுகின்றன.

ஒவ்வொரு நிலத்திற்கும் ஏற்ற தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், யாழ் முதலியவை கருப்பொருளாகக் கண்டறியப்படுகின்றன.

முல்லைநிலத்திற்கு ஆற்றியிருத்தலும், குறிஞ்சி நிலத்திற்குப் புணர்தலும், மருதநிலத்திற்கு ஊடலும், நெய்தல் நிலத்திற்கு இரங்கலும், பாலை நிலத்திற்குப் பிரிதலும் உரிப்பொருளாகப் பகுக்கப்பட்டுள்ளன.

பாலை என்பது வழிநிலமே, வாழ்நிலம் அன்று என்பதையும் உணரமுடிகின்றது. தலைவியைப் பிரிந்து தலைவன் சென்ற கொடிய மணல் நிலப்பகுதியே பாலை எனச் சுட்டப்பெறுகின்றது.

ஒவ்வொரு நிலத்திற்குமுரிய முதற்பொருள், கருப்பொருள். உரிப்பொருள் சார்ந்த மக்களின் வாழ்வியல் செறிந்து அமைந்திருந்ததை அறியமுடிகின்றது.

பழந்தமிழர் வாழ்ந்த நிலப்பகுப்புகளில் முல்லை நிலத்தில் வாழ்ந்த ஆயர் சமுதாயம் அற்றைநாளும் இற்றைநாளும் அமைந்திருக்கும் விதத்தை அறியமுடிகின்றது.

தொல்காப்பியம் முல்லை நிலத்தினரை 'ஆயர்', 'வேட்டுவர்', 'குறும்பொறைநாடன்' எனச் சுட்டுகின்றது. சங்க இலக்கியம் மாட்டினத்து ஆயர், ஆட்டினத்து ஆயர், எருதினத்து ஆயர் என கால்நடை வளர்ப்பினை அடிப்படையாக வைத்துப் பிரித்துக் காட்டுகின்றது. பசுவினத்து ஆயர் சமூகத்தினரால் மற்ற வகையினரைக் காட்டிலும் மதிக்கப்படுகின்றனர்.

இற்றைநாள் ஆயரோ 'கோனார்', 'இடையர்', 'யாதவா' எனப் பல பெயர்களால் சுட்டப்படுகின்றார்கள். கால்நடை வளர்ப்பினை அனைத்துச் சமூகத்தினரும் மேற்கொள்வதால், தொழிலடிப்படையில் வகைப்படுத்தப் படவில்லை. மாறாக ஆயர்கள் மேற்கொள்ளும் பழக்க வழக்கத்தினால் வகைப்படுத்தப்படுகின்றனர்.

கல்கட்டி, நார்கட்டி, பெண்டுக்குமெக்கி, இடையர் போன்றவை பழக்க வழக்கத்தினால் வகைப்படுத்தப்பட்டவையே. காரைக்குடி வட்டாரத்தில் காணப்படும் ஆயர்கள் கல்லுக்கட்டி இடையர் எனப்படுகின்றனர்.

